# அகத்தியர்
# வைத்திய சிந்தாமணி



இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை
சென்னை - 600 106.

specimen

தமிழ் மருத்துவ நூல் வரிசை - 16

# அகத்தியர் வைத்திய சிந்தாமணி

(ஓலைச்சுவடியினின்று பதிப்பிக்கப்பட்ட நூல்)

வெளியீடு :

**சித்த மருத்துவ நூல் வெளியீட்டுப் பிரிவு**

**இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை**

**சென்னை - 600 106**

**2008**

## பதிப்புத் தகவல்


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | அகத்தியர் வைத்திய சிந்தாமணி<br>(தமிழ் மருத்துவ நூல் வரிசை - 16) |
| ஆசிரியர் | : | அகத்திய மாமுனிவர் |
| பதிப்பு | : | சித்த மருத்துவ நூல் வெளியீட்டுப் பிரிவு<br>இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை<br>சென்னை - 106 |
| பதிப்புரிமை | : | தமிழ் நாட்டரசு |
| பொருள் | : | சித்த மருத்துவம் |
| பதிப்பாண்டு | : | முதற்பதிப்பு 2008 |
| பக்கங்கள் | : | xvi + 260 = 276 |
| படிகள் | : | 1000 |
| தாள் அளவு | : | 1 × 8 டெம்மி |
| அச்சுப் புள்ளி | : | 12 புள்ளி |
| கட்டமைப்பு | : | சாதாரண அட்டைக்கட்டு |
| விலை | : | ரூ. 80.00 |

அச்சிட்டோர் : யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ்
189 (101-D), ராயப்பேட்டை நெடுஞ்சாலை
லஸ், மயிலாப்பூர், சென்னை - 600 004.
✆ : 24661807, 24987562

**இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை,**
**சென்னை - 600 106.**

**சித்த மருத்துவ நூல் வெளியீட்டுப் பிரிவு**

## நூலாக்கப் பணிக்குழு

பதிப்பாசிரியர்
**முனைவர் மரு. ஆனைவாரி ஆனந்தன்,** பிஎச்.டி.
சிறப்பு அலுவலர் (மொழிபெயர்ப்பு)

கூர்ந்தாய்வு மருத்துவ அலுவலர்
**மரு. பி.ஆர். சகுந்தலா,** எம்.டி. (சி)

உதவி பதிப்பாசியர்கள்
**திரு. த. அழகப்பராசு,** M.A., M.A., M.L.I.S., M.Phil., B.Ed.
**திருமதி. செ.இரா. பிரசன்னா,** M.A., M.Phil., B.Ed.,

சுவடி நகலெடுப்போர்
**திரு. வெ. சாரங்கபாணி**
**திருமதி. த. லெட்சுமி**
**திருமதி. நா. பாக்கியசுந்தரி,** B.A.
**திரு. த. சுபாஷ் சந்திரபோஸ்**

**ஜி.ஏ. ராஜ்குமார்,** இ.ஆ.ப.,
சிறப்பு ஆணையர்

இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி
ஆணையரகம், சென்னை - 600 106.

# வாழ்த்துரை

நமது இயக்கக ஓலைச் சுவடியிலிருந்து வெளிவரும் **'அகத்தியர் வைத்திய சிந்தாமணி'** எனும் இந்நூல் தமிழ் மருத்துவ நூல் வரிசையில் 16-வது நூலாக வெளியிடப் பட்டுள்ளது.

ஓலைச்சுவடி நூல்கள் அடுத்தடுத்து வெளியிடப்படுவது மகிழ்ச்சிக்குரியது. இப்பணியைச் செவ்வனே மேற்கொண்டு வரும் இணை இயக்குநர், தனி அலுவலர் (மொழிபெயர்ப்பு), ஆய்வு மருத்துவ அலுவலர் (சித்தா), தமிழ்ப் புலவர்கள், சுவடி நகலெடுப்போர் அனைவர்க்கும் எனது பாராட்டுதல்கள்.

நூலினை மருத்துவ கோணத்தில் சீர்செய்தளித்த மரு. சி. இராமலெட்சுமியம்மாள், மரு.மு. கிருஷ்ணவேணி இருவர்க்கும் எனது வாழ்த்துகள்.

*17.04.2008*

**ஜி.ஏ. ராஜ்குமார்**

# பதிப்புரை

ஓலைச் சுவடியினின்றும் முதன்முதலாகப் பதிப்பிக்கப் படும் **அகத்தியர் வைத்திய சிந்தாமணி** எனும் நூல் அகத்தியரால் எழுதப்பட்டதில்லை. நல்ல பெயர் கிடைப்பதற் காகவும், அங்கீகாரத்திற்காகவும் பின்னர் வந்த யாரோ ஒருவர் அகத்தியர் பெயரில் எழுதிவிட்டார் போலும். இதில் பயின்றுவரும் நடையானது இந்நூல் பிற்காலத்தது என்பதைப் பறைசாற்றும்.

சுரசம், சாறு, குடிநீர், கற்கம் என்ற மருந்துகளின் வாழ்நாள் அடிப்படையில் நூல் அமையவில்லை. செந்தூரங்கள், பற்பங்கள், நெய் போன்ற மருந்துகளின் தொகுப்பாகவும் நூல் அமையவில்லை. நோய்களின் அடிப்படையிலும் நூல் அமையவில்லை.

ஆசிரியர் தான் நினைத்த ஏதோ ஒருவகையில் 160-க்கும் மேற்பட்ட தலைப்புகளில் நூலை அமைத்துள்ளார். மருந்தின் பெயர்களைக் குறிப்பனவாக காந்தச் செந்தூரம், கொம்மட்டி, இளகம், தாமிரச் செந்தூரம் எனச் சில தலைப்புகளும், நோயோடு மருந்தின் பெயரைச் சொல்லும் மந்தாரக் காசத் தைலம், பித்த காமாலை நெய், கிராணி உருண்டை என்பன போன்ற சில தலைப்புகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

எழுத்துகள் எழுதிய முறையும், பிற்காலத்திய சொல்லாட்சியும், பாடல்களின் அமைப்பும் இந்நூல் பிற்காலப்படைப்பு என்பதை உணர்த்தும்.

பாடல்கள் அந்தாதி முறையில் அமைந்துள்ளன. பாடல்கள் அறுசீர், எண்சீர் விருத்தங்களாகக் காணப்படுகின்றன. ஆங்காங்கே சில பாடல்கள் சீர் அளவில் குறைந்தும், மிகுந்தும் இருக்கின்றன. பாடல்கள் பலவற்றில் சீர்விடுபட்டும், இன்னும் சில வரிகளே விடுபட்டும் காணப்படுகின்றன.

பலம், சேர், படி போன்ற முற்கால அளவைகள் யாவும் மெட்ரிக் முறை அளவைகளாக மாற்றப்பட்டுள்ளன. அவ் வகையில் உரி, நாழி, படி மூன்றும் 1.300 மி.லி. ஆகவும், கழஞ்சு 5 கி. ஆகவும், சேர் 280 கி. ஆகவும், பணவெடை 488 மி.கி. ஆகவும், பலம் 35 கி. ஆகவும், வராகன் 4 கி. ஆகவும், பதக்கு 10.7 லி., தூணி 21.5 லி. ஆகவும் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன.

பரவலாக எல்லா நோய்களுக்குமான மருந்துகளைக் கூறியுள்ளார் ஆசிரியர். சில இடங்களில் ஒரே மருந்து பல நோய்களைப் போக்குவனவாகச் சொல்லியுள்ளார் இவர். மேலும் இந்நூலாசிரியர் ஒரே ஒரு நோய்க்கு தனிமருந் தாகவும் தந்திருக்கிறார்.

சுவடியிலிருந்து நூலாகப் பதிப்பிக்கப்படும்போது எல்லாச் செய்திகளும், கருத்துகளும் முழுமை பெற்ற பின்னர் பதிப்பிக்கப்பட்டுள்ளது என்று எண்ணவியலாது. சில இடங்களில் ஆசிரியர் சொல்லவந்த கருத்துகள் எல்லா வற்றையும் நம்மால் முழுமையும் உணர்ந்து கொள்ள இயல வில்லை. எனினும், அவ்வாறுள்ள இடங்களை நீக்கி விட்டால் அவற்றைப் படித்துணரும் வாய்ப்பு எவருக்கும் கிடைக்காமல் போய்விடும். படிப்பவர்களிடமிருந்து திருத்தங்கள் செய்வதற்கு கருத்துகள் பெறப்பட்டால், இனிவரும் பதிப்புகளில் அவ்வாறான இடங்கள் திருத்தம் பெற வாய்ப்புண்டு என்பதாலும் அவற்றைப் பதிப்பித் துள்ளோம். விளக்கம் பெறவேண்டிய சொற்கள் (*) உடுக்குறி யிட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இந்நூல் ஓலைச்சுவடியினின்றும் எடுத்து எழுதப்பட்ட முதன் முதலில் அச்சேறும் சுவடி நூலாகும். அதில் பிழைகள் நேர்ந்திருப்பின் அவற்றைப் பொறுத்தருளி நூலின் குணங் கண்டு மக்கள் பயன்பெற வேண்டும். அவ்வாறான பிழை களைக் களைந்து இனிவரும் பதிப்புகளில் அவை செம்மை பெற மருத்துவர்களும் மற்றோரும் துணை நிற்பாராக.

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | திரிபுரை காலாக்கினிச் செந்தூரம் | 2 |
| 2. | காரீயச் செந்தூரம் | 11 |
| 3. | தாமிரச் செந்தூரம் | 13 |
| 4. | கருவங்கச் செந்தூரம் | 15 |
| 5. | காந்தச் செந்தூரம் | 17 |
| 6. | பச்சை நாவி | 18 |
| 7. | நாவல் நெய் | 23 |
| 8. | கோடாசூரிக் குளிகை | 25 |
| 9. | நெய் | 30 |
| 10. | கொம்மட்டி லேகியம் | 31 |
| 11. | கண்டாதி லேகியம் | 32 |
| 12. | மந்தாரக் காசத் தைலம் | 34 |
| 13. | கலிக்கம் | 37 |
| 14. | சூரணம் | 37 |
| 15. | மண்டூரக் குளிகை | 39 |
| 16. | பித்த காமாலை நெய் | 40 |
| 17. | சஞ்சீவிக் குளிகை | 42 |
| 18. | சோகை காமாலைக்குக் குளிகை | 51 |
| 19. | தாபசுரக் குளிகை | 51 |
| 20. | சுரத்துக்குக் கோரோசனைக் குளிகை | 52 |
| 21. | கிராணி உருண்டை | 54 |

22. கிராணி ஏழுக்கு அனுபானம் 55

23. சதாவேரி நெய் 56

24. செங்கழுநீர் நெய் 58

25. இருவேலிக் குளிகை 58

26. முசுமுசுக்கை நெய் 59

27. பித்தத்துக்குக் குடோரித் துவாலை 60

28. பித்தத்திற்கு மருந்து 62

29. பித்தத்திற்கு எண்ணெய் 63

30. உண்ணாக்குக்கு மருந்து 64

31. எண்ணெய் 64

32. பல்வலிக்குக் கொப்பளிப்பு நீர் 65

33. புண்ணுக்குக் கட்டு 66

34. புண்ணுக்குச் சீலை 67

35. புண்ணுக்கு மருந்து 67

36. ஒருதலை நோவுக்கு நசியம், பூச்சு 68

37. எலிக்கடிக்கு 69

38. இந்திரியக் கட்டுக்கு 70

39. கழல்வாதம், அண்டவாதம் நீங்க 71

40. வாதத்தினால் ஏற்பட்ட புண் புரைகளுக்கு,
வீக்கத்திற்கு மாத்திரை 71

41. களவு கர்ப்பம் நீக்க மருந்து 72

42. நீரடைப்புக்கு மருந்து 73

43. காதுத்தண்டு நோய்க்கு மருந்து 75

| | | |
|---|---|---|
| 44. | தூரமில்லாத பெண்களுக்கு | 76 |
| 45. | இந்திரியங் கட்டுவதற்கு மருந்து | 76 |
| 46. | பிள்ளை உண்டாக | 77 |
| 47. | கண்டமாலைக்கு | 80 |
| 48. | அந்தர வாய்வுக்கு மருந்து | 80 |
| 49. | அசுவகெந்தி சூரணம் | 82 |
| 50. | குளித்தைலம் | 84 |
| 51. | கர்ப்பவதிகளுக்குக் கழிச்சல் ஆனால் மருந்து | 85 |
| 52. | கர்ப்பவதிகளின் கிராணிக்கு மருந்து | 87 |
| 53. | முயல்கிருதம் | 89 |
| 54. | மூத்திரக் கிரிச்சரத்துக்கு மருந்து | 90 |
| 55. | நடுக்கு வாதத்துக்கு மருந்து நெய் | 90 |
| 56. | விப்புருதிக் கெண்ணெய் | 91 |
| 57. | கணைக்கு எண்ணெய் | 92 |
| 58. | இளைப்புக்கு நெய் | 93 |
| 59. | பல வியாதிக்கு மாத்திரை | 93 |
| 60. | ஏலாதிச் சூரணம் | 95 |
| 61. | அமுதாதிக் குளிகை | 96 |
| 62. | எருக்கலாதி சூரணம் | 108 |
| 63. | கண் புகைச்சலுக்கு எண்ணெய் | 110 |
| 64. | பித்த அதிசாரக் குறிகுணம் | 110 |
| 65. | அதிசாரத்துக்குச் சூரணம் | 111 |
| 66. | சுரக்குளிகை | 113 |

| | | |
|---|---|---|
| 67. | பல நோய்களுக்குக் குளிகை | 115 |
| 68. | கருங்கோழி லேகியம் | 116 |
| 69. | பஞ்சலவணக் குளிகை | 117 |
| 70. | ஆனந்தத் தாண்டவன் குளிகை | 119 |
| 71. | பரமானந்த வயிரவன் | 119 |
| 72. | நேர்வாளக் குளிகை | 124 |
| 73. | தாளக பற்பம் | 125 |
| 74. | சஞ்சீவிக் குளிகை | 126 |
| 75. | நாவி மாத்திரை | 129 |
| 76. | தாளகக் குளிகை | 131 |
| 77 | கெந்தி மாத்திரை | 132 |
| 78. | சுரக்குளிகைகள் | 133 |
| 79. | சூரணம் | 134 |
| 80. | சுரத்திற்குக் குளிகை | 135 |
| 81. | வெண்காரக் குளிகை | 137 |
| 82. | வாய்வு இருமல், சுரத்திற்கு மருந்து | 138 |
| 83. | இருமலுக்குச் சூரணம் | 138 |
| 84. | அனைத்துச் சுரத்திற்குக் குடிநீர் | 139 |
| 85. | தாக சுரத்திற்குக் குடிநீர் | 139 |
| 86. | சுரத்திற்குக் குடிநீர் வகைகள் | 140 |
| 87. | கெந்தகக் குளிகை | 147 |
| 88. | குளிகைகள் | 148 |
| 89. | வாய்வுக் குளிகை | 153 |

| | | |
|---|---|---|
| 90. | கிராணிக் குளிகைகள் | 154 |
| 91. | இரசக் குளிகை | 158 |
| 92. | வச்சிரானந்த வயிரவன் | 160 |
| 93. | நவக்கிரகம் | 162 |
| 94. | சுதாராட்சதக் குளிகை | 162 |
| 95. | எழு குளிகை | 163 |
| 96. | பலநோய் தீர்க்கும் குளிகை | 169 |
| 97. | சுரக் குளிகை | 178 |
| 98. | சனிக் குளிகை | 178 |
| 99. | கஸ்தூரி மாத்திரை | 179 |
| 100. | வாய்வு சன்னிக்குக் குழம்பு | 180 |
| 101. | அரப்பொடிச் செந்தூரம் | 181 |
| 102. | சாரணைவேர்ச் சூரணம் | 183 |
| 103. | மண்டூரச் செந்தூரச் சுத்தி | 184 |
| 104. | அரிதார பற்பம் | 185 |
| 105. | வாய்வுக்குச் சாரணைக் குடிநீர் | 189 |
| 106. | அரையாப்புக்குப் பூச்சு | 190 |
| 107. | கர்ப்பம் வீழ உருண்டை | 190 |
| 108. | சாரணை பற்பம் | 191 |
| 109. | கெந்தகச் சுத்தி | 192 |
| 110. | கெந்தகச் சுண்ணம் | 192 |
| 111. | கண், கை, கால் எரிவுக்கு நாகச் செந்தூரம் | 194 |
| 112. | வெள்ளீயச் செந்தூரம் | 196 |

| | | |
|---|---|---|
| 113. | கர்ப்பினிகளுக்கு | 197 |
| 114. | குடித்தபா லெடுத்தால் மருந்து | 199 |
| 115. | தாய்ப்பாலுண்ணாட்டால் மருந்து | 199 |
| 116. | மலசலம் அடைத்தால் மருந்து | 200 |
| 117. | குளிதோட குணம் | 201 |
| 118. | பெண்தோட குணம் | 201 |
| 119. | தோடத்திற்குக் குளிசம் | 202 |
| 120. | தோடத்திற்கு நெய் | 203 |
| 121. | தோடத்திற்குத் திலகம் | 203 |
| 122. | சாதிலிங்கக் குளிகை | 204 |
| 123. | சாதிலிங்கக் குழம்பு | 204 |
| 124. | சகலசன்னி, சுரதோஷத்துக் குளிகை | 205 |
| 125. | சாதிலிங்கக் கட்டு | 206 |
| 126. | மேக எரிப்புக்கு மருந்து | 208 |
| 127. | உஷ்ணத்துக்கு அருகு நெய் | 208 |
| 128. | சிவனார் வேம்பிலைத் தைலம் | 209 |
| 129. | மண்டை நோய்க்கு நசியம் | 209 |
| 130. | சூலைக்குச் சூரணம் | 210 |
| 131. | பத்திய வர்க்கம் | 210 |
| 132. | குடல் வாதத்துக்கு மருந்து | 211 |
| 133. | சுக்குக் குடிநீர் | 211 |
| 134. | கர்ப்ப விப்புருதிக்கு மருந்து | 212 |
| 135. | தேங்காய் நெய் விபரம் | 212 |

136. விப்புருதி, அரையாப்பு, பிளவை வீக்கத்துக்கு 214
137. கழல்வாதம், அண்டவாதத்துக்கு எண்ணெய் 215
138. கிருமிக்கு எண்ணெய் 216
139. சர்த்தி விக்கலுக்கு மருந்து 216
140. காமாலையில் வரும் மலக்கட்டு போக 217
141. வல்லாதி, அரையாப்புக்கு எண்ணெய் 217
142. விரணத்திற்குக் குழம்பு 218
143. பித்தத்திற்கு லேகியம் 219
144. விஷத்துக்குக் குழம்பு 220
145. சகல வாய்வுக்கும் அசனத்தின் மேல் மருந்து 221
146. சூலைக்கட்டு, இடுப்பு நோய்க்குக் கோதும்பை மருந்து 222
147. திப்பிலாதிச் சூரணம் 222
148. தலைக்கு மிளகெண்ணெய் 224
149. சீனப் பதங்கம் 226
150. பரங்கிப்பட்டைச் சூரணம் 227
151. லேகியம் 228
152. நவச்சாரக் கட்டு 230
153. கண்டங்காரி லேகியம் 231
154. பறவை தோஷத்துக்கு நெய் 233
155. மேகப்பிடிப்புக்கு ஆமணக்கெண்ணெய் 234
156. தீபனத்துக்குச் சூரணம் 235
157. குன்மத்திற்கு மருந்து 236
158. வண்டுகடிக்குச் சூரணம் 237

| | | |
|---|---|---|
| 159. | வெள்ளைக்குப் பச்சை வெட்டு | 238 |
| 160. | சகல எரிவுகளுக்கும் குடிநீர் | 239 |
| 161. | மேக வெள்ளைக்குத் துருசு பற்பம் | 240 |
| 162. | சாம்பிராணிப் பதங்கம் | 241 |
| 163. | சாம்பிராணித் தைலம் | 242 |
| 164. | சிலாசத்துப் பற்பம் | 243 |
| 165. | இரச கற்பூரம் | 243 |
| 166. | கருங்குழம்பு | 244 |
| 167. | விஷக்குழம்பு | 245 |
| 168. | பேதி ஆவதற்கு மருந்து | 245 |
| 169. | தாளிச பத்திரி லேகியம் | 246 |
| 170. | தலைக்கெண்ணெய் | 247 |
| 171. | மலம் சுத்தியாக மருந்து | 248 |
| 172. | சூதவாய்வுக்கு மருந்து | 248 |
| 173. | மூலத்துக்கு அவிழ்தம் | 249 |
| 174. | மூலத்துக்குப் புகை | 249 |
| 175. | கூழ்பாண்ட லேகியம் | 250 |
| 176. | தாளிச பத்திரி சூரணம் | 252 |
| 177. | குளிர்சுர மருந்து | 253 |
| 178. | மூலம் தீர | 253 |
| 179. | பரங்கிப்பட்டைப் பதங்கம் | 254 |
| 180. | மலக்கட்டுக்குக் குடிநீர் | 255 |
| 181. | கர்பத்துக்கு வீழியெண்ணெய் | 256 |

ஹரிஓம் நன்றாகக் குரு வாழ்க

# அகத்தியர் வைத்திய சிந்தாமணி

*பூரணமாய் நிறைந்தபரம் பொருளா யெங்கும்*
*பூரகமாய் வெளியிலொளி யான சோதி*
*தாரணியில் சிவசெந்து தனைய ளித்துச்*
*சடலமெனும் சடாட்சரத்தின் சோடசக் கூறாய்*
*வாரணமாய் முகத்தோனை முதலா தாரம்*
*மதியிரவி கனலேறு மண்டலத்துக் கப்பால்*
*காரணமாய் மதியமுர்த முண்ட சித்தர்*
*கருத்தினில் நின்றிலங்கும் கரிமுகனே காப்பு!* 1

எங்கும் ஒளிவில்லாது நிறைந்து நிற்கும் சோதி மயமானவன்; உயிர்களின் பிறப்புக்கும், இறப்புக்கும் காரண மானவன்; ஆறெழுத்து மந்திரத்தின் ஒரு கூறாய் விளங்குபவன். யானை முகத்தினைக் கொண்டவன். அனைத்திற்கும் மூல ஆதாரமாய் நிற்பவன். சூரிய சந்திர அக்கினி உலகங்களுக்கு அப்பால் விளங்கும் மதியமுர்தத்தை உட்கொண்ட சித்தர்களின் கருத்தினில் திகழ்கின்ற ஆனை முகன் இந்நூலைக் காப்பதாக.

*கரிமுகன் ஓம்நமசி வாய மென்று*
*கருத்தினால் தினம்பணியக் ககுதா மாண்பார்*
*பெருமைமிகப் பேசிடுவார் பணம்ப றிக்கப்*
*பேயனோ டிணங்கிடுவார் பெரியோர் பாதம்*
*அருமையுடன் தெரிசனைசெய் தன்பு செய்தால்*
*அனுபவிக்கு மறுநூறு மாய்ந்து பார்த்து*
*திரிபுரைகா லாக்கினியைக் கண்ட நோவு*
*சிதறிப்போஞ் செந்தூரம் திறமாய்ச் செய்யே!* 2

கரிமுகனை நினைத்து ''ஓம் நமசிவாய'' என்று கருதி தினமும் பணிந்து கொள்ள அனைத்தும் நலமாகும். பெருமை களைப் பேசித் திரிவாரோடும், பணத்தைப் பறிக்கும் குணமுடைய பேயர்களோடும் உறவு கொள்ளாது, குணத்தில்

சிறந்த பெரியோரைக் கண்டு வணங்குபவர் அறுநூறையும் ஆய்ந்து பார்த்து எழுதும் திறத்தினை எய்துவர். திரிபுரை காலாக்கினியால் ஆன நோய் தீரும். செந்தூரத்தைச் செய்வர்.

## திரிபுரை காலாக்கினிச் செந்தூரம்

*தூரமென்று எண்ணாதே இரதங் கெந்தி*
*துலங்குமரி தாரங்கற் சுண்ணத் தாலே*
*விரியமாய்ப் புடம்போட்ட துரிசுகுரு வங்கம்*
*விதமுடனே வகைக்கஞ்சு விராக னாக*
*ஊரப்பா லோகமென்ற உருக்குச் செம்பு*
*உத்தமனே சங்குடனே வகைக்கு அஞ்சாம்*
*வேறுபெற்ற வெள்ளிபண விடையே ஒன்று*
*பிரவைமிகும் பொன்விசம் வகைபத் தாச்சே!* 3

இரசம், கெந்தகம், அரிதாரம், கற்சுண்ணம், புடம்போட்ட துரிசுக்குரு, வங்கம் இவற்றை வகைக்கு 20 கி. உருக்கு, செம்பு, சங்கு இவற்றை வகைக்கு 20 கி. வெள்ளி 488 மி.கி, தங்கம், 800 மி, ஆகியவற்றைக் கல்வத்தில் போட்டுக் கொள்க.

*பத்தான வகையெல்லாங் கல்வத் திட்டுப்*
*பாச்சியரைச் செம்பருத்திச் சாறு சாமம்*
*கொத்தான செம்முள்ளிச் சாறு சாமம்*
*குமரிச்சார் படியே கூட்டி யாட்டி*
*சித்திர மூலத்தின்வேர் கொத்து மல்லி*
*திப்பிலி திப்பிலிமூலங் குரோசாணி ஓமம்*
*சத்தியமாய் வகைக்கஞ்சு விராக னாகத்*
*தானிடித்துப் பாண்டத்திற் சலத்தை வாரே!* 4

செம்பருத்திச்சாறு, செம்முள்ளிச்சாறு, கற்றாழைச்சாறு இவற்றை வகைக்கு 1.3 லி. எடுத்தூற்றி மூன்று மணி நேரம் அரைத்துக் கொள்க. சித்திரமூலம், கொத்துமல்லி, திப்பிலி, திப்பிலிமூலம், குரோசாணி ஓமம் இவற்றை வகைக்கு 20 கி. எடுத்திடித்துப் பாத்திரத்தில் இடவும்.

*வார்த்திடுவாய் படியஞ்சு நாலி லொன்றாய்*
*வத்தினபின் கசாயமதில் மருந்தை யாட்டி*
*தேத்தம்விரைப் பிரமாணம் உண்டை செய்து*
*தேவிதனைத் தியானித்து நிழலு லத்தி*
*சாத்திரமாய் உடும்பொன்று கொண்டு வந்து*
*கடுகவே வயர்கிழித்து மருந்தை யுள்ளே*
*சேத்தியே துவாரமெல்லாம் துன்னல் போட்டுத்*
*திறமான பாண்டத்தி லுப்பைக் கொட்டே!* 5

5.2 லி. தண்ணீர் விட்டு நான்கிலொன்றாய்க் காய்ச்சி அக்குடிநீரில் மீண்டும் மருந்தை அரைத்துக் கொள்க. தேற்றாங்கொட்டை விதையளவு உருண்டை செய்து நிழலில் வைத்து உலர்த்திக் கொள்க. உடும்பு ஒன்றின் வயிற்றைக் கீறி மருந்தை உள்ளே வைத்து தைத்துக் கொள்க.

*உப்பென்ன னாலுபடி உள்ளே யிட்டு*
*உடும்பையதின் மேல்வைத்து யதின்மே லுப்பு*
*தப்பிதமில் லாமேமுன் போலக் கொட்டி*
*சரிவரவே மணலிட்டு சட்டி மூடி*
*அப்பனே எழுசிலை மண்ணுஞ் செய்து*
*ஆனமுழங் காலளவு குழிதான் வெட்டி*
*ஒப்பறவா யிரண்டுசாண் நெருவி டுக்கி*
*உகந்தசட்டி தனைவைத்து எருவைக் கொட்டே!* 6

பாத்திரத்தில் 5.2 லி. உப்பைக் கொட்டி அதன் மீது உடும்பினை வைத்து மேலேயும் உப்பை கொட்டி அளவாக மணலைக் கொட்டி சட்டியினால் மூடுக. சட்டிக்கு ஏழுசீலை மண் செய்து, முழங்கால் அளவு குழியை வெட்டி இரண்டுசாண் அளவு விறகினை அடுக்கி, சட்டியை வைத்து அதின்மேல் எருவினை அடுக்கி வைக்க.

*கொட்டியே மாலையிலே வன்னி மூட்டிக்*
*கூசாமே லெரியிடுவாய் நாலு சாமம்*
*தெட்டுவர்போல் திரியாதே மனதொன் றானால்*
*தெய்வவஞ்சி தன்னுடைய பதத்தைப் போற்றி*

*திட்டமா யுதையாதி கடவுள் பூசை*
*செய்துநீ செந்தூர மெடுத்துப் பார்த்தால்*
*அட்டமிரன் டானகலை சந்திர னொவ்வாது*
*அவன்கருமி யானாக்கா லாகா தென்னே!* 7

மாலையிலே தீ மூட்டி பன்னிரெண்டு மணி நேரம் எரித்து கடவுளைத் தியானித்து பின் எடுத்துப் பார்க்க செந்தூரமாகும்.

*கருமமென்ன மனம்வெளியில் போன தாலும்*
*கண்டதின்மேல் மோகம்வைத்துக் கருத்தைச் சொன்னால்*
*வருமவர்க்கு அதுவழியே கருமம் வந்த*
*மார்க்கமதை நீயறிந்து மனதைத் தேத்து*
*தருமமதில் மனம்வேணும் நோயா ளிக்குச்*
*சயரோகந் தனக்குச் செந்தூரந் தேனில்*
*கருமமுடன் கொடுத்திடவே யிரண்டாஞ் சாமம்*
*கழன்றுவிழுங் கோழையெல்லாம் பின்னை கேளே!* 8

மனம்போன போக்கில் அதனை விட்டு எல்லாவற்றின் மேலும் விருப்பம் வைத்து அதன் வழியே நடந்தால் வினை வந்து சேரும். எனவே மனத்தைத் தருமத்தின் வழியில் செலுத்த வேண்டும். இச்செந்தூரத்தைச் சயநோய் உள்ளவர்க்குத் தேனில் காலையில் கலந்து கொடுக்க கோழை வெளி வந்துவிடும்.

*பின்னையுஞ் சத்துவமிருந் தாலெருக்கம் பாலில்*
*பேணியே நெல்லிடைதான் செந்தூ ரத்தை*
*கன்னமற கொடுத்துவிடு மஞ்சள் போலும்*
*கயர்போலு மிழைமிழையாய்க் கக்குங் கோழை*
*அன்னமது விரும்பாதே சிறுபயற்றின் கஞ்சி*
*அடுத்தநாள் பணவிடையு மரையாய்த் தேனில்*
*உண்ணுவாய் பத்தியமா யிரண்டு பத்தில்*
*உலகிலுள்ள காசவகை ஒழிந்து போச்சே!* 9

மேலும் கோழை அதிகமாய் இருந்தால் 65 மி.கி. செந்தூரத்தை எடுத்து எருக்கம்பாலில் கலந்து கொடுக்க மஞ்சளாகவும் கயிறு போன்றும் இருக்கும் கோழை வெளி

வரும். சோற்றினை விரும்பாத இந்த நேரத்தில் சிறு பயிறினால் ஆன கஞ்சியைக் கொடுக்க வேண்டும். மறுநாள் 240 மி.கி. தேனில் கலந்து உட்கொண்டு இருபது நாட்கள் பத்தியமாய் இருக்க உலகத்திலுள்ள காச வகைகள் ஒழிந்து போகும்.

*போச்சப்பா குன்மமதுக் கனுபா னங்கேள்*
*புகளோம திரிகடுகு திரிப லாதி*
*வாச்சுதே இளவறுப்பாய்ச் சூர ணித்து*
*வாகான செந்தூர மரையுங் கூட்டி*
*பாச்சுனி உள்ளருந்த ஏழு நாளில்*
*பறக்குமே அட்டகுன்மம் பஞ்சு போலே*
*காச்சுவாய் வாய்வுக்கு ஓமந் தன்னை*
*கருகாமல் சூரணித்துச் சர்க்கரையும் கூட்டே!* 10

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றைத் தனித்தனியே இளவறுப்பாய் வறுத்துச் சூரணம் செய்து அதனுடன் 240 மி.கி. செந்தூரத்தையும் சேர்த்து ஏழு நாட்கள் சாப்பிட எட்டு வகைக் குன்மங்கள் தீரும். வாய்விற்கு ஓமத்தைக் கருகாது வறுத்துச் சூரணமாக்கி சமஅளவு சர்க்கரையும் சேர்த்துக் கொள்க.

*சூரணத்தில் செந்தூரம் பணவிடையுங் காலாய்*
*துலங்கவே நீயிருந்து பதிமூன் றேனாள்*
*பாரிலுள்ள வாய்விருபத் தெட்டும் போகும்*
*பரத்தையரால் வருஞ்சூலை பரங்கிப் பட்டை*
*பேர்ப்பிரப்பங் கிழங்கிரண்டுங் கசாய மிட்டு*
*பேணியிடு பணவிடைகால் செந்தூ ரந்தான்*
*கூறாக ஐம்பதுனாள் கொண்டா யானால்*
*குணமாகும் பதினெட்டு சூலை கூறே!* 11

அதனுடன் 120 மி.கி. செந்தூரத்தைக் கலந்து பதிமூன்று நாட்களுக்குக் கொடுக்க உலகிலுள்ள வாய்வு வகை இருபத் தெட்டும் நீங்கும். பரங்கிப்பட்டை, பிரப்பங்கிழங்கு இவை இரண்டையும் சேர்த்துக் குடிநீரிட்டு அதில் 120 மி.கி.

செந்தூரத்தைக் கலந்து கொடுக்க பரத்தையரால் வரும் சூலை நீங்கும். இவ்வாறு ஐம்பது நாள் கொள்ள பதினெட்டு வகை சூலை தீரும்.

*குணமாகுஞ் சுரத்தின்மேல் தோஷங் கண்டால்*
*கூட்டுவீர் சீரகமு திரிகடுகுஞ் சீந்தில்*
*சினமாகுஞ் சித்தாமுட்டி யிரண்டுகண்டங் கத்திரி*
*சேர்பற்ப டாகமிவைக் கசாயந் தன்னில்*
*பணமாங்கால் பணவிடைசெந் தூரமாந் தூவி*
*பத்தியம்வைத்துக் கொடுத்திடுவாய் திரிநே ரந்தான்*
*நிணமான உடலில்வந்த சருவ வாதம்*
*நிகழ்ந்திடவே திருகுகள்ளி நேர்ந்தி டாயே!* 12

சுரத்துடன் தோடம் ஏற்பட்டால் சீரகம், சுக்கு, மிளகு, திப்பிலி, சீந்தில், சிற்றாமுட்டி, பேராமுட்டி, கண்டங்கத்திரி, பற்படாகம் இவற்றைக் குடிநீரிட்டு 120 மி.கி. செந்தூரத்தைக் கலந்து பத்தியத்துடன் மூன்று நேரம் கொடுக்க நலமாகும். உடலில் வாதம் அதிகரித்து துன்பம் கொடுத்தால் திருகு கள்ளியினை வாட்டி சாறு பிழிந்து கொள்ளவும்.

*நேர்ந்திட்ட கள்ளிதனை வைக்கப் பில்லா*
*நீவாட்டிச் சார்பிழிந்து செந்தூ ரத்தை*
*பார்ந்தமறப் பணவிடையாய்ப் பதிமூன் றேனாள்*
*பந்தம்வைத்துக் கொண்டவர்க்கு வாத மெங்கே*
*சேர்ந்தபிர மேகமது தேங்காய்ப் பாலில்*
*சேர்த்திடுவா யாட்டுப்பால் செந்தூ ரங்கால்*
*சார்ந்தவிஷ பாகமது பாண்டு சோகை*
*தவறிப்போ மப்படியே தான்செய் வாயே!* 13

480 மி.கி. செந்தூரத்தை மேற்கூறிய சாற்றில் கலந்து பதிமூன்று நாட்கள் பத்தியத்துடன் கொள்ள வாதம் அனைத்தும் ஒழியும். பிரமேகத்திற்கு 120 மி.கி. செந்தூரத்தைத் தேங்காய்ப் பாலிலும், விஷம், பாண்டு, சோகை இவற்றிற்கு ஆட்டுப் பாலிலும் கொடுக்க குணமாகும்.

*தான்செய்வாய் கிராணிவகை யெல்லாந் தீரத்*
*தனிமேதித் தயிர்தன்னில் செந்தூ ரத்தை*
*நாளொன்று குன்றியிடை வித மாக*
*நாட்டுநீ யிரஞ்சு நாளில் தீரும்*
*ஊனென்று உடல்தனிலே உள்ள நோயை*
*ஊடடா னியறிந்து யனுபானத் தீந்தால்*
*மாநிலத்தில் நோவில்லை ஈதொன்று போகும்*
*வாச்சுதென்று காமாலை தனக்குக் கேளே!* 14

கிராணி வகைகள் பலவற்றிற்கு எருமைத் தயிரில் 130 மி.கி. செந்தூரத்தைக் கலந்து கொடுக்க குணமாகும். பத்து நாட்களுக்குக் கொடுக்க உடலிலுள்ள நோயை அறிந்து மருந்துடன் தக்க அனுபானத்தை கலந்து கொடுத்தால் இப் பூலோகத்தில் நோயில்லை.

*கேளுநீ தகரைகைய்யான் சாறு தன்னில்*
*கெணிதமாம் பணவிடைகால் செந்தூ ரந்தான் -*
*நாளுமே ஐந்துதினம் பத்து நேரம்*
*நாட்டிடவே காமாலை சோகை நீங்கும்*
*தூளவேப் பம்பட்டை கசாயம் செய்து*
*தூக்கிநீ செந்தூரம் பணவிடைகால் சேர்த்தால்*
*வீழுமே பெருங்கிரிப் புழுக்க ளெல்லாம்*
*விளக்கெண்ணெய் வாழைப்பழம் விரைந்து சேர்த்தே!*
15

கையாந்தகரைச் சாற்றில் 120 மி.கி. செந்தூரத்தைக் கலந்து தினமும் காலை, மாலையாக ஐந்து நாட்களுக்குக் கொடுக்க காமாலை, சோகை தீரும். வேப்பம்பட்டை யினால் ஆன குடிநீர் காய்ச்சி அதில் 120 மி.கி செந்தூரத்தைக் கலந்து உட்கொள்ள பெருங்கீரிப் புழுக்கள் வெளிவரும். விளக்கெண்ணெய், வாழைப்பழத்தை எடுத்துக் கொள்ளவும்.

*சேர்த்துரெண்டு மொன்றாகப் பிசைந்து கொண்டு*
*செந்தூரங் கால்ப்பணத்தில் சிறுகிருமி வீழும்*
*ஏத்துமே கோவைதனை யரைத்து நன்றாய்*
*எருமைவெண்ணை யுங்குழைத்துச் செந்தூ ரங்கால்*

*பார்த்துநீ மூன்றுநா ளருந்தும் போது*
*பறந்திடுமே கூடுவிப் புருதி தானும்*
*சேர்த்துபெரும் பாட்டுக்குப் பசுவின் மோரில்*
*சீரகத்தைத் தான்பொரித்துப் பொடிசெய் திட்டே! 16*

விளக்கெண்ணெய், வாழைப்பழம், இவற்றை ஒன்றாகப் பிசைந்து 120 மி.கி. செந்தூரத்தை அதில் கலந்து கொடுக்க சிறுகிருமி விழும். கோவையிலையைத் தேவையான அளவெடுத்து அரைத்து எருமை வெண்ணெயையும் சேர்த்து குழைத்து 120 மி.கி. செந்தூரத்தைக் கலந்து மூன்று நாள் உட்கொள்ள விப்புருதி குணமாகும். சீரகத்தைப் பொரித்துப் பொடித்து பசுவின் மோரில் கலக்கிக் கொள்ளவும்.

*திட்டங்கால் பணத்தூக்கஞ் செந்தூ ரந்தான்*
*தினமூன்று அருந்திடவே உதிர தோஷம்*
*கெட்டசூ தகவாய்வு பறந்து போகும்*
*கிளறுகின்ற வாய்நீர்க்கு மிஞ்சிச் சாற்றில்*
*இட்டமலை தாங்கிவேர்க் கசாயஞ் செய்து*
*இதனிற்கால் பணவிடைசெந் தூரங் கூட்டி*
*அட்டியிலை நாள்மூன்று கொள்ளும் போது*
*அகலுமே சன்னிபதி மூன்றுஞ் சுக்கே! 17*

அதில் 488 மி.கி. செந்தூரத்தைச் சேர்த்து 3 வேளை கொடுக்க பெரும்பாடு, உதிரதோடம், சூதகவாய்வு இவை நீங்கும். வாய் நீர் ஊறலுக்கு இஞ்சிச்சாற்றில் கொடுக்க குணமாகும். மலைதாங்கி வேர்க்குடிநீரில் 120 மி.கி. செந்தூரத்தைக் கலந்து மூன்று நாள் உட்கொள்ள சன்னிபதின் மூன்று வகையும் நீங்கும்.

*அஞ்சுக்கே இந்திராணித் தைலந் தன்னில்*
*அரைப்பணச் செந்தூரமிட அப்பா லோடும்*
*மிஞ்சுசலக் கழிச்சலுக்குச் சொல்லக் கேளு*
*மிகுந்தகுறு விஞ்சிலையு மெள்ளி னெண்ணெய்*
*கொஞ்சமாய்க் கலந்திடக்கால் பணவிடை செந்தூரங்*
*கட்டியஞ்சு நேரங்கொள் குடிலந் தீரும்*

*நெஞ்சிலே களங்கமில்லா நிஷ்ட்ட யோர்க்கு*
*நிமிஷத்தில் பிணிகளெல்லாம் நிர்தூ ளாமே! 18*

இந்திராணித் தைலத்தில் சுக்கைப் பொடித்துப் போட்டு அதில் 240 மி.கி. செந்தூரத்தைக் கலந்து கொடுக்க சன்னி பதின்மூன்றும் நீங்கும். குறுவிஞ்சியிலை என்னும் காட்டு வெற்றிலையையும், நல்லெண்ணெயையும் சேர்த்து 488 மி.கி. செந்தூரத்தைக் கலந்து ஐந்து நேரங்கொள்ள சலக் கழிச்சல் தீரும்.

*தாமேதான் வேகவைத்து நீர்பி ழிந்து*
*தவளநிற வெங்காரம் பொரித்துப் போட்டு*
*காமேகால் பணவிடைசெந் தூரத் தில்நீர்*
*கட்டங்கே கெட்டுவிடும் காலாக்கினி வேதம்*
*மாமேவு பூங்குழலா ளுமைக்கு ஈசன்*
*வகுத்துவைத்த விதிப்படியே வயித்தியஞ் செய்தால்*
*பூமியினில் கும்பமுனி யருளும் பெற்றுப்*
*புகழ்பிரமன் பேர்பொருந்தி யின்னங் கேளே! 19*

சுத்தி செய்த வெங்காரத்தைப் பொரித்து அதனுடன் 120 மி.கி. செந்தூரத்தைச் சேர்த்துக் கொடுக்க நீர்க்கட்டு நீங்கும். காலாக்கினி செந்தூரத்தை ஈசன் உமைக்குக் கூறியபடியே வைத்தியம் செய்தால் அகத்தியர் அருளையும் பெறலாம்; பிரமன் அளவு பெயரும் பெறலாம்.

*இன்னமிங்கே இதுபோலே செந்தூர மில்லை*
*எடுத்தெடுத்த னோய்க்கெல்லா எமந்தா னப்பா*
*சொன்னதுபோல் கொல்லுமடா நோய்கள் தன்னை*
*துகையறிந்து அனுபானந் தன்னில் தாக்கு*
*பண்ணினால் பண்டிதற்கு யிதுவொன்று போதும்*
*பரமார்த்த மாயிருந்து செய்ய வேணும்*
*எண்ணியே இன்னமனு பான முண்டு*
*இயல்பான மூலமது தேனில் போமே! 20*

நோய்கள் எல்லாவற்றையும் நீக்கும் இச்செந்தூரத்தைப் போல் வேறு ஏதுமில்லை. அனுபான மறிந்து கொடுத்தால் வைத்தியர்க்கு இது போன்றதொரு சிறப்பானதொரு மருந்து வேறில்லை. இதுபோன்று இன்னம் நிறைய அனுபானங்கள் உண்டு.

*தேனிலே கொண்டாக்கா லிருநே ரந்தான்*
*திருமடா மூலமெல்லா மஞ்சு னாளில்*
*மானேகோ ரோசினையும் பணவிடையும் ரண்டு*
*மகத்தான செந்தூரம் பணவிடையுங் கூட்டி*
*ஆனதொரு முலைப்பாலில் மூன்றுநாள் கொள்ள*
*ஆறுமடா சுரங்கள்பதி னெட்டுந் தீரும்*
*வானிலுள்ள திப்பிலிசூ ரணமே செய்து*
*மகத்தான செந்தூரம் பணவிடையுங் கூட்டே!* 21

தேனில் செந்தூரத்தைக் கலந்து ஐந்து நாட்கள் கொடுக்க மூலம் தீரும். கோரோசனை 976 மி.கி செந்தூரம் 488 மி.கி. சேர்த்து, தாய்ப்பாலில் மூன்று நாள் கொள்ள பதினெட்டு வகை சுரங்கள் தீரும். திப்பிலி சூரணத்தையும், செந்தூரத்தையும் வகைக்கு 488 மி.கி. அளவெடுத்துக் கொள்ளவும்.

*பணவிடைதான் வெருகடியில் தேனில் கொள்ள*
*பண்டுள்ள மூலமுடன் கிராணி தீரும்*
*மணமுடைய சாதிக்காய் கிராம்புவசு வாசி*
*வகைமூன்று முக்கழஞ்சி வடிதூ ளாக்கி*
*இணங்கவே நெய்தேனும் வெங்கருவுங் கூட்டி*
*இட்டமுடன் பணவிடைசெந் தூரஞ் சேர்த்து*
*வணங்கியே யிம்முறைதான் உண்டா யானால்*
*மக்களே தாதுவிர்த்தி மகிழ்ந்து பாரே!* 22

மூவிரலளவு தேனில் கொள்ள மூலம், கிராணி தீரும். வாசனையுள்ள சாதிக்காய், கிராம்பு, சாதிபத்திரி இவற்றை வகைக்கு 15 கி. எடுத்து சூரணம் செய்து நெய், தேன், முட்டை வெண்கரு இவற்றைச் சேர்த்து 488 மி.கி. செந்தூரத்தைக் கலந்து உட்கொண்டால் தாது விருத்தியாகும்.

## காரீயச் செந்தூரம்

*மகிழ்ந்திடவே காரியசெந் தூரம் கேளு*
*மக்களே காரீயம் பலமி ரண்டு*
*சுகமுடனே சட்டியிட்டு வறுத்து நன்றாய்*
*சூரணிப்பாய் மூவஞ்சு பலமும் நன்றாய்*
*வகையுடனே னாயுருவி யதுவுங் கொண்டு*
*மஞ்சள்தனைத் தூவியே கிண்டிக் கிண்டி*
*தகையில்லா இருசாமம் கிண்டி யப்பா*
*சவுக்காரப் பொடியுமரைப் பலமுங் கிண்டே!* 23

காரீய செந்தூரத்தைக் கூறுகின்றேன் கேளுங்கள். காரீயம் 70கி. எடுத்துச் சட்டியில் போட்டுக் கொள்க. 105 கி. நாயுருவியைச் சேர்த்து மஞ்சளைத் தூவிக் கிளறிக் கொள்க. எட்டுமணி நேரம் இவ்வாறே கிளறி 18 கி. சவுக்காரப் பொடியையும் சேர்த்துக் கொள்க.

*கிண்டவே இருகளஞ்சு இந்துப்புக் கூட்டிக்*
*கெடிதான அரிதாரங் கழஞ்சி ரெண்டு*
*மண்டலத்தோர் கொண்டாட வகைக்குச் சாமம்*
*வகையுடனே நாயுருவிக் கம்பால் கிண்டி*
*கண்டீரோ செந்தூரங் கண்கொள் ளாது*
*கருகாமல் வறுத்திடுவாய் நாலு சாமம்*
*பண்டிதரே எடுத்துநீ பதனம் பண்ணு*
*பாங்கான செந்தூர மின்னங் கேளே!* 24

இத்துடன் இந்துப்பு, அரிதாரம் இவற்றை வகைக்கு 10 கி. எடுத்து மூன்று மணி நேரம் நாயுருவியின் குச்சியால் கிளறிவிடுக. பின் பன்னிரெண்டு மணி நேரம் கருகாத அளவுக்குப் பதமாக வறுத்துக்கொண்டு பத்திரமாக எடுத்து வைத்துக் கொள்க.

*இன்னந்தான் ரண்டுபலங் காரீ யத்தை*
*இதமாகச் சுத்திபண்ணி சட்டியிலே விட்டு*
*சொன்னதொரு மாதளங்காய்த் தோலுந் தோட்டைச்*
*சுகமாக மஞ்சளந்த வீதங் கூட்டி*

*சன்னதமாய் ரெண்டுமொன்றாய்த் தூளே கூட்டித்*
*தறுகாமல் வெருகடிதா னெடுத்துத் தூவி*
*அன்னமே இருசாமம் வறுத்து நன்றாய்*
*அப்பனே வெடியுப்பு பலந்தா னஞ்சே!* 25

மேலும் 70 கி. காரீயத்தைச் சுத்தி செய்து சட்டியிலே போட்டுக் கொள்க. மாதுளங்காய்த் தோலையும், மஞ்சளையும் சமஅளவு எடுத்துப் பொடித்து மூவிரலளவு தூவி ஆறு மணி நேரம் வறுத்துக் கொள்க. 105 கி. வெடியுப்பு எடுக்கவும்.

*நாலுடனே காரமுடன் சீனங் கூட்டி*
*நலமாக வகையொன்று பலமுஞ் செய்து*
*பாலகனே மூன்றுமொன்றாய்த் தூளே செய்து*
*பண்புடனே வறுத்திடுவாய் தூவித் தூவிக்*
*கோலமுள்ள சென்னா யுருவி தன்னால்*
*குறுகவே வறுத்திடுவாய் இரண்டு சாமம்*
*சீலமுடன் முப்பது னாழிகையி னுள்ளே*
*செந்தூர மாகுமடா தெளிந்து செய்யே!* 26

இவற்றுடன் வெங்காரம், சீனக்காரம் இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துப் பொடித்து வறுத்துத்தூவி, செந்நாயுருவி குச்சியினால் ஆறு மணி நேரம் வறுத்துக் கொள்க. பிறகு பன்னிரெண்டு மணி நேரத்திற்குள் செந்தூரமாய் விடும்.

*செய்யவே சர்க்கரை நேர்தான் கொண்டால்*
*திரேகத்தில் குட்டமெல்லாந் தீர்ந்து போகும்*
*தொய்யுமடா பதினெட்டு னாளைக் குள்ளே*
*தூரோடே போகுமடா குட்ட மெல்லாம்*
*நய்யவே வலிக்கின்ற குன்ம மெல்லாம்*
*நாலுநாள் தேனிலுண்ண நன்றாய்த் தீரும்*
*உள்ளவே சர்க்கரை சீரகமும் வெண்ணை*
*உருட்டியே பணவிடை செந்தூரங் கூட்டே!* 27

இச்செந்தூரத்தைத் தேவையான அளவு சர்க்கரையுடன் சேர்த்து சாப்பிட குட்டம் குணமாகும். பதினெட்டு நாட்களுக்குள்

குட்டத்தின் வகைகள் அனைத்தும் வேரோடு தீர்ந்து போகும். நான்கு நாள் இச்செந்தூரத்தைத் தேனில் கலந்து கொடுக்க குன்ம வகைகள் குணமாகும். சர்க்கரையையும் சீரகத்தையும் பொடித்து வெண்ணெயுடன் கலந்து 488 மி.கி. செந்தூரத்தைச் சேர்த்துச் சாப்பிடவும்.

*கூட்டியே தின்றுவிடும் இருபதுநாள் மட்டும்*
*கூசாமல் பயித்தியம் துன்மாங் கிஷம்போம்*
*வாட்டியதோர் எலும்புருக்கி நீர டைப்பு*
*மறிபடுமே திரேகத்தில் மயக்க மில்லைத்*
*தாட்டிகமாச் செந்தூரம் வைத்துக் கொண்டு*
*தருகாம லிம்முறையைச் சார்ந்து பாரு*
*மூட்டுவார் செந்தூரம் பணவிடையே யப்பா*
*முனிவோர்கள் சொன்னபடி மொழிந்திட் டேனே!* 28

இருபதுநாள் உட்கொள்ள பித்தம், துர்மாங்கிஷம், எலும்புருக்கி, நீரடைப்பு, மயக்கம் இவை தீரும். முனிவர்கள் கூறின இம்முறைப்படி செந்தூரத்தினை உட்கொள்ள நோய்கள் தீரும்.

## தாமிரச் செந்தூரம்

*மொழிந்திட்டே னின்னமொரு செந்தூ ரங்கேள்*
*முக்கியமாய்ச் செம்புமொரு பலமே வாங்கி*
*அசந்தவே யீசலிற காகத் தட்டி*
*அப்பனே சுத்திபண்ணி நறுக்கிக் கொண்டு*
*தளம்பாமல் புளியிலைபோல் தகடு தன்னில்*
*சாற்றுகின்ற கெந்தகமுங் களஞ்சு கூட்டு*
*வளம்பெறவே நொச்சியிலைச் சாறு விட்டு*
*மாண்டிடவே அரைத்துஅந்தத் தகட்டில் பூசே!* 29

மற்றுமொரு செந்தூரத்தைக் கூறுகின்றேன். கேட்பீர்களாக. 35 கி. செம்பை புளியிலை போல் சிறியதாக எடுத்து ஈசலின் இறகுபோல் மெல்லியதாகத் தட்டி சுத்தி செய்து நறுக்கிக் கொண்டு 5 கி. கெந்தகத்துடன் நொச்சியிலைச் சாற்றைச் சேர்த்தரைத்து மேற்கூறிய செம்புத் தகட்டில் பூசிக் கொள்க.

*பூசிடுவாய் தகடெல்லாம் புனித மாகப்*
*புதுச்சட்டி தனில்பரப்பி அடுப்பி லேற்றி*
*பேசாமல் மேல்மூடு சட்டி கொண்டு*
*பலமாக யேழுமண்ணுஞ் சீலை செய்து*
*கூசாமல் அறுபதுனா ழிகையின் மட்டுங்*
*குணங்காமல் தீயெரித்து அப்பா லாத்தி*
*நேசமுடன் நொச்சிச்சார் விட்ட ரைத்து*
*லேசாக அடைபோல ரவியில் வையே!* 30

புதுச்சட்டியில் தகடைப் பரப்பி அடுப்பிலேற்றுக. மேலே சட்டியை மூடி ஏழு சீலை மண் செய்து பன்னிரெண்டு மணி நேரம் எரித்து ஆறியபின் எடுத்து நொச்சிச் சாறு விட்டரைத்து மெல்லியதான அடையாகச் செய்து வெயிலில் வைத்துக் கொள்க.

*ரவியிலே வைத்தெடுத்த மருந்தை யப்பால்*
*நன்றாக ஒட்டில்வைத்து ஒடு மூடு*
*கவியவே மண்சீலை செய்து நன்றாய்*
*களங்கமற்ற குக்குடத்தில் கனலை மூட்டிக்*
*கவியாம லந்தமுறை நொச்சிச் சாற்றில்*
*தளம்பெறவே அரைத்தரைத்துக் குக்கு டத்தில்*
*அவியவே குக்குடந்தா னிருப துக்குள்*
*அப்பனே செந்தூர முருக்கம் பூவே!* 31

காயவைத்துப் பின் அதனையெடுத்து ஓட்டில் வைத்து ஓட்டினால் மூடி சீலை மண் செய்து பத்து எருவில் வைத்து எரித்துக் கொள்க. அதனை வெளியில் எடுத்து மீண்டும் நொச்சிச் சாற்றினால் அரைத்து பத்தெருவில் புடமிடவும். மீண்டும் இருபது எருவில் புடம் வைத்தெடுக்க முருக்கம்பூ போல் செந்தூரமாய் இருக்கும்.

*பூவான செந்தூரம் பணவிடை கூட்டிப்*
*புகழான கருப்பட்டி தன்னில் கொள்ளத்*
*தாவியதோர் குன்மம்பதி னெட்டும் போகும்*
*தருகாம லிருபதுநாள் சாரக் கொள்ளு*

*ஆவலுடன் திரிகடுகு சித்திர மூல*
*மப்பனே சூரணித்துப் பூரஞ் சூதம்*
*கூசாமல் பணவிடைதா னரையுங் கூட்டிக்*
*கொள்ளுவாய் சூரணஞ்செந் தூரங் கொள்ளே!* 32

488 மி.கி. செந்தூரத்தைக் கருப்பட்டிக்குள் வைத்து இருபது நாட்கள் உட்கொள்ள பதினெட்டு வகைக் குன்மம் தீரும். சுக்கு, மிளகு, திப்பிலி, சித்திரமூலம் இவற்றைச் சூரணம் செய்து கொள்க. பூரம், சூதம் இவை யிரண்டையும் வகைக்கு 240 மி.கி. சேர்த்து முறைப்படி சுத்தம் செய்து பொடித்துக் கொள்க.

*செந்தூரம் பணவிடைதா னரையுங் கூட்டிச்*
*சேர்த்துஒன்றாய் மண்டலந்தான் தின்றா யானால்*
*வந்திட்ட கவிசைபீ லிகைகுன் மங்கள்*
*வாடாத பெருவயிறு பக்க சூலை*
*முந்தியதோர் நீராமை யோனி சூலை*
*மூட்டோடே பேராமை மூலம் போகும்*
*இந்தமுறை செய்தாக்கா லெல்லாம் போகு*
*மிப்படியே செந்தூரம் நீகண்டு கொள்ளே!* 33

இவை இரண்டையும் கலந்து 240 மி.கி. செந்தூரத்தைச் சேர்த்து நாற்பது நாட்கள் உட்கொள்ள பெருவயிற்றின் வகைகளான கவிசைப் பெரு வயிறு, பீலிகைப் பெருவயிறு, குன்மப் பெருவயிறு, நீராமை, யோனி சூலை, மூலம் ஆகிய நோய்கள் தீரும்.

### கருவங்கச் செந்தூரம்

*கண்டுநீ கொள்வதற்கு இன்னங் கேளு*
*காரியம் பலமெட்டுக் காந்த மெட்டு*
*பண்டுள்ள கெந்தகந்தான் பலமும் நாலு*
*பாரிலுள்ள யிரதமுமோர் பலமுங் கூட்டித்*
*தண்டாமல் குகைக்குள்ளே பொடித்து வைத்து*
*தருகாமல் செம்பருத்திச் சாறா லாக்கு*

*சுண்டாமல் வெற்றிலையின் சாறா லூக்கு*
*சுகமாக விட்டேழு சீலை செய்யே!* 34

காரீயம், காந்தம் இவற்றை வகைக்கு 200 கி., கெந்தகம் 140 கி., இரசம் 35 கி. எடுத்து முறைப்படி சுத்தி செய்து பொடித்து குகைக்குள் வைத்து, செம்பருத்திச் சாறு, வெற்றிலைச் சாறு இவற்றை வகைக்கு 160 மி.லி. ஊற்றிப் பின் ஏழு சீலைமண் செய்து கொள்க.

*சீலையாம் மண்சீலை செய்து நன்றாய்த்*
*திகைக்கவே எருமுழங்கால் மட்டுங் கூட்டு*
*காலமே முதலாக மூனு சாமங்*
*கனலாகப் புடம்போடு அப்பா லாற்றிச்*
*சாலவே மருதம்பட்டைச் சாற்றா லாட்டிச்*
*சாந்துபோ லாட்டிநீ வழித்துக் கொண்டு*
*பாலனே ஆவரையி னல்லி தன்னைப்*
*பதறாமல் பறித்துவந்து வறுத்தி டாயே!* 35

முழங்கால் அளவு எருவினை அடுக்கி காலை ஆறு மணி முதல் பிற்பகல் மூன்று மணி வரை எரிக்கவும். பின் ஆற வைத்தெடுத்து மருதம்பட்டைச் சாற்றினால் மைபோல் அரைத்து வழித்து வைத்துக் கொள்க. ஆவாரையின் இலையைப் பறித்து வதக்கி வைத்துக் கொள்க.

*வறுத்திட்ட அல்லிதனைச் சூர ணித்து*
*மக்களே மருந்தையெல்லா மொன்றாய்ச் சேர்த்து*
*ஒறுத்திட்டுப் போகாமல் சட்டி யிட்டு*
*ஒருகம்பு ஆவிரையால் கிண்டிக் கிண்டி*
*கறுத்திட்டுப் போகாமல் நாலு சாமம்*
*கனல்மூடி யெரித்திடுவாய் செந்தூர மாகும்*
*எரித்திட்ட நீரிழிவு எல்லாந் தீரும்*
*ஏசாதே பணவிடைதான் தேனி லுண்ணே!* 36

அதனைச் சூரணமாகச் செய்து மற்ற மருந்தையும் சேர்த்து சட்டியில் போட்டுக் கொள்க. அதனை ஆவாரைக் குச்சியால்

கிளறி பன்னிரெண்டு மணி நேரம் தீய்ந்து போகாமல் எரித்தெடுக்கச் செந்தூரமாகும். அதில் 488 மி.கி. எடுத்துத் தேனில் கலந்து சாப்பிட நீரிழிவு வகைகள் அனைத்தும் தீரும்.

### காந்தச் செந்தூரம்

*வையடா காந்தமொரு முறைதா னப்பா*
*வகையான கற்றாழஞ் சாறு தன்னில்*
*பையவே காந்தமொரு பலமே வைத்துப்*
*பதறாமல் வேகவைத்துக் கழுவிப் போட்டு*
*நையவே பொடியாக்கிக் கையான் சாற்றில்*
*நாளேழு தானரைத்துச் சட்டி யிட்டு*
*உய்யவே குக்குடத்தில் சீலை மண்தான்*
*உத்தமனே அரைத்தரைத்துப் புடந்தா னேழே!* 37

35 கிராம் காந்தத்தைக் கற்றாழைச் சாற்றில் வேக வைத்துக் கழுவி எடுத்துக் கொள்க. அதனைப் பொடித்துக் கையாந்தகரைச் சாற்றில் ஏழுநாள் அரைத்துச் சீலை மண் செய்து பத்து எருவில் புடம் போடுக.

*புடமான குக்குடத்தில் போட்டெ டுத்துப்*
*பொல்லாத வீக்கமொடு பாண்டு சோகை*
*இடர்ந்திட்ட நீரழிவு நீரா மைக்கு*
*அப்பனே பணவிடைதான் தேனில் கொள்ள*
*துடந்திட்ட நோயெல்லா மோடிப் போகுஞ்*
*சோலியில்லை யிருபதுநாள் சுருக்கைப் பாரு*
*மடங்குமடா செந்தூரங் கண்ட போது*
*வயித்தியனே வாலைதனை வணங்கிக் காரே!* 38

இவ்வாறு ஏழு புடம் போட்டெடுக்கச் செந்தூரமாகும். அதில் 488 மி.கி. எடுத்துத் தேனில் கலந்து இருபது நாட்கள் கொடுக்க வீக்கம், பாண்டு, சோகை, நீரிழிவு, நீராமை ஆகிய நோய்கள் தீரும்.

*காருறு மேனி கொண்ட*
*கண்ணன்மால் மருகன் தும்பி*
*சீர்பெறும் பாதம் போற்றித்*
*தீர்ந்திடும் வியாதி கேளு*
*கூறுடன் இருநூத் தன்பால்*
*வியாதிகள் குடிபோ மென்று*
*பாரினில் சனகன் சிந்தா*
*மணியென்றும் பகரு வோமே!* 39

கறுப்பு நிறத்தையுடையவனான கண்ணன், முருகன், கணேசன் ஆகியோரின் பாதத்தை வணங்கி நோய்கள் பலவற்றைத் தீர்க்கும் சனக சிந்தாமணியைக் கூறுவோமாக.

## பச்சைநாவி

*பகருவோம் பச்சை நாவி*
*பாஷாணங் காந்தந் தாரம்*
*நிகரு விஷம வெண்காரம்*
*நேரா விஷமக்கி ராகாரம்*
*புகருகுங் கிலியம் தான்றி*
*போததிரி கடுகு நெல்லித்*
*தகரில்லா மருந்தைச் சுத்தி*
*தனித்தனி பலமும் வாங்கே!* 40

பச்சைநாவி, வெள்ளைப்பாடாணம், காந்தம், அரிதாரம், தண்ணீர் விட்டான் கிழங்கு, வெண்காரம், அக்கிராகாரம், குங்கிலியம், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, நெல்லி, தான்றி இவற்றை முறைப்படி சுத்தி செய்து வகைக்கு 35 கி. எடுக்க.

*வாங்கிய மருந்துக் கெல்லாம்*
*வாளமுஞ் சமனாய்ச் சேர்த்துப்*
*பாங்குடன் சுத்தி செய்து*
*பருப்பினில் நஞ்சு போக்கித்*
*தீங்கில்லா மருந்தை யெல்லாஞ்*
*சேரவே ஒன்றாய்க் கூட்டி*

*ஆங்குள்ள கையான் சாறு*
*அரைத்திடு பத்து நாளே!* 41

வாளத்தை மற்ற சரக்குகளின் எடைக்குச் சமமாக எடுத்து பருப்பினிலுள்ள நஞ்சின் முனையை நீக்கி முறைப்படி சுத்தி செய்து அனைத்து மருந்துச் சரக்குகளுடன் சேர்த்து கையாந்தகரைச் சாற்றினை நாளொன்றுக்கு 1.3 லி. விட்டு பத்து நாட்கள் அரைத்துக் கொள்ளவும்.

*பத்துநா ளரைக்குஞ் சாறு*
*படியொன்று நாளொன் றாக*
*நித்தமு மரைத்து நன்றாய்*
*நீசிறு பயறு போல*
*சுத்தமா நிழலு லர்த்தித்*
*துலங்குநெல் பானையில் வைத்துக்*
*கர்த்தனை நினைந்து நீயுங்*
*கிராணிக்கு மோரில் செய்யே!* 42

அரைத்ததை 32 மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி நெற்பானைக்குள் வைக்கவும். பின் அதனை காலை, மாலை வேளைக் கொன்றாக மோரில் கரைத்துச் சாப்பிட அனைத்துக் கிராணியுந் தீரும். தயிரிலும் கரைத்துக் கொடுக்கலாம்.

*செய்யவே இருநே ரந்தான்*
*செலுத்தொரு உண்டை நீயும்*
*தய்யில்பியக் கிராணிக் கெல்லாந்*
*தயிருடன் செய்ய முன்போல்*
*உய்யவே வயிறு விட்டால்*
*ஓமமும் பழச்சாற் றியே*
*நய்யவே வாய்வு குன்மம்*
*நாட்டிடு மாவி னிரே!* 43

மேற்கூறியவாறு உட்கொள்ளும் போது வயிறு கழிந்தால் ஓமம் கலந்த எலுமிச்சம்பழச்சாற்றில் கொடுக்கலாம். வாய்வு, குன்மத்திற்குக் கோமயத்திலும் கொடுக்கவும்.

*ஆவலா முப்பி சங்கள்*
*அறிந்திடு மேனிச் சாறு*
*போவது பழக்கா மாலை*
*புளியிலை ஈர்க்கில் சாறு*
*மேவிய அண்ட வாதம்*
*விட்டிடு மாவின் பாலில்*
*பாவது பலவி யாதி*
*பறக்குமே தேனில் கொள்ள!* 44

உப்பிசத்திற்குக் குப்பைமேனிச்சாற்றிலும், காமாலைக்குப் புளியிலை ஈர்க்குச் சாற்றிலும், அண்டவாதத்திற்குப் பசுவின் பாலிலும் கொடுக்க குணமாகும். தேனில் கொள்ள பல நோய்களும் நீங்கும்.

*கொள்ளவே வாத மெல்லாங்*
**குங்குமச் சாற்றில் தீரும்*
*மெல்லவே அமர மெல்லாம்*
*விளங்குசீ ரகத்தில் போகும்*
*உள்ளநெஞ் செரிவு கண்டால்*
*உகந்தசர்க் கரையில் கொள்ளு*
*தள்ளிய சர்த்திக் கெல்லாந்*
*தாக்கிட பழச்சாற் றியே!* 45

பலவிதமான வாதங்களுக்குக் குங்குமச் செடியிலைச் சாற்றிலும் கண்டவலி அமரம் அனைத்திற்கும் சீரகத்திலும் நெஞ்செரிவுக்குச் சர்க்கரையிலும் வாந்திக்குப் பழச்சாற்றிலும் கொள்ள குணமாகும்.

*சாற்றுங்கா லிளைப்புக் கெல்லாந்*
*தன்றுசேந் தொட்டிச் சாறு*
*ஆத்திடு அம்மான் பச்சை*
*அரிசிச்சார் நரையை மாற்று*

* குங்குமம் - முழுவிளக்கம் தர இயலவில்லை.

*ஏற்றிடுங் குன்றி முத்து*
*இலைச்சாறு சன்னிக் கெல்லா*
*மாத்துசர்க் கரையு மாகும்*
*வந்திடுந் தினைச்சோ றுண்ணே!* 46

இளைப்பிற்குச் செந்தொட்டிச் சாற்றிலும், நரைக்கு அம்மான் பச்சரிசிச் சாற்றிலும், சன்னிக்குக் குன்றி மணிச் சாற்றிலும் மேற்சொன்ன செந்தூரத்தைக் கொடுக்கவும். சர்க்கரையும் தினைச் சோறும் மாற்றாகும்.

*உண்டிடும் பிரமி யந்தா*
*னுகந்தசெம் பருத்திச் சாறு*
*பண்டுள்ள துளசி யாகும்*
*பழமுடன் சாறு மாகும்*
*நன்றிடு காளிச் சாறும்*
*நல்லெண்ணெய் தலைக்குத் தேய்த்துக்*
*கண்டுநீ முழுகும் போது*
*கழன்றிடும் ரோகந் தானே!* 47

பிரமிச்சாறு, செம்பருத்திச்சாறு, துளசிச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, மணத்தக்காளிச்சாறு, இவற்றுடன் நல்லெண்ணெயும் சேர்த்துத் தலைக்குத் தேய்த்து முழுக வாத நோய்கள் நீங்கும்.

*கழன்றுசி றியதோர் வாதந்*
*தனில்தூது ஆவின் நெய்யில்*
*வளம்பெறப் பாலுஞ் சோறும்*
*வயத்திடு பத்தி யத்தில்*
*உழன்றிடும் வாத மெல்லா*
*மோடிடும் னோய்க்கிக் கையான்*
*தளன்றிடு மாவி நீரில்*
*தள்ளுப்புப் புளியுந் தானே!* 48

தூதுவளைச் சூரணத்தை வாதத்திற்குப் பசுநெய்யில் கொடுக்கவும். பால்சோறு பத்தியமாகும். உப்பு, புளியை நீக்குக. கையாந்தகரைச் சாற்றினால் வேது பிடிக்க உடலிலுள்ள தீயநீர் வெளியேறும்.

*தள்ளிடுங் கிரந்தி வாத*
*மிளகுநீர் வாத மடக்கி*
*உள்ளமு முடம்பு நொந்தால்*
*பருத்திலை மிளகு பூரம்*
*வல்லவே வெதும்பி யிருமல்*
*மருதந்தோடை துளசி கையான்*
*நல்லயிடித்துப் பிட்ட வித்து*
*அதன்சாறருந்த நோய் போமே!* 49

கிரந்தி, வாதத்திற்கு மிளகு நீர் வாத மடக்கியைச் சேர்த்துக் கொள்ளவும். உடல் மிகவும் வலித்தால் பருத்தியிலை, மிளகு, பூரம் இவற்றை மருந்தாய்ப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். மருதம், ஆடாதோடை, துளசி, கையாந்தகரை இவற்றைச் சேர்த்து இடித்துப் பிட்டவித்து அதன் சாற்றினைக் கொடுக்க இருமல், வாதம் ஆகிய நோய்கள் தீரும்.

*நோயா மவர்க்குத் துளசிச் சாறு*
*நோக்குஞ் சர்க்கரை நெய்கூட்டித்*
*தோயு முதிர வாய்வுக்குச்*
*சுக்குக் கிஷாயம் பால்சோறு*
*பேயா முசலின் கண்டவலி*
*பிசகா தோடும் நிலவேம்பின்*
*பாயும் பண்ணி லத்திதனில்*
*பரியி னீரில் நசியமிடே!* 50

உதிர வலிக்கு துளசிச் சாற்றில் சர்க்கரை, நெய்யைச் சேர்த்துக் கொடுக்க குணமாகும். சுக்குக் குடிநீர், பால் சோறு பத்தியமாகக் கொள்ளவும். முயல் கண்ட வலிக்கு நிலவேம்புக் குடிநீரிலும், பன்றிலத்திச் சாற்றிலும், குதிரை நீரிலும் கலந்து நசியமிட குணமாகும்.

*இடுநீ மூல வியாதிக்கு*
*ளாக்கும் சாதிக் காய்போட்டு*
*கொடுநீ மூல ஆசனத்தில்*
*கொள்ள வெள்ளாட் டெருப்புகையில்*

*விடுநீ ஆவி னெய்தூவி*
*வெதும்பப் புகையை யதில்காட்டப்*
*படுமே மூல வியாதியெல்லாம்*
*பறக்கும் புகையைப் பரிந்துசெய்யே!* 51

சாதிக்காய், வெள்ளாட்டுப் புழுக்கையைச் சேர்த்தெரித்த புகையில் பசு நெய்யை ஊற்றி அப்புகையை ஆசன வழியாய்க் காட்ட மூலம் தீரும்.

*செய்யும் னோவு தானறிந்து*
*செலுத்து னாள்மூன் றஞ்சேழில்*
*உய்யும் மாத்திரை யோரொன்று*
*உசித மாக யிருநேரம்*
*நைய்யும் வியாதி போவதற்கு*
*நன்றாய் வைப்பாய் பத்தியந்தான்*
*தைய விதுவே மருந்தொன்று*
*சாந்த மாகப் பரிந்துசெய்யே!* 52

நோயினை அறிந்து மூன்று, ஐந்து, ஏழு என்று நாட்களைக் கூட்டியும் குறைத்தும் வேளைக்கொரு மாத்திரையாக இரு நேரமுங் கொடுத்து பத்தியமாய் இருக்க நோய் தீரும்.

## நாவல் நெய்

*பரிந்துநீ செய்வதற்கு இன்னங் கேளு*
*பண்பாகப் பண்ணுமொரு கிருதஞ் சொல்வேன்*
*வருந்தியே அரைத்துலாம் நாவல் பட்டை*
*வளமாக உலர்த்தியிடி தூள தாக்கி*
*சொரிந்திடுவாய் தூணிநீர் முடாவுக் குள்ளே*
*தூள்போட்டுக் காச்சியிறு யெட்டொன் றாக*
*மருந்துதான் புளியாரைச் சாறு நாழி*
*வடிகொண்ட தயிர்த்தண்ணீர் நாழி கூட்டே!* 53

நீ மருத்துவம் செய்வதற்கு இன்னும் ஒரு நெய் வகையைக் கூறுகிறேன். நாவல் பட்டையை 3.5 கி. எடுத்துக் காயவைத்து இடித்துத் தூளாக்கிக் கொள்க. அதனை 21.5 லி.

தண்ணீரில் போட்டுக் காய்ச்சி எட்டொன்றாய் இறுத்து வைத்துக் கொள்க. புளியாரைச்சாறு, தயிர்த்தண்ணீர் இவற்றை வகைக்கு 1.3 லி. சேர்க்க.

*கூட்டுவாய் ஆவினெய் படிதா னாழி*
*கூவிளம்பூ சர்க்கரையும் பலமூனு சேர்த்து*
*நாட்டியே அதிமதுரம் ஏலம் கோஷ்டம்*
*நன்றான யிலவங்கம் வெள்ளி லோத்திரம்*
*நீட்டியதோர் தாமரையின் வளையங் கூட்டி*
*நினவாக முந்திரிகை வெட்பா லோடு*
*தாட்டிகமாம் இலவம்பிசின் பேரிச் சோடு*
*சந்தனமுஞ் சிறுநாகம் ஆத்திப் பூவே!* 54

வில்வபூ 105 கி. சர்க்கரை, 1.3 லி. பசுநெய் சேர்த்துக் கொள்க. அதிமதுரம், ஏலம், கோட்டம், இலவங்கம், வெள்ளிலோத்திரம், தாமரைவளையம், முந்திரிகை, வெட்பாலை, இலவம்பிசின், பேரீச்சம்பழம், சந்தனம், சிறுநாகப்பூ, ஆத்திப்பூ வகைக்கு 18 கி. சேர்க்க.

*பூவான மாதுளையின் பிஞ்சு கூட்டிப்*
*போவாய் நிலப்பனையின் விழா லரிசி*
*தாவிலா வறட்சுண்டி வகைக்கரைப் பலமும்*
*தனித்தனியே கசாயமிட்டு அரைத்துப் போட்டு*
*பாவகமா யடுப்பேற்றித் தீயை மூட்டு*
*பதங்கண்டு யெரித்திடுவாய் நெய்தா னப்பா*
*ஆவலுடன் நெய்கரண்டி யிருநே ரந்தா*
*னப்பனே அருந்திநோ யகன்று போமே!* 55

மாதுளைப்பிஞ்சு, நிலப்பனை, விழாலரிசி, ஆடுதின்னாப் பாளை, இவற்றை வகைக்கு 18 கி. எடுத்து தனித்தனியே குடிநீரிட்டுப் பின் மேற்சொன்ன மருந்து பொருட்களை அரைத்துச் சேர்த்துக் கொள்க. அடுப்பேற்றி எரித்து நெய் பக்குவமான பிறகு இறக்கி வடித்து வைத்துக் கொள்க. கரண்டியளவு இரண்டு நேரமும் கொடுக்கவும்.

*அகன்றுபோம் ரத்தபித்த மதிசா ரங்கள்*
*அடுத்தபெரும் பாடுவெள்ளை நீர்க்க டுப்பு*
*நகன்றிடுமே யெலும்புருக்கி மேகம் தீரும்*
*நாட்டிலுள்ள நீர்ப்பெருக்கு உழலை விக்கம்*
*மகன்றிடுமே நோயெல்லாம் பறந்து போகும்*
*மக்களே யிம்முறையை வகையி தென்னே!* 56

இரத்த பித்தம், அதிசாரங்கள், பெரும்பாடு, வெள்ளை, நீர்க்கடுப்பு, எலும்புருக்கி, மேகம், நீர்ப்பெருக்கு, உழலை, வீக்கம் ஆகியவை தீரும்.

## கோடா சூரிக் குளிகை

*தென்னவே குளிகை தானுந்*
*திறமுடன் சொல்லக் கேளு*
*இன்மையில் கெந்தி சூத*
*மிருவிசம் நாபி சுக்கு*
*வண்மையா மக்கிரா காரம்*
*மனோசிலை மிளகு நெல்லி*
*உண்மையாய் வெள்ளைப் பூண்டு*
*உடனிரு விஷமுங் கூட்டே!* 57

கெந்தகம், சூதம், நாபி, சுக்கு, அக்கிராகாரம், மனோசிலை, மிளகு, நெல்லி, வெள்ளைப்பூண்டு, கடுக்காய், தான்றிக்காய் இவற்றை வகைக்கு முறையே 35, 70 கி. ஆக எடுத்துக் கொள்க. பாடாணம், மூலிகை இவற்றில் முன்னதை முறையாகச் சுத்தி செய்து பின்னதில் கொட்டை உள்ளவற்றில் அதனை நீக்கியும் முறைப்படி சுத்தி செய்து வகைக்கு 17 கி. எடுத்துக் கொள்க.

*கூட்டிடு கடுக்காய் தாணிக்*
*கொட்டையைப் போக்கி நன்றாய்*
*வாட்டிய மருந்து சுத்தி*
*வகைபல மரையு மொன்றாய்*

*நீட்டிய வாளம் பத்து*
*நிறைசெம்புப் பொடியும் பத்து*
*ஊட்டிய ரசமும் செம்பும்*
*ஒக்கவிட் டரைத்தி டாயே!* 58

தண்ணீர்விட்டான் கிழங்கு எடுத்துக் கொள்ளவும். நேர்வாளத்தை 350 கி. எடுத்து அதே அளவு இரசம், செம்பையும், எடுத்து ஒன்று சேர்த்து அரைத்துக் கொள்க.

*அரைத்தபின் கெந்தி கூட்டி*
*அழுந்தவே மெழுகு போல*
*உரைத்திடும் ரெத்த மெல்லா*
*மொக்கவே ஒன்றாய்க் கூட்டி*
*நிரைத்திடு கையான் சாறு*
*நேகவிட் டரைநா ளேழு*
*முறைப்படி அனுமா னத்தில்*
*மாத்திரை கடுகு முத்தே!* 59

பின் கெந்தகத்தைச் சேர்த்து மெழுகு போல அரைத்து இரத்த போளத்தையும் அதே அளவெடுத்து மேற்கூறிய அனைத்துச் சரக்குகளையும் சேர்த்து கையாந்தகரைச் சாறுவிட்டு ஏழு நாள் அரைத்து கடுகளவில் மாத்திரை செய்து கொள்க.

*முத்திய கிராணி சுக்கு*
*சாதிக்கா யாவின் மோரே*
*வயித்தி லுளைப்பி ருந்தா*
*லாவெண்ணை முருங்கைச் சாறு*
*நித்தமும் வயத்து நோவு*
*பொருமலு மனேகம் பாரில்*
*பத்தியாத் தடவிச் சுட்டுப்*
*பச்சைநீர் தன்னில் கொள்ளே!* 60

கிராணிக்கு சுக்கு, சாதிக்காய் இழைத்த பசுமோரில் மேற்சொன்ன மாத்திரையை இழைத்துக் கொடுக்கவும். வயிற்றில் உளைச்சல் இருப்பின் பசு வெண்ணெயை முருங்கைச்

சாற்றுடன் சேர்த்து அதில் மாத்திரையை இழைத்துக் கொடுக்கவும். வயிற்றுவலி, பொருமலுக்குக் குளிர்ந்த நீரிலும் கொடுக்கலாம்.

*கொள்ளவே பித்த மானால்*
*சர்க்கரை கொள்ளீர் சீனி*
*அள்ளிய பஞ்ச குன்மம்*
*அவுரியின் சார தாகும்*
*வள்ளியின் சிறுகி ழங்கு*
*நொச்சியின் தாது விர்த்தி*
*உள்ளிரு உஷ்ண ரோக*
*மோடிடுங் கழிநீர் தானே!* 61

பித்தத்திற்கு நாட்டுச் சர்க்கரையிலும், ஐந்து வகைக் குன்மத்திற்கு அவுரியின் சாற்றிலும் கொடுக்கவும். வள்ளியின் சிறுகிழங்கை நொச்சியுடன் சேர்த்துக் கொடுக்க தாது விருத்தி யாகும். வெப்ப நோய்கள் தீரும். கெட்டநீர் வெளியேறும்.

*ஓடிடுங் குன்ம மெல்லா*
*மொழிந்திடும் பிரமிச் சாற்றில்*
*வாடுநீ ரடைப்புக் கைமார்*
*வெற்றிலை வளம தாக*
*கூடுத லில்லாப் பெண்ணுங்*
*கொழுநனைப் பத்தி வாழ்க*
*நீடுயர் கருப்புக் கட்டி*
*பிலாவரை வெல்லம் சேரே!* 62

பிரமிச்சாற்றில் கொடுக்க குன்மமும், கம்மாறு வெற்றிலைச் சாற்றில் கொடுக்க நீரடைப்பும், கருப்புக்கட்டி வெல்லம் இவற்றில் கொடுக்க தாது விருத்தியு முண்டாகும்.

*நேரவே வெள்ளோக் காளம்*
*நிகழுஞ் சந்தனம் அரைகடிக்கும்*
*பாரே சீரகம் வெள்ளாட்டுப்*
*பாலுங் கூட்டு நீரடைப்புக்*

*கூறாய்ப் பேதி மிகக்காணக்*
*கூட்டை ஆமணக் கெண்ணைதனில்*
*தீரா விஷமும் பழச்சாற்றில்*
*தேனா மிஞ்சிச் சாற்றில்வையே!* 63

மேற்குறிப்பிட்ட மாத்திரையைச் சந்தனத்தில் கொடுக்க வெள்ளோக்காளமும் சீரகம் கலந்த வெள்ளாட்டுப் பாலில் கொடுக்க நீரடைப்பும், ஆமணக்கெண்ணெயில் இழைத்துக் கொடுக்க கழிச்சலும், எலுமிச்சம்பழச் சாற்றில், தேனில் அல்லது இஞ்சிச் சாற்றில் கொடுக்க தீராத விடமும் தீரும்.

*வைநீ வெள்ளைச் சாரணையில்*
*வளர்கா லெரிவு சீரகத்தில்*
*உய்யும் எலிக்கடி கொத்துமல்லி*
*உடல்மேல் னாற்ற மருந்தாதி*
*அய்யும்பல் லுக்குமணமாம் சாம்பிராணித்*
*தைலத்தில் கொடுத்து மேல்பூசு*
*நெய்யும் நெஞ்சுக் கணைப்புக்கு*
*நாட்டு நன்றாய் வெற்றிலையில்* 64

வெள்ளைச்சாரணைச் சாற்றில் கொடுக்க காலெரிவும், சீரகக் குடிநீரில் கொடுக்க எலிக்கடியும், கொத்துமல்லிக் குடிநீரில் கொடுக்க உடல் நாற்றமும், சாம்பிராணித் தைலத்தில் கொடுத்துப் பல்லில் பூச பல் வலியும், வெற்றிலைச் சாற்றில் கொடுக்க நெஞ்சு கணமும் நீங்கும்.

*இலைதான் குன்மம் பிரமியிலை*
*ஏத்த சுரமுங் கொத்துமல்லி*
*துலையுஞ் சோறு செரியாமந்தம்*
*துலங்கும் பழச்சார் மாதுளையும்*
*மலையாஞ் சேற்றும பித்தமுடன்*
*வையே சீனிச் சக்கரையில்*
*பலனோ யெல்லாஞ் சீரகத்தில்*
*பறக்குந் தாகச் சுரம்நொச்சி!* 65

குன்மத்திற்குப் பிரமியிலைச் சாற்றிலும் சுரத்திற்குக் கொத்துமல்லிக் குடிநீரிலும் செரியாமாந்தத்திற்கு எலுமிச்சம் பழச்சாற்றிலும் மாதுளம்பழச் சாற்றிலும், சிலேத்தும பித்தத்துக்கு நாட்டுச் சர்க்கரையிலும், பல நோய்களுக்குச் சீரகத்திலும், தாக சுரத்திற்கு நொச்சிச் சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*நொச்சி சீத வாத பித்தம்*
*நோக அடிக்கும் கொத்துமல்லி*
*நொச்சி ஓமங் கொத்துமல்லி*
*கொள்ளே சுக்கு விஷசுரமும்*
*பட்சம் வைத்த விடாச்சுரமும்*
*பறக்கு மோமக் கிஷாயத்தில்*
*அச்ச மில்லாச் சன்னியிஞ்சி*
*அடங்கா வியாதிக் கிதுவொன்றே!* 66

சீதவாத பித்தத்திற்கு, கொத்துமல்லிக் குடிநீரிலும் விட சுரத்திற்கு, நொச்சி, ஓமம், கொத்துமல்லி, சுக்கு சேர்ந்த குடிநீரிலும் விடாச்சுரத்திற்கு ஓமக் குடிநீரிலும் சன்னிக்கு இஞ்சிச் சாற்றிலும் கொடுக்க நலமாகும்.

*ஒன்றே போது மிதுவெல்லா*
*மோடித் திரியும் வைத்தியரே*
*நன்றே கோடா குளிகையது*
*நயந்து பாரு வையகத்தில்*
*சென்றே நோய்கள் தீர்வதற்குத்*
*திறமாக் கிருத நெய்சொல்வேன்*
*அன்றே அரனா ருரைத்தபடி*
*அனலை அபிக்கும் படிகேளே!* 67

இந்த 'கோடாசூரிக் குளிகை' என்ற ஒன்றே பல நோய் களைத் தீர்க்கும் திறமிக்கது. நோய்கள் தீருவதற்கு திறமிக்க நெய் ஒன்றைக் கூறுகிறேன். கேட்பீராக. சிவன் கூறியதை உங்களுக்கு கூறுகிறேன் கேட்பீராக.

## நெய்

*அபிக்கு மாவி னெய்ப்படிதான்*
*அதுக்குச் சமன்வல் லாரைச்சார்*
*புவிக்கு மதுர மிளகேலம்*
*புகழ்சீ ரகமும் வால்மிளகு*
*தவிக்கு மரத்தை பலம்வீதம்*
*தாங்கா யரைப்பா யாவின்பால்*
*கவிக்கக் கலக்கிச் சார்நெய்யில்*
*கனலை மூட்டி நெய்வடியே! 68*

பசுநெய், வல்லாரைச்சாறு இவற்றை வகைக்கு 1.3 லி. அதிமதுரம், மிளகு, ஏலம், சீரகம், வால்மிளகு, அரத்தை இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துப் பசும்பால் விட்டரைத்துக் கலந்து நெய்யையும் சேர்த்துக் காய்ச்சி பதத்தில் வடித்து வைத்துக் கொள்க.

*வடிக்கு முட்டி தனிலேதான்*
*வளமாஞ் சாதிக் காய்பத்திரி*
*பொடிக்குங் கிராம்பு அரைப்பலமாம்*
*பொடியாத் தூவி நெய்வடித்துத்*
*துடிக்குஞ் சீனி ரண்டுபத்து*
*தூளாய்க் கூடப் பலம்போடே*
..........................................
.......................................... *69*

அதில் சாதிக்காய், சாதி பத்திரி, கிராம்பு இவற்றை வகைக்கு 17 கி. எடுத்துப் பொடித்துத் தூவிக் கொள்க. 700 கி. சர்க்கரையையும் பொடித்துக் கலந்து கொள்க.

*போடுநீ நெய்வடித்து கடுகு தள்ளிப்*
*புகழாக லேகிப்பாய் நெய்யுஞ் சீனி*
*தாட்டிகமாஞ் சாதிக்காய் பொடியுங் கூட்டித்*
*தளம்பாமல் கைமுறையா யெல்லாங் கூட்டி*

*முட்டுவாய் மண்டலந்தான் கரண்டி விதம்*
*முசியாமல் தீரும்நோய் முக்கிய மாக*
*நாட்டுவாய் மேகமென்ற தெல்லாம் போகும்*
*ஒகோகோ வெள்ளையெல்லா மொழிந்து போமே! 70*

நெய்யில் உள்ள கசடினை நீக்கி வடித்து வேறொரு பாத்திரத்தில் ஊற்றிக் கொள்க. நெய்யும் சீனியும் சேர்த்து இளகமாக்கி சாதிக்காய் பொடியைச் சேர்த்து வைக்க. அதனை ஒரு கரண்டி அளவாக நாற்பது நாட்கள் உட்கொள்ள மேக வகைகள், வெள்ளை நோயின் வகைகள் தீர்ந்து போகும்.

## கொம்மட்டி லேகியம்

*ஒழிந்துவிட இன்னமொரு லேகி யந்தான்*
*உதரத்து நோய்தீர உறுதி யாக*
*அழுந்துங்கொம் மட்டிக்காய் செம்ப ருத்தி*
*ஆனவெள்ளை நொச்சியிஞ்சி வெள்ளைப் பூடு*
*தெளிந்துநீ அஞ்சுவகை சாறு வாங்கி*
*தெளிவாக அஞ்சுபடி சாறு மொன்றாய்*
*கொழுந்துவிடத் தியெரித்து அடுப்பி லேற்றி*
*குறுகவே காய்ச்சியிட மருந்து கேளே! 71*

வயிற்றுநோய் தீர மற்றுமொரு இலேகியத்தைக் கூறுகிறேன். கொம்மட்டி, செம்பருத்தி, வெள்ளை நொச்சி, இஞ்சி, வெள்ளைப்பூண்டு ஆகிய இவ்வைந்தின் சாறுகளை வகைக்கு 1.3 லி. எடுத்து ஒன்று சேர்த்துக் கொள்க. அடுப்பேற்றி சாறு வைத்துள்ள பாத்திரத்தை வைத் தெரிக்கவும்.

*மருந்துரசம் சாதிலிங்கம் காந்தஞ் சுக்கு*
*மாசில்லா இந்துப்பு வாளங் காயம்*
*வருந்தவே மிளகுமஞ்சள் வெந்தயமுங் கூட்டி*
*வளமாகச் சடாமாஞ்சி ஊமத் தோடு*
*பொருந்தவே வகைமூன்று விராகன் வாங்கிப்*
*புகழாக இளவறுப்பாய் வறுத்துக் கொண்டு*

*திருந்தவே பொடிபண்ணிக் கூடப் போட்டுத்*
*திறப்பாக லேகியத்தைச் செய்து பாரே!* 72

அதில் சாதிலிங்கம், காந்தம், சுக்கு, இந்துப்பு, நேர்வாளம், பெருங்காயம், மிளகு, மஞ்சள், வெந்தயம், சடாமாஞ்சில், ஊமத்தம் இவற்றை வகைக்கு 12 கி. எடுத்து இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துப் போட்டுக் கொள்க.

*செய்திடவே மருந்ததனை யுண்ணக் கேளு*
*செலுத்துவாய் தூதுளங்காய் அளவு உண்டை*
*நய்யுமடா குன்மமெட்டுக் கவிசை வாய்வு*
*நாடாது பெருவயிறு மகோத ரங்கள்*
*உய்யுமடா நீராம்ப லுதிர வாய்வு*
*ஓடிவிடுந் திசைவாய்வு சோகை பாண்டு*
*பையவே காமாலை விக்கந் தீரும்*
*பாரமுள்ள வயிற்றுனோய் பறந்து போமே!* 73

நன்றாகக் கிளறி எடுத்து தூதுளங்காய் அளவு உருண்டை செய்து உட்கொள்ள எட்டு வகைக் குன்மம், கவிசை வாய்வு, பெருவயிறு, மகோதரங்கள், நீராம்பல், உதர வாய்வு, தச வாய்வு, சோகை, பாண்டு, காமாலை, வீக்கம், வயிற்றுநோய் ஆகியவை தீரும்.

## கண்டாதி லேகியம்

*பறந்துபோம் கண்டத்து லேகி யந்தான்*
*பண்பாக யிஞ்சிபலம் பத்து வாங்கிச்*
*சுருங்காமல் தோல்போக்கி சிவிக் கொண்டு*
*சுத்தாவி னெய்யில்வறுத்துப் பொடிய தாக்கி*
*சிறந்திட்ட யிலவங்க மோமம் கூட்டி*
*திரிகடுகு அதிமதுரம் சித்த ரத்தை*
*பொருந்துபே ரிலவங்கம் நறுக்கு மூலம்*
*பொற்கடுக்காய் ரோகணியும் புனித மாக்கே!* 74

இஞ்சி 350 கி. எடுத்து தோலினை நீக்கி சிறியதாக வெட்டி நெய்யில் வறுத்துப் பொடித்துக் கொள்க. இலவங்கம், ஓமம்,

திரிகடுகு, அதிமதுரம், சிற்றரத்தை, இலவங்கம், நறுக்கு மூலம், கடுக்காய், கடுகுரோகணி இவற்றை வகைக்கு 12 கி. எடுத்துச் சூரணமாய்ச் செய்து கொள்க.

*புனிதமாய் வகையொன்று விராகன் மூன்று*
*பொடியாக்கி ஒன்றாகப் புகலக் கேளு*
*இனிதான சர்க்கரைதான் பலமு மூன்று*
*இயல்பான நெய்தே னமுரியுங் கூட்டிக்*
*கனியவே பாகுபோல் கிண்டிக் காய்ச்சி*
*கலந்திடுவாய் பொடிதூவிக் கிண்டிக் கிண்டி*
*தனித்தனியே பாக்களவு தின்றா யானால்*
*சகலபித்த வாய்வும்போம் பசியுண் டாமே!* 75

சர்க்கரை 105 கி., நெய், தேன் சேர்த்து பாகாய்க் காய்ச்சிக் கொள்க. அதில் மேற்சொன்ன சூரணத்தைத் தூவிக்கிளறிக் கொள்க. அதனை 2.2 கி. அளவு உட்கொள்ள அனைத்துப் பித்தவாய்வு நீங்கும். பசியுண்டாகும்.

*உண்டான சயமிரும லிளைப்பு ஈளை*
*உளமாந்தை போவதற்கு உறுதி கேளு*
*பண்டான திரிகடுகு சித்த ரத்தை*
*பாங்கான வெண்கார மக்கிரா காரம்*
*தண்டந்த வால்மிளகு....*
*தடையறவே வகைக்குஅரைப் பலமுங் கூட்டி*
*முண்டாமல் தாளிசைதா னாட்டி கூட்டி*
*முசியறவே இருநேர முழுங்கி டாயே!* 76

சுக்கு, மிளகு, திப்பிலி, சிற்றரத்தை, வெண்காரம், அக்கிராகாரம், வால்மிளகு இவற்றை வகைக்கு 18 கி. எடுத்தரைத்து அதில் இலேகியத்தை வைத்து காலை, மாலை இரண்டு நேரமும் விழுங்கிட சயம், இருமல், இளைப்பு, ஈளை, உளைமாந்தை ஆகிய நோய்கள் தீரும்.

*முழுங்கவே சூரணித்து வைத்துக் கொண்டு*
*முசியாமல் தேனிஞ்சி பாலில் கொள்ளு*

*வழுந்தும்னோ யெல்லாம்போங் குளிர்ச்சி யாகும்*
*அப்பனே சயக்காய்ச்ச லெல்லாம் போகும்*
*பழந்தேங்காய் புளிப்புகையுந் தள்ளி விட்டு*
*பத்தியம்நீ காத்துண்டால் பலனு முண்டு*
*களங்கமறத் தயிலம்வைத்து முழுகி வந்தால்*
*காந்தியுண்டா மேனியெல்லாங் கதிக்கும் வென்னீர்! 77*

மேற்குறிப்பிட்ட சூரணத்தைத் தேன், இஞ்சி, பால் இவற்றில் உட்கொண்டால் நோய் நீங்கி குளிர்ச்சியாகும். சயத்தினால் வரும் காய்ச்சல் நீங்கும். பழைய தேங்காய், புளி, புகை இவற்றை நீக்குக. கீழ்வரும் தைலத்தைத் தேய்த்து வெந்நீர் விட்டு தலை முழுகி புளி, தயிர், பால், புகையிலை இவற்றை நீக்க நோய்கள் நீங்கும். உடலில் ஒளியும் அழகும் உண்டாகும்.

### மந்தாரக் காசத் தைலம்

*வென்னீர்தான் விளவாமல் முழுக நன்று*
*வீரான புளிதயிர்பால் புகையும் விட்டுத்*
*தண்ணீர்போல் நோய்களெல்லாம் விட்டே போகும்*
*சாற்றுகிறேன் மந்தாரக் காசத் தயிலம்*
*பன்னீர்போல் தெளிவதற்கு கிஷாய கற்கம்*
*பாடுகிறேன் புலத்தியனே பகரக் கேளு*
*நண்ணியதோர் குறுந்தொட்டி பொன்னாங் காணி*
*நல்லவட்டத் துத்திவேர் சீந்தித் தண்டே! 78*

மந்தாரக் காசத் தைலம் பன்னீர் போன்று தெளிவதற்காக குடிநீருக்கு உபயோகப்படும் கற்க வகைகளைப் புலத்தியன் கூறக் கேட்பீர்களாக. குறுந்தொட்டி, பொன்னாங்காணி, வட்டத் துத்திவேர், சீந்தில் தண்டு இவற்றை எடுக்கவும்.

*சிந்திலொடு முடக்கொத்தான் செங்கழுநீர் கோட்டம்*
*சிறந்தநிலப் பனைக்கிழங்கு நீர்வள்ளிக் கிழங்கு*
*புகழ்ந்தஅல்லி தாமரைவேர் லாமிச் சம்வேர்*
*புகழால விழுதுவரசின் பட்டை யோடு*
*சேர்ந்தமலை தாங்கிவேர் நீர்ப்பூ லாவேர்*
*திரிகடுகு வகையொன்று பலந்தான் மூன்று*

*சேர்த்திடித்துச் சிலங்குறுணி தானும் விட்டுச்*
*செலுத்துநீ மிடாவிலிட்டுத் தீயை மூட்டே!* 79

முடக்கொத்தான், செங்கழுநீர், கோட்டம், நிலப்பனைக் கிழங்கு, நீர்வள்ளிக்கிழங்கு, அல்லி, தாமரை, விலாமிச்சம் இவை மூன்றின்வேர், ஆலம்விழுது, அரசம்பட்டை, மலை தாங்கி வேர், நீர்ப்பூலாவேர், சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றை வகைக்கு 105 கி. எடுத்து ஒன்று சேர்த்து நைய இடித்து 5.3 லி. தண்ணீர் விட்டு அனலில் வைக்க.

*தீமூட்டி யெட்டொன்றாய்க் காய்ச்சி வாங்கிச்*
*சீலைவடி கொண்டுபின்பு செப்பக் கேளு*
*நெய்யுடன் மருந்தையெல்லாங் கற்கஞ் சேர்க்க*
*நிகழ்த்துகிறேன் ஏலம்மில வங்க மதுரம்*
*மாயமர மஞ்சள் சாத்திர பேதி*
*வாய்விளங்கங் கச்சோலம் நாகங் கோஷ்டம்*
*நாய்முள்ளி சதகுப்பை சாதிக் காயும்*
*நல்லசிறு தேக்கரத்தை செவ்வியங் கூட்டே!* 80

எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க. ஏலம், இலவங்கம், அதிமதுரம், மரமஞ்சள், சாத்திரபேதி, வாய்விடங்கம், கச்சோலம், நாகம், கோட்டம், நாய்முள்ளி, சதகுப்பை, சாதிக்காய், சிறுதேக்கு, அரத்தை எடுக்க.

*செவியமொடு செண்பகப்பூ தேவ தாரம்*
*திகைத்திடவே வகையொன்று கழஞ்சி மூன்று*
*கவியமுள்ளி நெல்லிகெந்தங் கஸ்தூரி மஞ்சள்*
*கூறாய்புண் ணாக்குவேர் சாதி பத்திரி*
*நயமுறுகோ தும்பைகி ராம்புனாற் கழஞ்சி*
*நல்லசெஞ் சந்தனமுடன் கொத்து மல்லி*
*பவியவே சமன்கூட்டி மருந்தை யெல்லாம்*
*பண்பாக அரைத்துநீ கிஷாயத் தூட்டே!* 81

செவ்வியம், செண்பகப்பூ, தேவதாரம் இவற்றை வகைக்கு 15 கி. எடுக்க. முள்ளி, நெல்லிக்காய்க் கெந்தகம், கஸ்தூரி மஞ்சள், பிண்ணாக்குவேர், சாதிபத்திரி, கோதுமை, கிராம்பு, செஞ்சந்தனம், கொத்துமல்லி இவற்றை வகைக்கு 20 கி. எடுத்து இவ்வனைத்து மருந்துப் பொருட்களை நன்கு அரைத்து நெய்யுடன் முற்சொன்ன குடிநீரில் கலந்து கொள்க.

*ஊட்டியபின் அடுப்பேற்றி எண்ணெய்படி விட்டு*
*உருகாமல் தீமூட்டி வற்றக் காய்ச்சி*
*நீட்டியதோர் மெழுகுபத மான வாறே*
*நீயிறக்கி வடித்திடுவாய் கலசத் துள்ளே*
*தாட்டிகமாய் குங்குமங்கஸ் தூரி புனுகு*
*சட்டமுடன் கோரோசினை சமங்க ழஞ்சி*
*நாட்டியே நறுக்கிடுவாய் தைலந் தன்னில்*
*நலமாக நெல்புடனிவைத்து மூழ்கே!* 82

அக்கலவையை அடுப்பில் வைத்து எண்ணெய் 1.3 லி. சேர்த்து அனல் போட்டு நன்கு வற்றுமாறு காய்ச்சிக் கொள்க. மெழுகு பதமாய் இறக்கி வடித்து கலசத்தில் ஊற்றிக் கொள்க. குங்குமம், கஸ்தூரி, புனுகு, கோரோசனை இவற்றை வகைக்கு 5 கி. எடுத்துப் பொடித்து தைலத்தில் கலந்து கொள்க. நெல் புடத்தில் வைத்து குறிப்பிட்ட நாட்கள் கழிந்த பிறகு எடுத்து தலை முழுகிக் கொள்க.

*மூழ்கடா சியக்கா யரைப்பு வெந்நீர்*
*மோசமில்லை புளிபுகைபால் தயிர்மோர் தள்ளு*
*மூழ்கடா முறையோடே மற்றநாள் கூட்டு*
*உறுதியுண்டாங் குமரியென்றுந் தைலத் துக்கு*
*மூழ்கடா தலைநோய் கண்ணோய் தீர*
*மூர்க்கமுள்ள உள்சூடு காந்தல் தீரும்*
*மூழ்கடா திரேகமோடு காந்தல் காணா*
*மூத்திரநீர்ச் சுருக்குமும் மலம்போங் காணே!* 83

சீயக்காய், அரைப்பினால் தேய்த்து வெந்நீரில் முழுகி, புளி, புகை, பால், தயிர், மோர் இவற்றை நீக்க வேண்டும். முழுகாத நாட்களுக்கு இவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். இத்தைலம் முழுகிவர தலைநோய், கண்ணோய், உட்சூடு, காந்தல், உடல் சூடு, மூத்திரநீர் எரிப்பு ஆகிய நோய்கள் தீரும், மலக்கட்டு நீங்கும்.

### கலிக்கம்

*காணவே கலிக்கமொன்று சொல்லக் கேளு*
*கறிமிளகு முக்கழஞ்சி கல்வத் திட்டு*
*ஊணவே திப்பிலிமுக் கழஞ்சி கூட்டி*
*உரைப்பான சுக்குமோர் கழஞ்சி கூட்டிப்*
*பூணவே சமுத்திராப் பழங்க ழஞ்சி*
*புகழ்சுத்தி வாளமொரு கழஞ்சி கூட்டித்*
*தோணவே சாரணைவெற் றிலையின் சாற்றால்*
*துவளவரைத்தே குளிகை துலக்கு வாயே!* 84

கலிக்கமொன்றினை நான் கூறக் கேளுங்கள். கறிமிளகு, திப்பிலி இவற்றை வகைக்கு 15 கி., சுக்கு, சமுத்திராப்பழம், நேர்வாளம் இவற்றை வகைக்கு 5 கி. எடுத்து சேர்த்துச் சாரணை, வெற்றிலையின் சாற்றில் அரைத்துக் குளிகைகளாகச் செய்து கொள்க. அதனை இழைத்துக் கண்ணில் விட நோய் தீரும்.

### சூரணம்

*துலங்கவே சூரணந்தான் இன்னங் கேளு*
*சுக்கோமஞ் சீரகமு மிளகிந் துப்பு*
*மலங்காமல் சம்பு வலம்புரியும் இடம்புரியும்*
*மறுகுசிறு திப்பிலியுஞ் சாதிக் காயும்*
*பிலங்கான பத்திரியும் பற்ப டாகம்*
*பேசியதோர் சதகுப்பை மதுரங்கோ ரோசனை*
*கலங்காமல் விழலரிசி கரப்பான் பட்டை*
*கைமுறையாம் வகையொன்று பலமுஞ் சேரே!* 85

சுக்கு, ஓமம், சீரகம், மிளகு, இந்துப்பு, நாவல், வலம்புரிக்காய், இடம்புரிக்காய், சிறுதிப்பிலி, சாதிக்காய், சாதிபத்திரி, பற்படாகம், சதகுப்பை, அதிமதுரம், கோரோசனை, விழலரிசி, பூதகரப்பான்பட்டை இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துச் சூரணமாக்கிக் கொள்க.

*சேர்த்திட்ட மருந்தையெல்லாந் தூள தாக்கிச்*
*சென்னா யுருவிகையான் கழுதை முள்ளி*
*போற்றிடவே காட்டுமல் லிகையுங் கூட்டிப்*
*புருவமுடன் நாலுபிடி வறுத்துச் சாம்பல்*
*காத்திடவே ரெண்டுமொன்றாய்ச் சேர்த்துக் கொண்டு*
*கானகத்துக் கிட்டமஞ்சு பலமுந் தேடி*
*வார்த்திடுவாய் மேதைபசு ஆட்டி னீரும்*
*மறவாமல் மோர்கூட மதிப்பொண் ணாமே!* 86

செந்நாயுருவி, கையாந்தகரை, கழுதைமுள்ளி, காட்டு மல்லிகை, இவற்றை நான்குபிடி எடுத்து வறுத்துச் சாம்பலாக்கிக் கொள்க. மேற்கூறிய சூரணத்தையும் இச்சாம்பலையும் சேர்த்துக் கொள்க. காட்டு விலங்குகளின் மலம் 105 கி. எடுத்து அதனுடன் எருமை சிறுநீர், கோமியம், ஆட்டின் சிறுநீர், மோர் இவற்றைச் சேர்த்துக் கொள்ளவும்.

*மதிப்புடனே மோர்நீரும் பானை சேர்த்து*
*மறக்காமல் கிட்டத்துக் குள்ளே வைத்து*
*கதிப்பாகப் பத்துனா ளூற விட்டுக்*
*காயவைத்து எடுத்துநன்றாய்த் தூள தாக்கி*
*விதிப்படியே மூன்றுமொன்றாய்ச் சேர்த்துக் கொண்டு*
*வெருகடிதா னறுபதுனாள் தின்பா யானால்*
*புதுப்பானை ஈயதுபோல் னோய்கள் போகும்*
*பொய்யல்ல புளிப்புகையுந் தவர்த்தி டீரே!* 87

பத்துநாள் ஊற வைத்தெடுத்து உலர வைத்து நன்கு சூரணமாக்கிக் கொள்க. மேற்சொன்ன இரண்டுடன் இதனையும் சேர்த்து மூன்று விரலளவு பத்து நாட்கள் உட்கொள்ள

நோய்கள் (புதுப்பானையைச் சேராத ஈக்கள் போல்) நீங்கும். புளி புகையை நீக்கி விட வேண்டும்.

### மண்டூரக் குளிகை

*தவித்திடவே மண்டூரக் குளிகை கேளு*
*தனிநூறு வருஷமது கிட்டங் கொண்டு*
*நவித்திடுநீ பொடியாக்கி உருக்கக் கொல்லன்*
*நன்றாக கரைச்சுருக்கி ஆவி நீரில்*
*கவித்திடுவாய் னாலுதிரங் காய்ச்சிக் காய்ச்சிக்*
*கலங்காமல் கோமியத்தி லரைத்து நன்றா*
*யவித்திடுநீ ஆவிநீர் தனில்க ரைத்து*
*அடிப்பற்றாக் கரண்டியினால் குறுகக் காய்ச்சே! 88*

நூறு வருஷமான கிட்டத்தைப் பொடித்து உருக்கி கோமியத்தில் ஊற்றி நான்கு முறை காய்ச்சி மீண்டும் கோமியத் திலேயே அரைத்து அதிலேயே கரைத்து அடி பிடிக்காமல் மரக்கரண்டியால் கிளறிக் கொள்க.

*காய்ச்சியதோர் மருந்துதனை வெயிலில் வைத்து*
*களங்கமறக் கிண்டியே உலர வைப்பாய்*
*தாட்சியல்லா சீலைவடி கொண்டு நன்றாய்*
*தருவான சீரகமோ ரண்டு மிந்து*
*பாச்சிடுவாய் திரிகடுகு திரிப லாதி*
*பகர்ந்திடு ஓமம்பெருங் காயங் கூட்டி*
*மாச்சிடவே வகையொன்று பல மொன் றாக*
*வறுத்திடுநீ பொடியாக்கி முன்பொடியுங் கூட்டே! 89*

அதனை வெயிலில் வைத்து நன்கு கிளறி காய வைத்து துணியில் வடிகட்டி வைத்துக் கொள்க. நற்சீரகம், கருஞ்சீரகம், இந்துப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஓமம், பெருங்காயம் இவற்றை வகைக்கு 35 கி. எடுத்து வறுத்து முறைப்படி சூரணமாக்கிக் கொள்க. மேற்கூறிய பொடியுடன் கலந்து கொள்க.

*கூட்டியே கரந்தைச்சார் சார ணைச்சார்*
*குறையாமல் துளசிச்சார் கையான் சாறும்*
*வாட்டமில்லா நாளொன்று சாறொன் றாக*
*வகைவகையாத் தானரைத்து உலர வைத்துத்*
*தாட்டிகமா னாலுனாழி சாறு நாலுந்*
*தனித்தனியே அரைத்தரைத்து உலர வைத்து*
*மூட்டுவாய் தேன்வார்த்து அரைத்துச் சேர்த்து*
*முசியாமல் சுண்டைக்காய் அளவு கொள்வாய்! 90*

இச்சூரணத்தில் கரந்தை, சாரணை, துளசி, கையாந்தகரை ஆகிய சாறுகளை வகைக்கு 1.3 லி. எடுத்து ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றாக விட்டரைத்துக் காய வைத்துக் கொள்க. பின் தேனினைச் சேர்த்தரைத்துச் சுண்டைக்காயளவுள்ள குளிகை களாகச் செய்து கொள்க.

*கொள்ளுவா யிருபதுனா ளிருநே ரந்தான்*
*கூசாமல் சோகை காமாலை பாண்டு*
*தள்ளுமடா நோயெல்லாம் நொறுக்கிப் போடும்*
*தருகாம லிருநேரஞ் சார்ந்து பாரு*
*வள்ளலே புளிப்புகையுங் கைப்புந் தள்ளு*
*மாசில்லா மேனியெல்லாம் வச்சிர மாகும்·*
*உள்ளபடி சொல்லிவிட்டேன் குளிகை தன்னை*
*உத்தமமா மொன்றுசொல்லி யுகந்து பாரே! 91*

காலை, மாலை, இரண்டு நேரமும் இருபது நாட்கள் கொள்ள சோகை, காமாலை, பாண்டு ஆகிய நோய்கள் தீரும். புளி, புகை, கசப்புப் பண்டங்களை நீக்கவும். உடல் வச்சிராயுதம் போன்று உறுதியாகும்.

## பித்த காமாலை நெய்

*உகந்துநீ பார்ப்பதற்குக் கிருதங் கேளு*
*முறுதியாங் காந்தங்கிட்டம் லோக மிந்து*
*பகர்ந்திடவே வகையொன்று பலமஞ் சாகப்*
*பதறாமல் மாவாக்கி வைத்துக் கொண்டு*

*தகர்ந்திடவே திரிகடுகு கடுக்காய்ப் பூவும்*
*சமைத்திடுவாய் ஓமம்நேர் வாளஞ் சுத்தி*
*அகந்தனிலே சீரகந்தான் ரெண்டு கூட்டி*
*அப்பனே வகையாகப் பலமும் வாங்கே!* 92

மருத்துவம் செய்வதற்கு மற்றுமொரு நெய்யைக் கூறுகிறேன் கேளுங்கள். காந்தம், கிட்டம், இரும்பு, இந்துப்பு இவற்றை வகைக்கு 105 கி. எடுத்துப் பொடித்துக் கொள்க. சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்ப்பூ, ஓமம், சுத்தி செய்த நேர்வாளம், நற்சீரகம், பெருஞ்சீரகம் இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துச் சூரணம் செய்து கொள்க.

*பலம்வாங்கி முன்பொடியு மொன்றாய்ச் சேர்த்துப்*
*பதறாமல் கையான்சார் தன்னி லாட்டி*
*மலையாமல் சம்பழமோ ரெண்டு பத்து*
*வாய்கீறிப் பிளந்துநன்றாய் வைத்துக் கொண்டு*
*துலையவே மருந்தையதற் குள்ளே வைத்துத்*
*துவட்டிடவே நல்லெண்ணெய் கூட விட்டு*
*அலையாமல் சட்டியிட்டு அடுப்பி லேற்றி*
*அவித்துநீ எண்ணெயுடன் கடுகு தின்னே!* 93

முன்சொன்ன சூரணத்துடன் கலந்து கையாந்தகரைச் சாற்றால் அரைத்துக் கொள்க. எலுமிச்சம்பழம் இருபதை எடுத்துக் கீறி அதனுள் சூரணத்தை வைத்துத் திணித்து நல்லெண்ணெயையும் சேர்த்துச் சட்டியில் போட்டுக் கொள்க. அடுப்பேற்றி சட்டியிலுள்ளதை வேக வைத்து எண்ணெயுடன் சேர்த்து மருந்தையும் சாப்பிட வேண்டும்.

*தின்னவே அறுபதுநாள் பத்தி யந்தான்*
*தினந்தூதுக் காயிலையும் பூவுங் கூட்டு*
*சொன்னதொரு முருங்கையிலைக் காயு மாகும்*
*துலங்கவே முளைக்கீரைத் தண்டு மாகும்*
*வன்னியிலே உப்பதனை வறுத்துக் கூட்டு*
*மகோதரங் காமாலை பித்தபாண்டு தீரும்*

*அன்னமே வியாதியெல்லா மற்றுப் போகும்*
*அய்யமில்லை இந்தமுறை அறிந்து பாரே!* 94

அறுபது நாள் பத்தியத்துடன் இம்மருந்தை உட்கொண்டால் மகோதரம், காமாலை, பித்தபாண்டு, ஆகிய நோய்கள் தீரும். தூதுவளைக்காய், இலை, பூ, முருங்கையிலை, முருங்கைக்காய், முளைக்கீரை, தண்டு இவற்றைத் தினமும் சேர்த்துக் கொள்ள வேண்டும். உப்பினை வறுத்து உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

## சஞ்சீவிக் குளிகை

*பார்க்கு வகைக் கின்னமொரு*
*குளிகை வகையைச் சொல்வேன்கேள்*
*ஊர்க்கு முள்ள வியாதிகட்கு*
*உறுதி யாக மருந்தொன்று*
*தீர்க்கும் வியாதிக் கனுபானஞ்*
*செலுத்த நன்றா யப்பாகேள்*
*மார்க்கங் குளிகை சஞ்சீவி*
*மலையா திருந்து வகைநாடே!* 95

மற்றுமொரு குளிகை வகையினைக் கூறுகிறேன் கேளுங்கள். நோய்கட்கு ஏற்ற மருந்தினைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க நோய்கள் தீரும்.

*நாவி தாரங் கெந்தியிருவி*
*நல்ல யிரதம் வெண்காரம்*
*மேவுங் களஞ்சி வகைமூன்று*
*விளங்கு திப்பிலி மிளகுசுக்கு*
*காவில் கடுக்காய் தான்றியுடன்*
*கனத்த வகைக்கு நாற்களஞ்சி*
*தாழ்வில் லாமல் சுத்தியுடன்*
*சமனாய் வாளஞ் சரியிடையே!* 96

நாபி, அரிதாரம், கெந்தகம், இருவி, இரசம், வெண்காரம், இவற்றை வகைக்கு 105 கி. திப்பிலி, மிளகு, சுக்கு, கடுக்காய்,

தான்றி இவற்றை வகைக்கு 20 கி. எடுத்துச் சுத்தி செய்து கொள்க. இவ்வெடைக்குச் சமஅளவு நேர்வாளத்தை எடுத்துக் கொள்க.

*இடைதான் சேர்த்து னொச்சிச் சார்*
*ஏற்க வென்றாய்த் தானரைத்து*
*அடவாய் முருக்கின் சாறொருநா*
*ளப்பால் குப்பை மேனியொன்று*
*தொடராக் கையான் சாறொருநாள்*
*தோடை யிலைச்சா றொருநாளே*
*இடைதான் விடாம லஞ்சுநாள்*
*இளக அரைத்தே மிளகளவே!* 97

இச்சரக்குகளை நொச்சி, முருக்கு, குப்பைமேனி, கையாந்தகரை, ஆடாதோடை இவற்றின் இலைச்சாறுகளை விட்டு ஒவ்வொரு நாளும் அரைத்து மிளகளவுள்ள மாத்திரை களாகச் செய்து கொள்ளவும்.

*அளவா யரைத்து நிழலுலர்த்தி*
*ஆகுங் கபால சூலைக்கிப்*
*புளக மாக ஆவின்பால்*
*போட்டுக் கரைத்து உள்ளருந்த*
*தளமா மேலுந் தான்பூசித்*
*தவிர்க்க உப்புப் புளிபுகையும்*
*நலமாம் மண்டைக் கரப்பனுக்கு*
*நாட்டு மேனிச் சாற்றிலிடே!* 98

நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும். கபால சூலைக்குப் பசும்பாலில் கரைத்துக் கொடுத்து மேலுக்கும் பூசி உப்பு, புளி, புகையை நீக்க குணமாகும். மண்டைக் கரப்பானுக்குக் குப்பைமேனிச் சாற்றில் உரைத்துக் கொடுக்க நலமாகும்.

*இடவே மேலுந் தான்பூசி*
*யெல்லாக் கரப்பான் செருப்படிச்சார்*
*தொடுமே கபால குட்டமெல்லாந்*
*துலங்கு வேலிப் பருத்திச்சார்*

*அடவாங் கால விப்புருதிக்கி*
*ஆகு முத்தா மணியிலைச்சார்*
*படுமே னோவு ஒருத்தலைக்கிப்*
*பாங்கா நாரத்தம் பழச்சாறே!* 99

அனைத்துக் கரப்பானுக்கும் செருப்படிச் சாற்றிலும் கபால குட்டத்திற்கு வேலிப் பருத்திச் சாற்றிலும் விப்புருதிக்கு உத்தாமணியிலைச் சாற்றிலும் ஒரு தலைவலிக்கு நாரத்தம் பழச்சாற்றிலும் கொடுக்க நலமாகும்.

*பழகும் படலி மணலிச்சார்*
*பறக்குங் காசம் காக்கணஞ்சார்*
*அளவாம் நீல காசத்துக்*
*காகும் வெள்ளைக் காக்கணம்பூக்*
*குலையு மந்த காசத்துக்குக்*
*குடுநீ குட்டித் தக்காளித்*
*தழையுங் கண்ணில் பூவுக்குத்*
*தகும்வேப் பெண்ணெய் தனில் வையே!* 100

மணலிச்சாற்றில் கொடுக்க கண்படலம் நீங்கும். காக்கணஞ் சாற்றில் கொடுக்க காசமும் வெள்ளைக் காக்கணம் பூச்சாற்றில் கொடுக்க நீல காசமும் குட்டித்தக்காளி இலைச் சாற்றில் உரைத்துக் கொடுக்க மந்த காசமும் வேப்பெண்ணெயில் இழைத்துக் கொடுக்க கண் பூவும் தீரும்.

*வையே கண்ணி னோய்க்கெல்லா*
*மாதர் முலைப்பால் தன்னிலிடு*
*செய்யுங் கரஞ்செஞ் சந்தனமும்*
*செலுத்தும் போகம் பசுவினெய்யும்*
*பய்யுஞ் சுக்கிலப் படுவனுக்குப்*
*பகரும் புள்ளடிச் சாற்றிலிட*
*அய்ய முடைய கண்ணமர*
*மாகும் வேப்பிலைச் சாற்றிலிடே!* 101

கண்ணிலுள்ள நோய்களுக்கெல்லாம் தாய்ப்பாலில் கலந்து கலிக்கமிட குணமாகும். போகத்திற்குப் பசுவின் நெய்யிலும், சுக்கிலப் படுவனுக்குப் புள்ளடிச் சாற்றிலும், கண் அமரத்திற்கு வேப்பிலைச் சாற்றிலும் கொடுக்க நலமாகும்.

*இடுநீ இரண சுக்கிரனுக்*
*கேற்கு மூமத்தஞ் சாற்றில்*
*தொடுநீ னந்தப் படுவனுக்குத்*
*துலங்கு வேப்பம் பட்டைச்சார்*
*கடுகில் கண்ணில் புழுவெட்டுக்*
*கசக்கி முருக்கிலைச் சாற்றிலிட*
*முடுகுக் கண்ணு முழிப்பதற்கு*
*மூத்திரந் தன்னி லிடப்போமே!* 102

இரண சுக்கிரனுக்கு ஊமத்தஞ் சாற்றிலும், படுவனுக்கு வேப்பம் பட்டைச் சாற்றிலும், கண்ணிலுள்ள புழுவெட்டுக்கு முருக்கிலைச் சாற்றிலும், கண்ணின் பார்வை சிறப்பாய் அமைவதற்குச் சிறுநீரிலும் இழைத்திட குணமாகும்.

*போமே கெட்டுங் கரப்பனுக்கு*
*புற்றும் பேரண்டச் சாற்றிலிட*
*ஆமே பித்தக் கரப்பனுக்கு*
*ஆகுங் கருஞ்சீ ரகந்தன்னில்*
*காமக் கிரந்தி யுள்ளதெல்லாங்*
*காணா தோடைச் சாற்றிலிடத்*
*தாமே வாத வாய்வுக்குத்*
*தளரும் வெற்றிலை தனில்பகரே!* 103

கரப்பானுக்குப் பேரண்டச் சாற்றிலும், பித்தக் கரப்பானுக்குக் கருஞ்சீரகத்திலும், கிரந்திக்கு ஆடாதோடைச் சாற்றிலும், வாத வாய்வுக்கு வெற்றிலைச் சாற்றிலும் கொடுக்க நலமாகும்.

*பகரும் வெந்தயம் வாய்வுக்குப்*
*பறக்குஞ் சேற்றுமங் கொள்ளுப் போட்டு*

*தகரில்லாத வயிர்க மிந்தால்*
*தாக்கு அத்திப் பட்டைச்சார்*
*அகமே கிராணிக் கெருமைவெண்ணெய்*
*ஆகுஞ் சீத கிராணிரெத்தம்*
*துகையாம் வாய்வு கிராணிக்குத்*
*துலங்கும் பாவட்டை சுரதம் வையே!* 104

வாய்வுக்கு வெந்தயத்துடனும் சிலேத்துமத்துக்குக் கொள்ளுடனும், கழிச்சலுக்கு அத்திப்பட்டைச் சாற்றிலும், கிராணி, சீதக் கழிச்சல், இரத்தக் கழிச்சலுக்கு எருமை வெண்ணெயிலும், வாய்வு கிராணிக்கு பாவட்டை சுரசத்திலும் கொடுக்க குணமாகும்.

*சுரத மெட்டுக் கிராணிக்குத்*
*துலங்கு மெருமைத் தயிராகும்*
*விரத விரோசன மிளகிலிட*
*விளங்கு குன்ம மெருமைநீர்*
*பரத வலிக்கும் வலிகுன்மம்*
*பகரு முருங்கைச் சாற்றிலிட்டு*
*இரதங் குன்ம வாய்வுக்கு*
*ஏற்கும் வில்வக் கருக்குவையே!* 105

எட்டுவகைக் கிராணிக்கு எருமைத்தயிரிலும், கழிச்சலுக்கு மிளகிலும், குன்மத்திற்கு எருமை சிறுநீரிலும் வலி குன்மத்திற்கு முருங்கைச் சாற்றிலும், குன்ம வாய்விற்கு வில்வ கருக்குக் குடிநீரிலும் இழைத்துக் கொடுக்க சுகமாகும்.

*கருக்குஞ் சத்திக் குன்மத்துக்கு*
*கசாயம் வில்வச் சாற்றிலிட*
*உருக்கும் வயிற்றில் வலிகண்டால்*
*ஒடு மாவி லிங்கச் சார்*
*பருக்கு மேலி கவிசைக்குப்*
*பகருந் தகரை இலைச்சாறும்*
*பெருக்கும் பித்த வாய்வுக்கும்*
*பேசு நீலிச் சாறாமே!* 106

சத்திக் குன்மத்திற்கு வில்வச் சாற்றுக் குடிநீரிலும், வயிற்றுவலிக்கு மாவிலிங்கச் சாற்றிலும், மேல் கவிசைக்குத் தகரை இலைச் சாற்றிலும், பித்த வாய்வுக்கு நீலிச் சாற்றிலும் மேற்சொன்ன சஞ்சீவிக் குளிகையை இழைத்துக் கொடுக்க குணமாகும்.

*நீலி காது வெளிச்சிக்கு*
*நிகழ்கீழ் நெல்லிச் சாறாகும்*
*காலில் வாத முடக்கொத்தான்*
*களறுந் துணுவாந் துடரியிலை*
*சூலை விரணம் வாதமெல்லாந்*
*துலையுஞ் சாரணை இலைச்சாற்றில்*
*மேலுங் கடுக்காய்ச் சாற்றிலிட*
*விழியில் வாதம் போம்பெண்ணே!* 107

காதெழுச்சிக்கு கீழாநெல்லிச் சாற்றிலும், காலில் வாதத்திற்கு முடக்கொத்தான் சாற்றிலும், துடரியிலைச் சாற்றிலும், சூலை, விரணம், வாதத்திற்குச் சாரணை இலைச் சாற்றிலும், கண்ணிலுள்ள நோய்க்குக் கடுக்காய்ச் சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*பெண்ணே பல்லடி வாதம்போம்*
*பெருகுஞ் சுக்கு நீரிலிடக்*
*கண்ணே துடிப்பு வாதமெல்லாங்*
*கலங்கும் பழத்தின் சாறதனால்*
*அண்ணே ஊது வாதமெல்லாம்*
*மயங்க வடிக்கு மழிஞ்சிக்கு*
*திண்ணக் கொடுப்பர் தழுதழைச்சார்*
*தீருஞ் சூலை வாதமும்போம்!* 108

பல்லடி வாதத்திற்குச் சுக்குநீரிலும், துடிப்பு வாதமனைத் திற்கும் எலுமிச்சம் பழச்சாற்றிலும், ஊதுவாதமனைத்திற்கும் அழிஞ்சில் சாற்றிலும், சூலை வாதத்திற்குத் தழுதாழைச் சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*வாத மான மடக்கதெல்லா*
*மடிக்குங் கழற்சிப் பருப்பதனால்*
*பாதங் குறியில் வாதமெல்லாம்*
*பறக்கு மூவரி மண்ணிலிட*
*நீத முடனே ஆசனத்தில்*
*நெருக்கும் பிளவை பசுவின்பால்*
*சூதந் தண்டில் பிளவைக்குத்*
*துலங்கும் பொன்னாங் காணிச்சார்!* 109

அனைத்து வாதத்திற்குக் கழற்சிப் பருப்பிலும், பாதம், ஆண், பெண் குறி வாதத்திற்கும் ஆசனத்தில் ஏற்படும் பிளவைக்கும் பசுவின் பாலிலும், ஆண்குறித்தண்டில் ஏற்படும் பிளவைக்குப் பொன்னாங்காணிச் சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*சாறே உச்சிப் பிளவைக்குத்*
*தாக்கும் பசுவி னெய்யுடனே*
*வாறே பித்த சுரமுலைப்பால்*
*வாங்குஞ் சன்னி முசுறுமுட்டை*
*சேரே வாத சுரத்துக்குச்*
*செலுத்து நொச்சிச் சாற்றிலிடப்*
*பாரே பித்த சன்னிகண்டால்*
*பறக்கு மூனா இலைச்சாறே!* 110

உச்சியில் ஏற்படும் பிளவைக்குப் பசுவின் நெய்யிலும், பித்த சுரத்திற்குத் தாய்ப்பாலிலும், சன்னிக்கு முசுறுமுட்டை யிலும், வாத சுரத்திற்கு நொச்சிச் சாற்றிலும், பித்த சன்னிக்கு ஊணான் இலைச்சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*இலையே அலட்டுச் சன்னிக்கி*
*யேறுந் துவரை யிலைச்சாறு*
*துலையா திருக்கும் நடைசன்னி*
*துலங்கு சாரணை யிலைச்சாறு*
*மலையாம் பாம்பு கடித்தாக்கால்*
*வாரே பாகை யிலைச்சாறு*

*அலையுஞ் சன்னி வெற்றிலையாம்*
*ஆகுஞ் நசியம் சிறுவழுதல்!* 111

அலட்டுச் சன்னிக்குத் துவரை இலைச்சாற்றிலும், நடை சன்னிக்குச் சாரணை இலைச்சாற்றிலும், பாம்புகடிக்கு பாகல் இலைச்சாற்றிலும், அலையுஞ் சன்னிக்கு வெற்றிலைச் சாற்றிலும் கொடுக்க குணமாகும். சிறுவழுதலைச் சாற்றில் நசியம் செய்ய அலையுஞ் சன்னி குணமாகும்.

*வழுதலைப் பச்சை ஊமத்து*
*வழங்கும் விரியன் சித்தகத்தி*
*தொழுகும் பூரண பாகயிலை*
*துடிக்குந் தேளு இலுப்பைப்பூ*
*கொழுகு நாகங் கடிதனக்கு*
*கொடிய எருக்கின் பழுப்பிலைச்சார்*
*முழுதும் நட்டுவக் காலிக்கு*
*முடக்கொத் தானி லைச்சாறே!* 112

விரியன் கடிக்கு பச்சை ஊமத்தம், சிற்றகத்தி, பாகல் இலை இவற்றின் சாற்றிலும், தேள்கடிக்கு இலுப்பைப்பூ சாற்றிலும், நாகத்தின் கடிக்கு பழுத்த எருக்கிலைச் சாற்றிலும், நட்டுவக்காலிக்கு முடக்கொத்தான் இலைச் சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*முடக்கு முதலை கடித்தாக்கால்*
*மீனும் பன்றி நெய்தனிலே*
*நடக்கு மானுடர் தான்கடித்தால்*
*நாட்டும் பருத்தி இலைச்சாற்றில்*
*தொடுக்குஞ் சூனியம் பேய்க்கரும்பு*
*துலங்கும் பூனை பாலையிலை*
*அடக்க மான பெருச்சாளி*
*ஆகும் பேயின் பாகிலையே* 113

முதலைக்கடிக்கு மீன், பன்றி இவற்றின் நெய்யிலும், மனிதர் கடித்தால் பருத்தியிலைச் சாற்றிலும், சூனியத்திற்குப் பேய்க்கரும்பு, குப்பைமேனி, பாலையிலை இவற்றின்

சாற்றிலும், பெருச்சாளி கடித்தால் பேய்ப்பாகலிலைச் சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*பட்டை யான ஒட்டிய புண்*
*பறக்கும் வாங்கோ தும்பை*
*அட்ட வாத சூலைக்கி*
*ஆகும் வெள்வேல் காய்ச்சாறு*
*முட்டும் பக்க சூலைக்கி*
*மோதுங் கோடகச் சாலைச்சார்*
*தட்டுஞ் சந்து விப்புருதி*
*தாக்கு ஆட்டி நீர்தன்னில்!* 114

புண்ணிற்குக் கோதுமைச் சாற்றிலும், வாத சூலைக்கு வெள்வேலங்காய்ச் சாற்றிலும், பக்க சூலைக்குக் கோடக சாலைச் சாற்றிலும், சந்து விப்புருதிக்கு ஆட்டுச் சிறுநீரிலும் கொடுக்க குணமாகும்.

*ஆட்டுங் கெர்ப்ப விப்புருதிக்*
*காதும் பழஞ்சோர் தன்னிலிட*
*முட்டும் புற்றுக் கரப்பனுக்கு*
*முழுதும் பழச்சார் தன்னிலிட*
*இட்ட மருந்து யிடுகுறைக்கி*
*யேகுங் கோவையிலை பசுவின்பால்*
*தேட்டும் யோனிக் கட்டுக்கு*
*திரண்ட பிரண்டைச் சாற்றிலிடே!* 115

கெர்ப்ப விப்புருதிக்குப் பழைய சோற்றிலும், புற்றுக் கரப்பானுக்கு எலுமிச்சம் பழச்சாற்றிலும், மருந்தீட்டிற்குக் கோவையிலை, பசும்பாலிலும், யோனிக் கட்டுக்குப் பிரண்டைச் சாற்றினிலும் கொடுக்க குணமாகும்.

*சாற்றே அரவின் கடிகளுக்குத்*
*தாக்கு முருங்கைப் பூச்சாற்றில்*
*ஏற்று மகோதர மாம்பொடியாம்*
*ஏகும் பித்த பாண்டுவிற்கும்*

..............................................

..............................................

*மாற்றும் சங்கிணைச் சோகைக்கு*

*வளஞ்சி ரகந்தன் னில்வையே!* 116

அரவின் கடிக்கு முருங்கைப் பூச்சாற்றிலும் மகோதரத்திற்கு, பித்த பாண்டுவிற்கும், மாங்கொட்டையின் சூரணத்திலும் சோகைக்குச் சீரகத்திலும் கொடுக்க குணமாகும்.

## சோகை, காமாலைக்குக் குளிகை

*வையே சோகை காமாலை*

*மாற்று மேல அரிசியிட*

*உய்யும் வாக்கு காமாலை*

*யோடுங் கடுக்காய்ச் சாற்றிலிடச்*

*செய்யும் நோவு தானறிந்து*

*சேத்து மாத்திரை யனுபானம்*

*அய்ய மின்றிக் கொடுத்தாக்கா*

*லழுந்து நோய்க ளகன்றிடுமே!* 117

காமாலைக்குக் கடுக்காய்ச் சாற்றில் கொடுக்க நலமாகும். மேற்கூறியவாறு சஞ்சீவிக் குளிகையை நோய்களுக்கேற்றவாறு தக்க அனுபானத்தில் இழைத்துக் கொடுக்க நோய்கள் நீங்கும்.

## தாபசுரக் குளிகை

*அகன்றிடவே தாபசுரக் குளிகை கேளு*

*அதிமதுரஞ் சந்தனங் கிராம்பு நன் னாரி*

*புகன்றிடுகோ ரோசனையுஞ் சுக்கு ஏலம்*

*பிரியமுடன் முந்திரிகை பேரீச் சோடுந்*

*தகன்றிடுலா மிச்சுடனே வெட்டி வேருந்*

*தளம்பாமல் ரோகணியுந் தேவ தாரம்*

*நெகின்றிடுவங் காளப்பச்சை தண்ணீர் மிட்டான்*

*நேரான இலுப்பைப்பூப் பலமு மொன்றே!* 118

அதிமதுரம், சந்தனம், கிராம்பு, நன்னாரி, கோரோசனம், சுக்கு, ஏலம், முந்திரிகை, பேரீச்சு, இலாமிச்சு, வெட்டிவேர், கடுகுரோகணி, தேவதாரம், வங்காளப்பச்சை, தண்ணீர் விட்டான், இலுப்பைப்பூ இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துக் கொள்க.

*ஒன்றான வகையெல்லாம் பலமொன் றாக*
*உறுதியா யிளநீரி லிட்டு ஆட்டி*
*நன்றாகத் தேற்றான்கா யளவு உண்டை*
*நல்லயிள நீருரைத்துக் கொள்ளும் போது*
*சென்றதொரு தாபசுரஞ் சன்னி வாதம்*
*தெரிக்குமடா கெர்ப்பசுர மெல்லாந் தீரும்*
*வென்றதொரு சுரங்களெல்லாந் தீருஞ் சொன்னோம்*
*விதமுடனே வேறொன்று விபரங் கேளே!* 119

அவற்றை இளநீர் விட்டரைத்து தேற்றாங்காய் அளவு உருண்டைகளாகச் செய்து இளநீரில் உரைத்துக் கொடுக்க தாபசுரம், சன்னிவாதம், கெர்ப்பசுரம் பலவகைச் சுரங்கள் ஆகிய நோய்கள் தீரும்.

### சுரத்துக்குக் கோரோசனைக் குளிகை

*கேளுங்கோ ரோசனையின் குளிகை யப்பா*
*கெடியான மிளகோமம் லவங்கப் பூவும்*
*தாழ்வில்லாச் சாதிக்காய் பத்திரியுங் கூட்டித்*
*தாக்கியதோர் மூலமுடன் திப்பிலியுங் கோட்டம்*
*மாளுகருஞ் சீரகங் கோரோசனையும் நாவல்*
*வளர்து..... துளிரும் வேம்புகரு வேப்பீர்க்கு*
*மீளுரச கற்பூரம் வகைக ழஞ்சி*
*மீறாமல் தங்கரேக் கரைக்க ழஞ்சே!* 120

மிளகு, ஓமம், இலவங்கப்பூ, சாதிக்காய், சாதிபத்திரி, திப்பிலி மூலம், கோட்டம், கருஞ்சீரகம், கோரோசனை, நாவல், துளிர்வேம்பு, கருவேம்பின் ஈர்க்கு, இரசகற்பூரம்

இவற்றை வகைக்கு 5 கி., தங்க ரேக்கு 2 ½ கி. இவற்றைச் சேகரித்துக் கொள்ளவும்.

*அரைக்கழஞ்சி தன்னுடனே மருந்தையெல்லாம்*
*ஆட்டவே வகைகேளு செண்பகப்பூக் கூட்டி*
*குறையாமல் மிளகுகா வட்டைப் புல்லுக்*
*குணமுடனே வகையொன்று பலமொன் றாக*
*நிறையாகக் கிஷாயத்தை விட்டு ஆட்டி*
*நினவுடனே இருசாமம் நேரா யாட்டிப்*
*பறையாமல் நிழலுலர்த்திப் பதனம் பண்ணிப்*
*பண்புடனே அனுபான மறிந்து செய்யே! 121*

செண்பகப்பூ, மிளகு, காவட்டம்புல் இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துக் குடிநீரை விட்டு ஆறு மணி நேரமரைத்து நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்திக் கொள்க. தக்க அனுபானத்தில் கொடுக்க நோய்கள் குணமாகும்.

*அறிந்துநீ செய்திடுவாய் வாத பித்தம்*
*அய்யமுட னோயறிந்து அதுக்குச் சாந்தி*
*முறிந்திடாச் சீரகமுங் கொத்து மல்லி*
*மிளகோமம் கொடிவேலி அரத்தை சுக்கு*
*தெரிந்துகொண்டு அனுபானங் கிஷாயத் திட்டுச்*
*செகதலத்தி லுள்ளநோய் தெரிக்கும் பாரு*
*பொருந்தவே நாள்மூன்று அஞ்சு ஏழு*
*போகுமடா பத்தியமாத் திரைநா ளொன்றே! 122*

வாத, பித்த, அய்ய நோய்களை அறிந்து சீரகம், கொத்துமல்லி, மிளகு, ஓமம், கொடிவேலி, அரத்தை, சுக்கு, இவற்றைச் சம அளவிட்டு குடிநீராய்க் காய்ச்சி அதில் மேற்சொன்ன குளிகையை இழைத்துக் கொடுக்க புவியிலுள்ள நோய்கள் தீரும். ஒரு நாளுக்கு ஒரு மாத்திரையைக் கொடுக்கவும். இவ்வாறு மூன்று, ஐந்து, ஏழு என்று நாட்களை நோய்க்கு ஏற்ப கூட்டிக் கொடுக்கவும்.

## கிராணி உருண்டை

*தூறுகின்ற கிராணிதனக் குண்டை கேளு*
*சுத்திசெய்த கஞ்சாவுங் கூகை நீருஞ்*
*சேருகின்ற கருவேம்பு களஞ்சிவகை அஞ்சு*
*சேர்த்திடுவாய் குரோசாணி விடைய மூன்றும்*
*மீறுகின்ற சாதிக்காய் விராக னொன்று*
*விதமான அபினொன்று விரைந்து கூட்டிக்*
*கூறுபடா வாழைப்பூச் சாற்ற ரைத்துக்*
*குன்றிமுத்து முன்மருந்தோ டுரைத்துக் கொள்ளே! 123*

தூய்மை செய்த கஞ்சா, கூகைநீறு, கருவேம்பு, குரோசாணி, அதிவிடையம் இவற்றை வகைக்கு 25 கி., சாதிக்காய், அபின் வகைக்கு 4 கி. எடுத்து வாழைப்பூச்சாற்றால் அரைத்துக் கொள்க. குன்றிமுத்துவையும் (ஆமணக்கு விதை) உரைத்துக் கொள்க.

*தாக்கிடத் தூள்தனிலே சிறுக்கெ டுத்துத்*
*தனிநாழி நீர்விட்டு எட்டொன் றாக்கி*
*மார்க்கமுடன் மஞ்சிட்டி காய வைத்து*
*வளமாக அதிலிட்டு முறித்துக் கொண்டு*
*ஏற்கவே வெள்ளையுள்ளி தானது வைத்து*
*இதமாக விராகன்கால் காய வைத்து*
*சேர்க்கவே வேப்பம்பூ வரைத்துக் கட்டி*
*சிவக்கவே உமிப்புடனி செலுத்து வாங்கே! 124*

அத்தூளில் சிறிதளவெடுத்து 1.3 லி. தண்ணீர் உடனிட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்ளவும். மஞ்சிட்டியைக் காய வைத்து இக்குடிநீரிலிட்டு முறித்துக் கொள்ளவும். வெள்ளைப் பூண்டினை 1 கி. எடுத்துக் காய வைத்து அதனுடன் வேப்பம் பூவையும் சேர்த்தரைத்து அக்கட்டி சிவக்குமளவுக்கு உமிப்புடத்திற்குள் வைத்தெடுக்கவும்.

## கிராணி ஏழுக்கு அனுபானம்

*ஒன்றான கிராணிவகை யேழு வகைக்கு*
*முறுதியா மனுபானமுடன் மருந்து கேளு*
*வென்றான தென்னம்பூ முத்தக் காசு*
*விளங்கவே வாழைசிறு மொட்டுப் பூவும்*
*பன்றுடைய காட்டத்திப் பூவும் பட்டை*
*பதறாமல் குறுக்கத்திப் பட்டை கூட்டி*
*சென்றுபங்கம் பாளைவேர் கிளுவைப் பட்டை*
*சேரவே சமனிடையாத் தூள தாக்கே!* *125*

ஏழு வகை கிராணிகளுக்கு அனுபான வகைகளுடன் கூடிய மருந்தினைக் கேட்பாயாக. தென்னம்பூ, முத்தக்காசு, வாழையின் பிஞ்சுப்பூ, காட்டத்திப்பூ, பட்டை, குருக்கத்திப் பட்டை, பங்கம்பாளைவேர், கிளுவைப்பட்டை இவற்றைச் சமமாய் எடுத்துத் தூளாய் இடித்துக் கொள்க.

*செலுத்திருந்த பெருங்காயந் தனையெ டுத்துத்*
*தேய்த்துரைப்பாய் கஷாயத்தில் கிராணி உருண்டை*
*பலித்திடவே ரெண்டுமொன்றா யுரைத்துக் கொண்டு*
*பண்பாக மேதைத்தயிர் வடித்துச் சேர்த்து*
*கலித்திடவே வசம்புசுட்டுப் பொடித்துக் கொண்டு*
*கணம்பெறவே மேல்தூவிக் குழப்பி நன்றாய்த்*
*துலித்திடவே மூன்றுநா ளருந்தும் போது*
*சுகமாகப் புளிப்புகையைத் தூரத் தள்ளே!* *126*

பெருங்காயக் கட்டியை தனியாக இழைக்கவும். கிராணிக்கான உருண்டை பலனளிக்கும் பொருட்டு மேற்சொன்ன உமிப்புட பொடியையும், பெருங்காய இழைப்பையும் குடிநீரில் சேர்க்கவும். எருமைத் தயிரையும் வசும்பு சுட்ட பொடியையும் குடிநீரில் கலந்து மூன்று நாள் உட்கொள்ளவும். புளி புகையை நீக்க வேண்டும்.

*உரைப்பான உள்காச்சல் ரத்த பித்த*
*முழலையுடன் பயித்தியத்தால் வந்த நோவு*

*சிறப்பாக இருக்கும்உட்டிண காந்தி தன்னை*
*திறமாக ஒர்பிடியு முத்தக் காசு*
*மரைப்பாக மிளகு ஒரு கழஞ்சி போடு*
*மறக்காமல் சீரகமும் முடிஞ்சு போடு*
*விரைப்பாகக் காய்ச்சியுண்ணு சீரகமுஞ் சேர்த்து*
*விதமான இரத்தபித்தங் காய்ச்சல் தள்ளே* 127

விட்டுணுகாந்தியை ஒரு பிடியும், முத்தக்காசு 2.2 கி., மிளகு, சீரகம் 5 கி. எடுத்துப் பொடித்து ஒன்று சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. அதனை உட்கொள்ள இரத்த பித்தக் காய்ச்சல், உள் காய்ச்சல், இரத்த பித்தம், பித்தத்தால் வந்த நோய் இவை தீரும்.

## சதாவேரி நெய்

*தள்ளவே சதாவேரி நெய்யைச் சொல்வேன்*
*தறுகாமல் தனிக்கிழங்குச் சாறு வாங்கி*
*வெள்ளரிக்காய் நெல்லிக்காய் விரைந்து சேர்த்து*
*விளங்கவே யிளநீருங் கருப்பன் சாறுங்*
*கொள்ளவே வகைக்கியிரு நாழிச் சாறு*
*குறையாமல் நானாழி நெய்யை விட்டு*
*மெல்லவே திரிகடுகு திரிபலையுங் கூட்டி*
*மீறாமல் கொத்துமல்லி ஏலங் கூட்டே!* 128

சதாவேரிக் கிழங்கினின்று சாற்றை எடுத்துக் கொள்க. வெள்ளரிக்காய், நெல்லிக்காய், இளநீர், கரும்புச்சாறு இவற்றை வகைக்கு 2.6 லி. நெய் 5.2 லி. சேர்த்துக் கொள்க. சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கொத்துமல்லி.

*ஏலமுட னிலவங்க மதுரம் கோட்டம்*
*இன்பமுடன் ரண்டுபல விதங் கூட்டி*
*கோலமுடன் வங்காளப் பச்சை னாபி*
*குறையாமல் சீரகமே ரண்டுங் கூட்டி*
..............................................
..............................................

*ஆலையம்பே ரீச்சுகற்கண்டு சர்க்கரையுங் கூட்ட*
*அப்பனே இந்துப்பு ஓமம் கூட்டே!* 129

ஏலம், இலவங்கம், அதிமதுரம், கோட்டம், இவற்றை வகைக்கு 70 கி., வங்காளப்பச்சை, நாவி, நற்சீரகம், பெருஞ்சீரகம், பேரீச்சு, கற்கண்டு, சர்க்கரை, இந்துப்பு, ஓமம் வகைக்கு 70 கி. எடுக்க.

*கூட்டுவாய் கோரையுட னரிசி* மேதை*
*குறையாமல் *மகாமேதை யெல்லாங் கூட்டி*
*நாட்டியதோர் வகைக்கிரண்டு பலமும் வாங்கி*
*நன்றாக வேயரைத்து அதனில் போடு*
*மூட்டுவாய் அடுப்பேற்றி அனலை மூட்டி*
*முறுகாமல் மெழுகுபதங் காய்ச்சி வாங்கி*
*ஊட்டுவாய்நெய்க்கரண்டி யிருநே ரந்தான்*
*ஒறுத்திட்ட தண்டுதனக் குயிருண் டாமே!* 130

முத்தக்காசு, மேதையெனும் பொற்றலைக் கையாந்தகரை மகாமேதையெனும் மருளூமத்தை இவற்றையும் வகைக்கு 70 கி. சேர்த்து அரைத்து மேற்கூறிய கலவையில் போட்டுக் கொள்க. மெழுகு பதமாகும் வரை காய்ச்சி பதத்தில் இறக்கி வடித்துக் கொள்க. நெய்யை 16 மி.கி. இரண்டு நேரமுங் கொடுக்க தாது விருத்தியுண்டாகும்.

*உயிருண்டாம் பூரிக்குந் தாது விர்த்தி*
*ஒகோகோ ரத்தபித்தம் நீர்க்க டுப்பு*
*செயலான மூத்திரக் கிரிச்சிப் பாளை*
*தெளியுமடா எலும்புருக்கி சதைய டைப்புத்*
*தயிரியமாஞ் சரீரமெல்லாங் காந்தி யுண்டாம்*
*சகலவெட்டை பிரமேகங் காந்தல் தீரும்*
*பயிரிட்டுப் பலன்கண்ட வாற தொக்கும்*
*பண்பாகப் புளிப்புகையைப் பார்த்தி டாயே!* 131

இரத்த பித்தம், நீர்க்கடுப்பு, மூத்திரக் கிரீச்சரம், எலும்புருக்கி, சதையடைப்பு அனைத்து வெட்டை, பிரமேகம், காந்தல், ஆகிய நோய்கள் தீரும். உடலில் ஒளியுண்டாகும். புளி புகையை நீக்கிட வேண்டும்.

## செங்கழுநீர் நெய்

*பார்த்திடவே இரத்தபித்தம் போகக் கேளு*
*பதறாமல் செங்கழுநீர்க் கிழங்கு கொண்டு*
*மாற்றியதோர் சதாவேரி தாமரையின் வளையம்*
*மறக்காம லமுர்தவள்ளிக் கிழங்கு சேர்த்து*
*தேற்றிடவே குன்றியிலைச் சாறுபடி ரெண்டு*
*தோணவே ஆவின்பால் படியும் ரெண்டு*
*நேர்த்தியா யாவின்நெய் படியும் ரெண்டு*
*நேகவரைக் கிழங்குதனை நெய்யில் சேரே! 132*

இரத்த பித்தம் நீங்குவதற்கான நெய் ஒன்றைக் கூறக் கேட்பாயாக. செங்கழுநீர்க் கிழங்கு, சதாவேரி, தாமரை வளையம், அமிர்தவள்ளிக் கிழங்கு இவற்றைச் சம அளவெடுத்துக் கொள்க. குன்றியிலைச்சாறு, பசும்பால், பசுநெய் இவற்றை வகைக்கு 2.6 லி. எடுத்து மேற்கூறிய கிழங்குகளை அரைத்து ஒன்று சேர்த்து நெய்யில் கலக்கவும்.

*நெய்யதனில் சமன்கொண்டு மருந்தை யெல்லாம்*
*நேசமுடன் லேகியமா யேற்கு முன்னே*
*பய்யவே கருப்பட்டிப் பொடிதா னாலு*
*பதறாமல் மதுரமரைப் பலமுந் தூவித்*
*தொய்யவே யேகமொன்றாய்த் துஞ்சக் கிண்டி*
*சுகமாக இறக்கிவைத்து சுருக்கைக் கேளு*
*அய்யமறக் கடுகுடனே நெய்யுங் கொண்டால்*
*அதிசார ரத்தபித்த மகன்று போமே! 133*

அந்நெய்யுடன் கருப்பட்டி 140 கி., தேன் 18 கி. சேர்த்து மருந்தை நன்கு கிளறி மீதமுள்ள நெய்யையும் சேர்த்து இளகமாகக் கிளறி இறக்கி வைத்துக் கொள்க. அதனை அளவறிந்து கொடுக்க இரத்த பித்தம் நீங்கும்.

## இருவேலிக் குளிகை

*போமடா இருவேலி சந்தனம்நன்னாரி*
*புகழ்முத்தம் அதிமதுரம் திப்பிலியுங் கூட்டி*

*ஆமடா முந்திரிகை பேரீச்சுங் கூட்டி*
*அப்பனே இலுப்பைப்பூ ஏக வொன்றாய்*
*தாழ்வில்லா மருந்தொன்று பலமொன் றாகத்*
*தப்பாமல் இளநீரி லரைத்துப் பின்பு*
*ஓமடா கருப்பஞ்சார் முலைப்பாலு மாகு*
*உறுதியா யரைத்துண்டை குன்றி முத்தே! 134*

வெட்டிவேர், சந்தனம், நன்னாரி, கோரைக்கிழங்கு, அதிமதுரம், திப்பிலி, முந்திரிகை, பேரீச்சு, இலுப்பைப்பூ இவற்றை வகைக்கு 35 கி. எடுத்து இளநீரிலரைத்துக் கொள்க பின் கருப்பஞ்சாறு, தாய்ப்பால் இவற்றை விட்டரைத்து 130 மி.கி. அளவுள்ள குளிகைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்க.

*குன்றிமுத்துப் போலுருட்டி நிழலு லர்த்திக்*
*கொடுத்திடுவா யிளநீரில் முலைப்பாலி லொன்றே*
*சென்றுதான் கொடுத்திடவே பித்த மெல்லாந்*
*தீருமடா இன்னமொரு சேதி கேளு*
*பண்டுள்ள செண்பகப்பூப் பூமினாதந் திப்பிலியும்*
*பாவகமாய் வறுத்துநீ பொடிதான் செய்து*
*தின்றிடுவா யாவின்பால் கலக்கிக் கொள்ளத்*
*தெரிக்குமடா நெஞ்சிலுள்ள கட்டு போமே! 135*

ஒரு மாத்திரையை இளநீர், தாய்ப்பால் இவை ஏதேனு மொன்றில் இழைத்துக் கொடுக்க பித்தம் அனைத்தும் தீரும். செண்பகப்பூ, பூநீறு, திப்பிலி இவற்றை எடுத்துப் பொடித்துப் பசும்பாலில் கலந்து சாப்பிட நெஞ்சிலுள்ள கோழைக் கட்டு நீங்கும்.

### முசுமுசுக்கை நெய்

*போச்சுதடா பயித்தியத்துக் கின்னங் கேளு*
*முடல்முசுக்கை சிறுகீரை பொன்னாங் காணி*
*வாச்சுதே நற்பாலை நெல்லிக் காயும்*
*வகைவகையாச் சாருரியும் வாங்கிக் கொண்டு*

*காச்சவே அதிமதுரம் லவங்கப் பட்டை*
*கனியான முந்திரிகை இலுப்பைப் பூவும்*
*வாச்சுதடா சீரகமுஞ் சந்தனமு மெல்லாம்*
*வளர்சாத்திர பேதியுடன் மருந்தை யெல்லாம்!* 136

பித்தத்துக்கு இன்னமொரு நெய்யைக் கூறுகிறேன் கேளுங்கள். முசுமுசுக்கை, சிறுகீரை, பொன்னாங்காணி, நற்பாலை, நெல்லிக்காய், இவற்றின் சாறுகளை வகைக்கு 675 மி.லி. எடுத்துக் கொள்க. அதிமதுரம், இலவங்கப்பட்டை, முந்திரிகை, இலுப்பைப்பூ, சீரகம், சந்தனம், சாத்திரபேதி இவற்றைச் சம அளவெடுக்க.

*மருந்தையெல்லாஞ் சமன்கொண்டு ஆவின் பாலால்*
*வளமாகத் தானரைத்து ஆவின் நெய்தான்*
*திருந்தவே ரெண்டுபடி சாற்றுக் குள்ளே*
*செலுத்துவர் அரைத்தமருந் ததனுக் குள்ளே*
*பொருந்தவே அடுப்பேற்றி நெய்வ டித்துப்*
*பொசித்திடுவா யிருநேர மஞ்சு நாளு*
*மறிந்திடவே பித்தமென்ற தெல்லாந் தீரும்*
*மக்களே புளியுப்பு மறிந்தி டீரே!* 137

பசும்பாலில் மேற்கூறிய மருந்து பொருட்களை அரைத்து 2.6 லி. நெய்யையும் சேர்த்து சாறுகளையும் காய்ச்சி பதத்தில் வடித்து வைத்துக் கொள்க. அதனை ஐந்து நாள், காலை, மாலை இரண்டு நேரம் உட்கொள்ள பித்தம் அனைத்தும் நீங்கும். புளி, உப்பு நீக்கவும்.

## பித்தத்துக்குக் குடோரித் துவாலை

*மறக்காம லின்னமொரு மருந்து கேளு*
*வயித்தியரே தூதுவிளை கீழ்க்காய் நெல்லி*
*சிறுகுறிஞ்சா ரெண்டுடனே சமூலங் கொண்டு*
*சேரவே யிடித்துநன்றாய்ச் சாறு வாங்கிப்*
*பெருகவே பழச்சாறு சமனாய் விட்டு*
*பின்னுமுன்னு முச்சியுடன் குடோரி யாடி*

உருகவே மருந்துவிட்டுத் தேய்த்துப் பின்னு
முடம்பெல்லாந் துவாலையிட வோடிப் போமே! 138

மருத்துவரே, மற்றுமொரு மருந்தினைக் கூறுகிறேன். கேளுங்கள். தூதுவளை, கீழாநெல்லி, சிறுகுறிஞ்சா இவற்றின் சமூலங்களை எடுத்துச் சாறு பிழிந்து கொள்க. எலுமிச்சம் பழச்சாற்றை அதே அளவு உடன் சேர்த்துக் கொள்க. உச்சியில் கீறிவிட்டு இம்மருந்தை உச்சிமுதல் உடல் முழுதும் தேய்த்துத் துவாலையிட பித்தம் குணமாகும்.

ஓடியே போவதற்கு மருந்து கேளு
ஊர்முருங்கைப் பிஞ்சுபத்து சுக்கு ரண்டு
தேடியதோர் நெல்லிக்காய் பத்துங் கூட்டி
சீரகமும் விராகன்ரெண்டு மிளகு ஒன்றாய்
நாடியதோர் கடுகுஅரைத் தேற்றான் கொட்டை
நாலுடனே விரவியெல்லா மிடித்துத் தூளாய்
கூடியிரு நாழிநீ ரெட்டொன் றாக்கிக்
குடித்திடுவாய் விடியுமுன்னே குணத்தைக் கேளு! 139

முருங்கைப் பிஞ்சு 10, சுக்கு 2 துண்டு, நெல்லிக்காய் 10 சேர்த்துக் கொள்க. சீரகம் 8 கி., மிளகு 4 கி., கடுகு 2 கி., தேற்றான் கொட்டை 16 கி. எடுத்து அனைத்தையும் இடித்து 2.6 லி. தண்ணீர்விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிக் குறுக்கிக் கொள்க.

கேளுநீ ராவஅடுப்பில் குறுகக் காய்ச்சிக்
கிருபையுடன் விடியுமுன்னே குடிக்கும் போது
தாழ்வில்லா அகத்தியிலை சாரணையின் கொழுந்து
தளம்பாமல் பிரண்டை பழம்புளி மிளகு
மேளமாய்க் குளக்கறியும் மீன்கறியு மூன்று
விரட்டிடுவாய் பயித்தியம்போம் வெறியுந் தீரும்
நீளவே போடாமல் குடோரியுடன் மருந்து
நினவாகத் துவாலையும்நீ நெகிழ்த்தி டாயே! 140

அதனை விடிவதற்கு முன்பே குடிக்க வேண்டும். அப்போது அகத்தி, சாரணைக்கொழுந்து, பிரண்டை, பழம்புளி, மிளகு,

குளத்து மீன், கறி, இவற்றை நீக்கிக் கொள்க. இக்குடிநீரைக் குடித்தும் மேற்சொன்ன மருந்தினைத் துவாலையும் செய்ய வேண்டும்.

### பித்தத்திற்கு மருந்து

*நெகிழ்ந்திடவே இன்னமொரு மருந்து கேளு*
*நினவில்லா எரிபித்தம் நெகிழ்ந்து போகப்*
*பகிர்ந்திடுவாய் சுக்குசக் கரையுங் கூட்டிப்*
*பழம்புளியும் புளியமரப் பொருக்கின் சாம்பல்*
*சுகம்பிச்சம் பழமேதைச் சாணிச் சாறுஞ்*
*சுத்தமுடன் மேதைத்தயிர் சாரணையின் வேரும்*
*உகந்திடவே சமன்கூட்டி உள்ளில் கொண்டு*
*உச்சியிலுந் தேய்த்து உடம்பெங்கும் போடே!* 141

எரி பித்தம் நீங்குவதற்கு மற்றுமொரு மருந்தினைக் கூறுகிறேன். சுக்கு, சர்க்கரை, பழைய புளி, புளியமரப் பட்டைச் சாம்பல், எருமைச் சாணிப்பால், எருமைத்தயிர், சாரணைவேர் இவற்றைச் சம அளவெடுத்தரைத்து உட்கொண்டு உச்சியிலும் உடலிலும் தேய்த்துக் கொள்ள வேண்டும்.

*போடுவாய் நேராயிரண்டு முச்சி மேலும்*
*பிடரியிலுங் குடோரியிட்டு ரத்தம் வாங்கி*
*தேடியதோர் முன்மருந்து விட்டுத் தேய்த்துத்*
*தேக்கிடவே எலுமிச்சம் பழம்பத்துங் கீறி*
*ஒடிடவே ரத்தமற உறைக்கத் தேய்த்து*
*ஒருநூறு குடஞ்செலத்தை மறுநா ளூற்று*
*வாடாமல் கழுதைப்பால் பொன்முசுட்டை வேரும்*
*மயக்கமாய்ச் சமனரைத்து மகிழ்ந்த ருந்தே!* 142

உச்சி, பிடரி இவற்றில் கீறி அந்த இரத்தத்தை வெளியேற்றிவிட்டு மேற்கூறிய மருந்தினை அவ்விடங்களில் தேய்த்து விடுக. பின் பத்து எலுமிச்சம் பழங்களைக் கீறி இரத்தம் உறையும் அளவுக்கு அவ்விடங்களில் தேய்த்து விடுக. நூறு குடங்களில் தண்ணீரைக் கொண்டு வந்து தலை மேல் ஊற்ற வேண்டும். கழுதைப் பாலையும் பொன்

முசுட்டை வேரையும் சமமாக எடுத்தரைத்து உட்கொள்ள பித்தம் குணமாகும்.

## பித்தத்திற்கு எண்ணெய்

*அருந்திடவே இன்னமொரு எண்ணெய் கேளு*
*ஆனபொன் னாங்காணி மொசுக்கைசிறு கீரைவேரும்*
*பொருந்தவே சமன்கூட்டித் தேங்காய் மட்டும்*
*போருபட அரைத்துநீ திரட்டிக் கொண்டு*
*அருந்தாமல் ஆவின்நெய் நாழி கூட்டி*
*மறக்காம லதின்பால்தான் படிரெண்டுங் கூட்டித்*
*திருந்தவே மதுரமரைப் பலம ரைத்துச்*
*சேர்த்திடுவாய் பால்நெய்யில் சேர்த்தி டாயே! 143*

பொன்னாங்காணி, முசுமுசுக்கை, சிறுகீரை இவற்றைச் சமஅளவு எடுத்துக் கொள்க. தேங்காயையும் இதனுடன் சேர்த்து நன்றாக அரைத்துக் கொள்க. பசுநெய் 1.3 லி., பசும்பால் 2.6. லி எடுக்க. 18 கி. அதிமதுரத்தை அரைத்து இக்கலவையில் சேர்த்துக் கொள்ளவும்.

*சேர்த்திட்ட மருந்ததனைப் பாண்டந் தன்னில்*
*சிலங்குறுணி கூடவிட்டுக் கலக்கி நன்றாய்*
*வேத்திட்டுப் போகாமல் கடைய மத்தால்*
*வேகமுன் திரளுமடா வெள்ளை யப்பா*
*மாத்திட்டுக் கலசத்தி லெடுத்து வைத்து*
*மறுக்காமல் நெல்லுக்கு ளொருநாள் வைத்து*
*ஏத்திடவே மறுநாளும் எடுத்து நன்றாய்*
*எலுமிச்சங் காயளவு எடுத்த ருந்தே! 144*

5.3 லி. தண்ணீரைச் சேர்த்து மத்தினால் நன்கு கடைந்து கொள்க. அதனின்று திரண்டு வரும் வெள்ளையை எடுத்து மற்றொரு கலசத்தில் வைத்துக் கொள்க. பின் நெல்லுக்குள் ஒரு நாள் முழுவதும் வைத்திருந்து மறுநாள் எடுத்து எலுமிச்சங்காயளவு உட்கொள்ள பித்தம் நீங்கும்.

## உண்ணாக்குக்கு மருந்து

*அருந்தவே உண்ணாக்கு மருந்து கேளு*
*அப்பனே ஒட்டடையுங் கலச சுண்ணம்*
*மருகவே எருக்கம்பால் தனில்கு ழைத்து*
*மாசில்லா துண்ணாக்கு தனில் தடவி*
*குருவைநெல் லடைசுட்டுத் தின்னத் தீருங்*
*கொண்டுநீ பத்தியந்தான் மூன்று நாளும்*
*விருதாவென் றெண்ணாதே மெய்யாய்த் தீரும்*
*விருப்பமுட னிம்மருந்து விளம்பி டாயே!* 145

ஒட்டடையும், கலசத்தில் இருக்கும் சுண்ணாம்பையும் சேர்த்து எருக்கம் பாலில் குழைத்து உள்நாக்கில் தடவி, குருவை நெல்லினால் அடைசுட்டு சாப்பிடத் தீரும். மூன்று நாளும் பத்தியமாய் இருக்க வேண்டும்.

## எண்ணெய்

*விளம்பினோங் கபாலசன்னி மண்டை நோவு*
*வேரோடே போவதற்கு விளம்பக் கேளு*
*பழமான சம்பழத்தின் சாறு ழக்கு*
*பத்தசித்தா மணக்கெண்ணெய் உரியுங் கூட்டி*
*தளம்பாத குந்துருக்க மரத்தைசத குப்பை*
*தான்கடுகு வசம்புகருஞ் சீரகமு முள்ளி*
*பொளங்கவே வகைகழஞ்சி பொடிய தாக்கிப்*
*பூரிக்கச் சாறுயெண்ணை புகட்டி வெய்யில்!* 146

கபால சன்னி, மண்டைவலி, நீங்குவதற்கு எண்ணெயைக் கூறுகிறேன் கேளுங்கள். எலுமிச்சம் பழச்சாறு 325 மி. லி, சிற்றாமணக்கெண்ணெய் 675 மி.லி. எடுத்து ஒன்று சேர்த்துக் கொள்க. வெள்ளைக் குங்கிலியம், அரத்தை, சதகுப்பை, கடுகு, வசம்பு, கருஞ்சீரகம், உள்ளி இவற்றை வகைக்கு 5 கி. எடுத்துப் பொடித்து மேற்கூறிய கலவையில் கலந்து வெய்யிலில் வைக்க.

*வெய்யிலிலே வைத்துமறு நாளெ டுத்து*
*மீறவே கலைக்கிட்டு வேடு கட்டிப்*
*பைய்யவே ஆமணக் கிலையால் கட்டிப்*
*பாங்குடனே அஞ்சுநா ளடர வைத்து*
*தையலே ஆறாம்நாள் நல்லெண்ணெய் காய்ச்சித்*
*தளம்பரப்பு வெந்நீருஞ் சார மிளகு*
*வையகத்தில் நாசிநீர் காத டைப்பு*
*மாறுமடா ஆதண்டைச் சாறுங் கூட்டே!* 147

மறுநாள் எடுத்து துணியால் வேடுகட்டி ஆமணக்கிலை யால் கட்டி வைத்துக் கொள்க. இவ்வாறு ஐந்து நாள் வைத்திருந்து ஆறாம் நாள் நல்லெண்ணெய் காய்ச்சி உடலில் பூசி, மிளகும் வெந்நீரும் சேர்த்து உட்கொள்ள வேண்டும். இவ்வாறு செய்ய கபாலசன்னி, மண்டைவலி, மூக்கில் நீர் வழிதல், காதடைப்பு தீரும்.

## பல்வலிக்குக் கொப்பளிப்பு நீர்

*கூட்டுடனே பல்லசைவு தீய்க்க கூட்டும்*
*கவட்டுவலி போவதற்குக் கூறு கேளு*
*நாட்டிலுள்ள வெள்வேலா மகிழ மருது*
*நல்லகரு வேலுடனே இலவம் பட்டை*
*வாட்டமில்லாக் குறுணிநீர் வாது நன்றாய்*
*வகைபட்டை சமன்கொண்டு குறுகக் காய்ச்சி*
*ஊட்டியே இருநேரங் கொப்ப ளித்து*
*உறுதியுடன் வாய்நோவு ஒழியும் பாரே!* 148

பல் அசைவைப் போக்குவதற்கும், கவட்டுவலி நீக்கு வதற்குமான மருந்து ஒன்றினை கூறக் கேட்பாயாக. வெள்வேல், மகிழம், மருதம், கருவேல், இலவம் இவற்றின் பட்டை களைச் சமஅளவெடுத்து 5.3 லி. தண்ணீர் விட்டு குறுகக் காய்ச்சி காலை, மாலை இரண்டு நேரமுங் கொப்பளித்து வர, வாய் வலி, பல்வலி நீங்கும்.

## புண்ணுக்குக் கட்டு

*பாரென்ன வெள்ளைப்பா ஷாணம் லிங்கம்*
*பாங்கான செங்கழனிக் கோட்டங் கொண்டு*
*சேரென்ன பூவரசம் பட்டைபூ தளிருஞ்*
*சிறப்பாகச் சமூலஞ் சமன்சேர வாங்கி*
*வாறேநீ செம்பருத்தி செவ்வ கத்தி*
*மறுகாலுஞ் செங்கீரை வந்த தாகு*
*மீறவே அச்சாறு விட்ட ரைத்து*
*விதமான இலைக்கள்ளி இலைதா புட்டே!* 149

வெள்ளைப்பாடாணம், இலிங்கம், செங்கழுநீர், கோஷ்டம், பூவரசம்பட்டைப் பூ, தளிர், சமூலம் இவற்றைச் சம அளவெடுத்து செம்பருத்தி, செவ்வகத்தி, செங்கீரை ஆகியவற்றின் சாறுகளை விட்டரைத்துக் கொள்க.

*புட்டாக இலையவித்துப் பிழிந்து போட்டு*
*புதுமையுள்ள மருந்ததனை இலையில் பூசிக்*
*கட்டிடுவாய் புண்ணதிலே கட்டி வைத்து*
*கட்டிமறு நாளவிழ்த்து ஓலை கொண்டு*
*திட்டமாய் வழித்திடவே புழுக்க ளெல்லாம்*
*திரண்டுவரு மெடுத்தெறிநீ திரும்பக் கேளு*
*மட்டாகப் பூவரசி னிலைய வித்து*
*மாசில்லாப் புண்ணதிலே மகிழ்ந்து கட்டே!* 150

இலைக்கள்ளி இலையைப் பிட்டவித்து எடுத்து மேற்கூறிய அரைப்பு மருந்தினை அதில் பூசி புண்ணின் மேல் வைத்து கட்டி வைக்க. அடுத்த நாள் அக்கட்டினைப் பிரித்து ஓலையினால் வழித்துவிட்டு அதினின்று வரும் புழுக்களை நீக்குக. பிறகு பூவரசின் இலையை வேக வைத்து புண்ணின் மேல் கட்ட வேண்டும்.

## புண்ணுக்குச் சீலை

*மகிழ்ந்துநீ புண்ணுக்கு வரிசை கேளு*
*மரமஞ்சள் கஸ்தூரி காசுக் கட்டி*
*புகழ்ந்தகருங் குங்குலியம் திப்பிலியுங் கூட்டிப்*
*புனிதமாய் சாதிக்காய் சமன்தூ ளாக்கி*
*தகழ்ந்துதென்னங் குரும்பைச்சார் நாழி கூட்டி*
*தவறாமல் நல்லெண்ணெய் படிதான் சேர்த்து*
*விகழ்ந்திடவே காய்ச்சிநன்றாய் வடித்துக் கொண்டு*
*இழைச்சீலை தனிலூட்டிப் புண்ணில் போடே! 151*

மரமஞ்சள், கஸ்தூரி, காசுக்கட்டி, கருங்குங்கிலியம், திப்பிலி, சாதிக்காய் இவற்றைச் சம அளவெடுத்துப் பொடித்துக் கொள்க. தென்னங்குரும்பைச்சாறு, நல்லெண்ணெய் வகைக்கு 1.3 லி. சேர்த்துக் காய்ச்சி வடித்து சீலையில் நனைத்துப் புண்ணின் மீது போட வேண்டும்.

## புண்ணுக்கு மருந்து

*போடவே வகையொன்று சொல்லக் கேளு*
*புனிதமாங் கடப்பிராஞ்சி மருந்து நாவல்*
*தேடுநீ கருங்காலி ஆவரையின் தோடு*
*திடமாக வட்டத்துத்தி வேருங் கூட்டி*
*வாடாமல் வகைக்குஅஞ்சு பலமி டித்து*
*மக்களே சிலமாறு மரக்கால் விட்டுக்*
*கூடவே தூள்போட்டு மிடா நாலு*
*குமுறவே காய்ச்சி யொரு பானை சோரே! 152*

கடலழிஞ்சில், நாவல், கருங்காலி, ஆவாரைப்பட்டை, வட்டத்துத்தி வேர் இவற்றை வகைக்கு 175 கி. எடுத்து இடித்துக் கொள்க. 32 லி. தண்ணீர் ஊற்றி தூளைப் போட்டு நன்கு காய்ச்சிக் கொள்க.

*ஒருபானை காய்ச்சியதோர் கசாயந் தன்னை*
*உறுதியா யிருநாழி குழம்பாய்க் காய்ச்சிப்*
*பருஞ்சட்டி தனிலிறுத்து வைத்துக் கொண்டு*
*பாங்கான காரமது பலமுஞ் சேரு*

*சிறந்திட்ட அரைப்பொடியுங் கெந்தி கூட்டித்*
*திடமாக வகைக்குப்பல மொன்று சேர்த்து*
*பொருந்திடவே ஆவரையின் படிதான் முக்கால்*
*புகழ்படவே வகையெல்லாம் பொடிய தாக்கே! 153*

பின் அதனையே மீண்டும் நாற்பத்தெட்டு நிமிடங்கள் எரித்துக் குழம்பாய்க் காய்ச்சி சட்டியில் இறுத்துவைத்துக் கொள்க. அதனுடன் வெங்காரம், அரப்பொடி, கெந்தகம் இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துப் பொடித்து ஆவாரைப் பொடி 975 மி.லியையும் சேர்த்துக் கொள்க.

*தாக்கிடுவாய் கசாயத்தில் பொடியை யெல்லாம்*
*தளம்பாமல் கிண்டியே யிறக்கிக் கொண்டு*
*பாக்களவாய்த் தானுருட்டி நிழலு லர்த்திப்*
*பழமோரா வரைதேனில் பரிந்து கொள்ள*
*ஊக்கமா மிதுவறிந்து கொண்டா யானால்*
*உத்தமமா மிம்மருந்து உறுதி காணே! 154*

பின் அனைத்துப் பொடியையும் நன்றாகக் கலக்குமாறு கிளறி இறக்கிக் கொள்க. 2.2 கி. அளவுள்ள உருண்டை களாக உருட்டி நிழலில் காய வைத்துக் கொள்க. அளவறிந்து உருண்டையை எடுத்து ஆவாரைச் சாற்றில், தேனில் இழைத்து உட்கொள்ள புண்கள் குணமாகும்.

## ஒருதலை நோவுக்கு நசியமும் பூச்சும்

*காணஒரு தலைவலிக்கு மருந்து கேளு*
*காட்டிலுள்ள தும்பையிலை குப்பை மேனி*
*தோணவே கசக்கிநீ நசியம் பண்ணி*
*துலங்கஉள்ளி உப்புயெள்ளு அரைத்துப் பூசு*
*பூணவே வேப்பிலையை வாய்பே சாமல்*
*பிடிங்கியே பிழிந்திடுவாய் காதுக் குள்ளே*
*ஊணவே செப்புகின்ற நெருஞ்சி தன்னை*
*உறுதியாய் ஒருகண்ணி லூத்தி டாயே! 155*

காட்டுத்தும்பை, குப்பைமேனி இவற்றின் இலைகளைக் கசக்கி மூக்கில் சாற்றினை விட்டால் ஒரு தலைவலி குணமாகும்.

வெங்காயம், உப்பு, எள் இவற்றை அரைத்து தலை நோயுள்ள இடத்தில் பூச குணமாகும். வேப்பிலையை மௌனமாக இருந்து எடுத்துவந்து காதில் பிழிய ஒருதலை நோய் குணமாகும். செப்பு நெருஞ்சி சாற்றினைக் கண்ணில் ஊற்ற நோய் குணமாகும்.

*ஊத்திடுவா யவரைவிரை முலைப்பால் நசியம்*
*ஊர்முருங்கை நாயுருவி விரையுங் கூட்டி*
*நீத்திடுவாய் நீலியுட சாறு வாங்கி*
*நினவாகத் தானரைத்து நல்லெண்ணெய் விட்டு*
*சேத்திடவே காய்ச்சிநீ நசியம் பண்ணு*
*தெரிக்குமடா ஒருதலையி லுள்ள நோவு*
*நீத்துடனே வெள்ளெருக்கம் பாலுஞ் சேர்த்து*
*நீநசிய மிடனோவு நெகிழ்ந்து போமே!* 156

அவரை விதையைத் தாய்ப்பாலில் உரைத்து மூக்கில் நசியமிட வேண்டும். முருங்கை, நாயுருவி இவற்றின் விதை களைச் சேர்த்து நீலியின் சாற்றினால் அரைத்து நல்லெண்ணெய் சேர்த்து நன்கு காய்ச்சி மூக்கில் நசியமிட ஒருத் தலைவலி, நீங்கும். இன்னும் இருப்பின் வெள்ளெருக்கம்பாலை உடன் சேர்த்து மூக்கில் நசியமிட வலி முற்றும் குணமாகும்.

### எலிக்கடிக்கு

*நெகிழ்ந்துபோம் இலவங்கப்பூ காந்தம் கோட்டம்*
*நேராகச் சமன்கூட்டி நிய ரைத்து*
*உகந்திடவே உழக்காகக் கலக்கிக் கொண்டு*
*உத்தமனே பேய்ச்சுரைக்காய் தனில டைத்துப்*
*புகழ்ந்துமறு னாளுதைய மருந்தும் போது*
*புதுமையா யெதிரெடுக்கும் புகலக் கேளு*
*மகிழ்ந்திலுப்பைப் புண்ணாக்கு வேருங் கூட்டி*
*மறவாமல் ஆவின்பா லரைத்துக் கொள்ளே!* 157

இலவங்கப்பூ, காந்தம், கோஷ்டம் இவற்றைச் சமமாக எடுத்து அரைத்து 325 மி.லி. அளவாகக் கலக்கி எடுத்துக் கொள்க. அதனைப் பேய்ச்சுரைக்காயில் அடைத்து அடுத்த நாள் விடியற்காலையில் சாப்பிட வாந்தியாகும். இலுப்பைப் புண்ணாக்கு வேரைப் பசும்பாலிலரைத்து மூன்று நாட்களும் உட்கொள்ள எலிக்கடி குணமாகும்.

*அரைத்துநீ கொண்டுவிடு மூன்று நாளு*
*மாவின்மோர் கல்லுப்புக் கரைத்துப் பேயின்*
*சுரைகூட்டி அத்தினத்து மறுநா ளப்பா*
*சுகமாக அருந்திடவே சுளரெ டுக்கும்*
*விரையவே வேப்பீர்க்கு மருதம் பட்டை*
*வியன்தபசி முருங்கையுடன் விளங்கக் கொண்டு*
*குறையாமல் நாழிநீ ராழாக் காக்கி*
*குடித்திடுவாய் எலிவிஷங்கள் குடிபோங் காணே! 158*

பசுமோரில் கல்லுப்பைக் கரைத்து பேய்ச்சுரையில் அடைத்து மறுநாள் குடிக்க விடம் நீங்கும். வேப்பீர்க்கு, மருதம்பட்டை, தவசி முருங்கை எடுத்து இடித்துப் போட்டு 1.3 லி. தண்ணீர் விட்டு 160 மி.லி. ஆகக் காய்ச்சிக் கொடுக்க எலி விடங்கள் நீங்கும்.

## இந்திரியக் கட்டுக்கு

*குடிபோன இந்திரியக் கட்டு மீளக்*
*குமுறுமடா நிலப்பனையின் தண்ணீர் விட்டான்*
*துடியாக நெருஞ்சிவேர் சமனீ கொண்டு*
*துலக்கமுடன் ஆவின்பா லரைத்த ருந்த*
*விடியுமுன்னே பெண்மயக்க மிகவுண்டாகும்*
*மேலிலுப்பைப் புண்ணாக்கு காசுக் கட்டி*
*பொடியாக்கி அருந்துநீ யிருப்பா யானால்*
*பூரித்துப் பொங்கிவிடும் புதுமை சொன்னேன்! 159*

நிலப்பனை, தண்ணீர்விட்டான், நெருஞ்சி இவற்றின் வேர்களைச் சமமெடுத்துப் பசும்பாலில் அரைத்துக் குடிக்க

இரவில் பெண் மயக்கம் அதிகமாகும். இலுப்பைப் பிண்ணாக்கு, காசுக்கட்டி இவற்றைச் சூரணம் செய்து கொடுக்க தாது விருத்தியாகும்.

### கழல்வாதம், அண்டவாதம் நீங்க

*புதுமைகழல் வாதமுடன் அண்டவாதம்*
*போவதற்கு மருந்துநான் புகலக் கேளு*
*கதுமையா நன்னாரி நெருஞ்சிபேய் மிரட்டி*
*கதிக்கின்ற வேலியிலை குப்பைமேனி யிந்து*
*அதுமையுள்ள கடுகுயிரு கழஞ்சி வித*
*மப்பனே வெள்ளுள்ளிப் பூடு மூணே!* 160

நன்னாரி, நெருஞ்சில், பேய்மிரட்டி, கொடிவேலியிலை, குப்பைமேனி, கடுகு இவற்றை வகைக்கு 10 கி., மூன்று பூண்டு பற்கள் எடுத்துக் கொள்ளவும்.

*பூடுடனே மருந்தையெல்லா மெலிஆலஞ் சாற்றால்*
*புனிதமா யரைத்துநல் லெண்ணெ யூற்றி*
*மூடுநீ சட்டிதனி லூற்றி யப்பா*
*முக்கியமாப் பொதிந்துநீ வைத்துக் கொண்டு*
*மாடிடவே பிச்சங்கா யளவு தின்ன*
*மாறுமடா வாதங்கள் வாதம் போமே!* 161

எலியாமணக்கு சாற்றால் அரைத்து நல்லெண்ணெ யையும் சேர்த்துச் சட்டியில் ஊற்றி மூடி வைத்துக் கொள்க. அதனைப் பொரித்து வைத்து எட்டிக்கொட்டையளவு கொடுக்க வாதங்கள் போகும்.

### வாதத்தினால் ஏற்பட்ட புண் புரைகளுக்கு வீக்கத்திற்கு மாத்திரை

*வாதம்போ மாவிலங்கை வசம்புகொடி வேலி*
*மாறாமல் வெள்ளுள்ளி ஆவின் பாலால்*
*நீதமுடன் தானரைத்து மூன்று நாள்கொள்*
*நினவாக உப்பியபுண் புரையை மாற்றும்*

*போதவே தைவேளை கருப்புக் கட்டி*
*புனிதமா யரைத்துருட்டிப் பொருந்தக் கொள்ளு*
*சூதான வேலியிலை முடக்கொத் தானுந்*
*துலங்குகழல் கொடியிலைபுங் கெலையுங் கூட்டே! 162*

மாவிலங்கு, வசம்பு, கொடிவேலி, வெள்ளுள்ளி எனும் பூண்டு இவற்றைத் தேவையான அளவெடுத்து பசும்பாலில் அரைத்து மூன்றுநாள் உட்கொண்டால் புண், புரை நீங்கும். தைவேளை, கருப்புக்கட்டி இவற்றைச் சேர்த்தரைத்து மாத்திரை களாகத் திரட்டி உட்கொள்ள நலமாகும். கொடிவேலியிலை, முடக்கொத்தான், கழற்கொடியிலை, புங்கினிலை எடுக்க.

*புங்கெலையோ டிவையெல்லா மிடித்து நன்றாய்ப்*
*புனிதமாய் வறுத்தொற்றப் போகும் வீக்கம்*
*அங்குகழல் கொடிப்பருப்பு வறுத்த ரைத்து*
*அண்டத்தி னுடன்பொரித்து அருந்தப் போகும்*
*தங்குமெருக் கிலையின்பூ காயஞ் சுக்குத்*
*தவறாமல் வகைக்கழஞ்சு தான ரைத்துப்*
*பங்கமில்லா உரியவெந்நீர் தன்னில் கொள்ளு*
*பறக்குமண்ட வாதங்கழல் வாதம் போமே! 163*

இந்த இலைகளை எடுத்து இடித்துப் பின் அவற்றை வறுத்து ஒற்றி எடுக்க வாதத்தினால் வந்த வீக்கம் நீங்கும். கழற்சிப் பருப்பினை வறுத்து அரைத்து முட்டையுடன் சேர்த்துப் பொரித்துக் கொடுக்க வீக்கம் நீங்கும். எருக்கின்பூ, பெருங்காயம், சுக்கு இவற்றை வகைக்கு 5 கி. எடுத்து அரைத்து வெந்நீரில் கலந்து உட்கொள்ள அண்டவாதம், கழல்வாதம் நீங்கும்.

## களவு கர்ப்பம் நீக்க மருந்து

*போகுமடா களவுகெர்ப்பந் திரக் கேளு*
*பொய்யல்ல கடுகுயிந்து காயங் கூட்டி*
*வேகமுள்ள பழங்காடி மிக வருந்த*
*விழுகுமடா கடுகுநல் லெண்ணெயுங் கொண்டால்*

*தாகமுடன் மிளகுசெம் பருத்திப் பூவுந்*
*தப்பாமல் காடியுண்ண பிள்ளை யில்லை*
*சோகமுடன் பெரும்பீர்க்க விரையு ரைத்துத்*
*துலங்கமூன்று நாள்குடிக்கக் கெர்ப்பம் போமே!* 164

கடுகு, இந்துப்பு, பெருங்காயம் இவற்றைச் சம அளவெடுத்து பழங்காடியையும் நல்லெண்ணெயையும் தேவையான அளவு சேர்த்துக் காய்ச்சி கடுகு எண்ணெயை உட்கொள்க. மிளகு, செம்பருத்தி, காடி இவற்றைச் சேர்த்து உட்கொள்ள அக்குழந்தை தங்காது. பெரும்பீர்க்கு விதையை அரைத்து மூன்று நாட்கள் கொடுக்க களவினால் வந்த கர்ப்பம் அழியும்.

*கெர்ப்பம்போ மதுக்காரை விரைமோரி லூறிக்*
*கிரிகையுட னதையரைத்துக் குடிக்கப் போகுஞ்*
*செப்பமுடன் கீழ்க்காயி னெல்லி வேரைத்*
*திறமாக நல்லெண்ணை தன்னில் கொள்ள*
*ஒப்புரவாய் கர்ப்பமெல்லா மொழிந்து போகு*
*முறுதியுட னிம்மருந்து உகந்து செய்தால்*
*தப்பாது இம்மருந்து அப்பா சொன்னேன்*
*சரீரத்துக் கொருநாளுந் தாழ்வா ராதே!* 165

மருக்காரை விதையை மோரில் ஊற வைத்து அரைத்துக் குடிக்க கெர்ப்பம் நீங்கும். கீழ்க்காய் நெல்லியின் வேரை அரைத்து நல்லெண்ணெயில் உட்கொள்ள இக்கர்ப்பம் கரைந்து போகும்.

## நீரடைப்புக்கு மருந்து

*தாழ்வில்லை நீரடைத்தால் மருந்து கேளு*
*தரணியுள்ள ஒரிதழ்வேர் காடி தன்னில்*
*கூழாகத் தானரைத்துச் சீர மெல்லாங்*
*குமுறவே தான்தடவ நீர்தெ ரிக்கும்*
*பூளைசிறு பூளைவேர் பொன்னாங் காணி*
*புகழாலந் துளிர்பாலில் பொசிக்கத் தீரும்*

*நாளாலே பலகரையைச் சுட்ட சாம்பல்*
*நல்லதொரு பாண்டமது தன்னில் வையே!* 166

ஓரிதழ்த் தாமரை வேரைக் காடிவிட்டு அரைத்து உடல் முழுவதும் நன்கு தடவி வைக்க நீர்பிரியும். சிறுபீளை, பொன்னாங்காணி இவற்றின் வேரை ஆலந்துளிரின் பாலில் காய்ச்சி வதக்கிக் கொடுக்க குணமாகும். பலகரையைச் சுட்டு சாம்பலைப் பாத்திரத்தில் போட்டுக் கொள்ளவும்.

*வைத்துப்பழச் சாறுடனே மேனிச் சாறு*
*மதிப்பாக அதில்விட்டு மறுநாள் வாங்கி*
*உத்தமமா மிறுத்துழக்கு ஆவின் பாலி*
*லுடனருந்த கல்லுவிழு முறுதி யாக*
*மெத்தவே வெள்ளரிக்காய் சீவித் தோலை*
*விதமாகத் துருசுஅதன் மேலே பூசிச்*
*சுத்தமுட னதையெடுத்து அருந்து நீரில்*
*துலங்கஇரு மூன்றுநா ளிருந்த ருந்தே!* 167

எலுமிச்சம்பழச்சாறு, குப்பைமேனிச் சாற்றை அதில் விட்டு அடுத்த நாள் இறுத்து 325 மி.லி. பசும்பாலைச் சேர்த்து சாப்பிட கல்விழுந்து விடும். வெள்ளரிக்காயைச் சீவி துருசின் மேல் பூசி, அதை நீரில் கலந்து இரண்டு, மூன்று நாட்கள் அருந்த நீரடைப்பு நீங்கும்.

*அருந்துவட்டத் துத்தியிலை மூன்று நாள்தா*
*னாவின்பா லரைத்துநீ குடிக்கத் தீரும்*
*பொருந்தவெள் ளாட்டுநெய் ஆவி னெய்யும்*
*போதநல் லெண்ணைசமன் கஞ்சித் தண்ணி*
*வருந்தவே குடித்தாக்கால் கல்லு விழும்*
*மறுகாலுஞ் சோற்றிலுண்ணத் தீருங் கண்டாய்*
*திருந்திளநீ ரேலமுடன் தேற்றான் கொட்டை*
*திரளரைத்துச் சர்க்கரையும் பாலில் கொள்ளே!* 168

வட்டத்துத்தியிலையைப் பசும்பாலில் அரைத்து மூன்று நாள் கொடுக்க நீரடைப்பு தீரும். வெள்ளாட்டின் நெய், பசுநெய், நல்லெண்ணெய், பழைய சோற்றுநீர் இவற்றைச் சமஅளவெடுத்து குடித்தால் கல் கரைந்து விழும். மறுநாள் சோற்றில் ஊற்றி சாப்பிட நீரடைப்பு தீரும். இளநீர், ஏலம், தேற்றாங்கொட்டையைச் சேர்த்தரைத்து சர்க்கரையையும் பாலையும் கலந்து கொடுக்க குணமாகும்.

*கொள்ளுவாய் கத்தாழஞ் சோறு வாங்கிக்*
*குண்டுசட்டி தன்னிலிட்டு அத்திப் பட்டை*
*மெல்லவே இடித்துஅதில் பிசைந்து சேர்த்து*
*வெயிலில்வைக்கத் தெளிவுவரு மிறுத்துக் கொண்டு*
*தள்ளாமல் சர்க்கரையுங் கழஞ்சி இந்து*
*தவறாமல் வெள்ளரிக்காய் காடி கூட்டிக்*
*கொள்ளவே ரத்தமுடன் கல்லுஞ் சியுங்*
*கூட்டோடே சதையடைப்பு குதிக்கும் பாரே!* 169

கற்றாழைச் சோற்றைச் சட்டியிலிட்டு அத்திப்பட்டையை இடித்துப் போட்டுப் பிசைந்து வெயிலில் வைத்துத் தெளிவை இறுத்துக் கொள்க. சர்க்கரை 5 கி, இந்துப்பு, வெள்ளரிக்காய், காடி சேர்த்துக் கொடுக்க இரத்தமுடன் கல், சீழ், சதையடைப்பு தீரும்.

## காதுத்தண்டு நோய்க்கு மருந்து

*குதிக்கும்மேல் காதிலுள்ள தண்டு நொந்தால்*
*குன்றிமுத்துக் காய்பன்றி மோந்தான் வேருந்*
*திதிப்பாக எருமைப்பால் தனில ரைத்து*
*மரையா லுரையூத்திக் கடைய வெண்ணை*
*துதிப்பாக நீயெடுத்துக் காதுத் தண்டில்*
*துவாலையிட வள்ளைத்தண்டு துலங்கும் பாரு*
*விதிப்படியே சொல்லிவிட்டோ மொழிக்க வில்லை*
*விறுமாலின் கணக்கிட்டால் மீறுங் காணே!* 170

காதுத்தண்டில் வலி ஏற்பட்டால், குன்றிமுத்தின்காய், பன்றி மோந்தான் வேர் எடுத்து எருமைப்பாலில் அரைத்து

அப்பாலில் உரை ஊற்றி தயிராக்கிக் கொள்க. அதனைக் கடைந்து திரளும் வெண்ணெயைக் காதில் துவாலையிட வள்ளைத் தண்டின் வலி நீங்கும்.

## தூரமில்லாத பெண்களுக்கு

*மீறாமல் தூரமில்லாப் பெண்க ளுக்கு*
*வேலியிலை பசும்பாலில் மிகவறுத்துக்*
*கூறான தூதுவளைச் சாறு வாங்கிக்*
*கொட்டைகொட்டை ஆக்கிடக்குங் குன்றிப் பாசி*
*ஏறாமல் பின்னைக்கா யளவு கூட்டி*
*இதமாகச் சர்க்கரையும் ஏக மொன்றாய்ப்*
*பேறுபட மூன்றுநா ளருந்தும் போது*
*புறப்படுமே செங்குருதி சிகப்புத் தாமே!* 171

கொடிவேலியிலையைப் பசும்பாலில் வறுத்து எடுத்துக் கொள்க. அதனுடன் தூதுவளைச்சாறு, கொட்டைப்பாக்கு, குன்றிமணி இவற்றைச் சேர்த்தரைத்து புன்னைக்காயளவாக எடுத்து சர்க்கரையைச் சமஅளவு சேர்த்து மூன்று நாள் சாப்பிட மாதவிடாய் ஏற்படும்.

## இந்திரியம் கட்டுவதற்கு மருந்து

*தாமென்ற ஆண்கட்டுத் தடையாய்ப் போனால்*
*சங்கம்வேர் நீர்முள்ளி விரையுங் கூட்டிப்*
*போமென்ற சோழிதனைச் சுட்ட சாம்பல்*
*புகழால விழுதுடனே முத்தக் காசு*
*ஆமென்ற ஆவின்பால் தன்னி லாட்டி*
*அதுவுடனே சர்க்கரையுங் கலந்து கொள்ள*
*ஓமென்ற விந்திரியங் கட்டு விட்டு*
*உண்மையுட னனுபோக மிசைந்து பண்ணே!* 172

சங்கம்வேர், நீர்முள்ளி விதை, சோழியைச் சுட்ட சாம்பல், ஆலம்விழுது, கோரைக்கிழங்கு இவற்றைப் பசும்பாலில் அரைத்துச் சர்க்கரையுங் கலந்து உட்கொள்ள இந்திரியம் கட்டு நீங்கும்.

## பிள்ளை உண்டாக

*இசைந்ததோர் பெண்மலடு எங்கு மில்லை*
*ஏதுனால் மலபான சேதி கேளு*
*அசைந்திருக்கும் பேயினால் பூதத் தாலும்*
*அடிவயிறு நொந்துவரும் வாய்வி னாலும்*
*பிசைந்துகெர்ப்பப் பூச்சியினால் கிரகத் தாலும்*
*பிணிநோவு மத்ததால் வாதசூலை யாலுந்*
*துசங்கட்டிக் கல்வியினால் பூலவா துங்கித்*
*துலங்காமல் கெர்ப்பமில்லை சொல்லக் கேளே!* 173

பெண் மலடு எங்கும் இல்லை. பேய், பூதம், அடி வயிற்றில் வலியுடன் கூடிய வாய்வு, கெர்ப்பப்பூச்சி, கிரகம், வேறு பல நோய்கள், வாதசூலை ஆகிய காரணங்களால் கெர்ப்பம் தரிக்காது என்பர்.

*கேளுநீ கெர்ப்பந்தான் வாழ்வ தற்குக்*
*கெடியான நாக கள்ளி வேரும்*
*ஆளவே அரையரைத்துப் புன்னைக் காய்போ*
*லாவின்வெண்ணை பாக்களவு கலந்து கொள்ள*
*நீளநீ குளித்தமுதல் மூன்று நாளும்*
*நினவாகத் தானருந்தக் கெர்ப்ப முண்டாம்*
*கொள்ளவே பத்தியந்தான் புளிபுகையு முப்புக்*
*கொள்ளாமல் ஆவின்பால் சோறு முண்ணே!* 174

கெர்ப்பம் தங்குவதற்கான மருந்தினைக் கூறக்கேட்பாயாக. நாககள்ளி வேரை அரைத்துப் புன்னைக்காயளவு எடுத்துப் பசு வெண்ணெயை 2.2 கி. அளவு சேர்த்துக் கொள்க. அதைப் பெண்கள் மாதவிடாய் ஆகித் தலை முழுகும் முதல் மூன்று நாளும் சாப்பிட கெர்ப்பம் உண்டாகும். புளி, புகை, உப்பு, நீக்கி பசும்பால் கலந்து சோறு சாப்பிட வேண்டும்.

*உண்ணுவாய் வேப்பலரு சீந்தித் தண்டு*
*உடன்முத்தக் காசுடனே ஒக்கத் தட்டி*
*கண்ணவே சாறுரியும் நெய்யு ழக்குங்*
*கலந்துநீ கொதிப்பித்துக் காலை மாலை*

*திண்ணமாய்க் குளித்தமுதல் மூன்று நாளுந்*
*திடமாக அருந்திடவே கெர்ப்ப முண்டாம்*
*ஒண்ணாமல் சீந்திவேர் பொன்னாங் காணி*
*இதமாக வேரரைத்து நெய்யில் தாக்கே! 175*

வேப்பம்பூ, சீந்தில் தண்டு, கோரைக்கிழங்கு, இவற்றை ஒன்று சேர்த்து இடித்து 675 மி.லி. சாறு எடுத்துக் கொள்க. அதனுடன் நெய் 325 மி.லி சேர்த்துக் காய்ச்சி காலை, மாலை இரண்டு நேரமும் தலை முழுகிய மூன்று நாளும் குடிக்க கெர்ப்பம் உண்டாகும்.

சீந்தில், பொன்னாங்காணி இவற்றின் வேர்களை அரைத்து நெய்யில் கொள்ள கெர்ப்பம் உண்டாகும்.

*தாக்குவாய் பெருங்கா யம்யிந் துப்புத்*
*தறுகாமல் புளியமரப் புறணி கூட்டி*
*ஊக்கமுடன் கற்றாழை சாற்றாலாட்டி*
*உருட்டுவாய் புன்னைக்கா யளவ தாக*
*ஏற்கவே குளித்தமுதல் மூன்று நாளும்*
*இதமாக நீயருந்து கெர்ப்ப முண்டாங்*
*கேட்கவே வாய்வுஅறும் பூச்சி விழுங்*
*கெடியான தோஷமுடன் விஷக்கிரகம் போமே! 176*

பெருங்காயம், இந்துப்பு, புளியமரத்தின்பட்டை இவற்றைக் கற்றாழைச் சாற்றால் அரைத்து புன்னைக் காயளவுள்ள குளிகைகளாக உருட்டிக் கொள்க. அதனைத் தலை முழுகிய முதல் மூன்று நாட்களும் உட்கொள்ள கெர்ப்பம் உண்டாகும். வாய்வு, பூச்சி, தோடம், விடக்கிரகம் தீரும்.

*சிதப்பாலை வெட்பாலை வாலுளுவை கடுக்காய்*
*வேண்டுநெல்லி தான்றிக்காய் கொன்னைப் பட்டை*
*சிதப்பான கொடுவேலி இந்த சுக்கு*
*நிறையாக வகைமூன்று கழஞ்சு கூட்டி*

*அசப்பான பிரமிச்சார் ஆவின் பாலு*
*அப்பனே வகைக்குயிரு நாழி கூட்டி*
*பிசகாமல் முன்மருந்து சாற்ற ரைத்துப்*
*பின்னுமோ ஆவினெய் நாழி கூட்டே! 177*

சிதப்பாலை, (சதாப்பிலை) வெட்பாலை, வாலுளுவை, கடுக்காய், நெல்லி, தான்றிக்காய், சுக்கு, கொன்றைப்பட்டை, கொடிவேலி இவற்றை வகைக்கு 15 கி. எடுக்க. பிரமிச்சாறு, பசும்பால் வகைக்கு 2.6 லி. எடுத்து மேற்கூறிய மருந்து சரக்கை அரைத்துப் பசு நெய் 1.3 லி. சேர்க்க.

*நாழிநெய் யுடன்மருந்தை யெல்லாஞ் சேர்த்து*
*நன்றாகக் கொதிப்பித்து மெழுகு போல*
*தாழியாங் கலசத்தில் வடித்துக் கொண்டு*
*தருகாமல் முழுகுமந்த மூன்று நாளும்*
*ஊழியா மிருபோது கரண்டி யுண்ண*
*உத்தமமாங் கெர்ப்பமுண்டா முறுதி யாகுங்*
*காளியெனும் சாமுண்டி பிசாசு நோய்கள்*
*கடந்தோடும் பத்தியம்நீ கண்டு கொள்ளே! 178*

அனைத்தையும் ஒன்று கலந்து காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்து வேறொரு கலசத்தில் ஊற்றிக் கொள்க. மாதவிடாயான மூன்று நாளும் காலை, மாலை 16 மி.லி. உட்கொள்ள கெர்ப்பம் உண்டாகும்.

*கண்டுதான் சொல்லுகிறே னின்னங் கேளு*
*கான்முத்தி லெருக்கின்பா லரைப்புக் கட்டி*
*தண்டாமல் மெழுகுபோ லரைத்து ருட்டி*
*தனியேழு ஞாயிறுக்கு வெந்நீர் கொள்ளு*
*முண்டியே யெடுத்திட்டால் மோருஞ் சோறு*
*முக்கியமாய்த் தயிராகும் வேறு கேளு*
*பண்டுகை காலெரிவுக்கு வேறு கேளு*
*நீர்முள்ளி-பா லுடனருந்திடவே பறந்து போமே! 179*

ஆமணக்குக் கொட்டையை எருக்கம்பாலில் சேர்த்து மெழுகுபோல் அரைத்து வெந்நீரில் சாப்பிட எழுஞாயிறு நீங்கும். மோர்ச்சோறு, தயிர் கொடுக்கவும். கால், கை எரிச்சலுக்கு நீர்முள்ளியைப் பால் சேர்த்தரைத்துச் சாப்பிட குணமாகும்.

## கண்டமாலைக்கு

*பறந்துபோங் கழுத்தில்வருங் கண்ட மாலை*
*பாங்கான சிறுகுறிஞ்சாப் பலந்தா னஞ்சு*
*பறந்துபோம் பொடியாக்கி வசம்பு உள்ளி*
*பாங்கான நல்லெண்ணை தன்னி லிட்டு*
*பறந்துபோம் எரியிட்டுப் பதமாக் காய்ச்சிப்*
*பாங்கான புண்ணிலிட்டு மண்டலங் கொண்டால்*
*பறந்துபோம் புண்ணாறும் பத்தியமில் லாமல்*
*பத்தியா யுள்ளருந்து பலிக்கு மின்னே!* 180

சிறுகுறிஞ்சான் 175 கி. எடுத்து வசம்பு, உள்ளியையும் பொடித்து நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி புண்ணிலிட்டு நாற்பது நாட்கள் உட்கொண்டால் புண்ணும் ஆறும். கண்ட மாலையும் தீரும். பத்தியம் ஏதும் இல்லை.

## அந்தர வாய்வுக்கு மருந்து

*மின்னேகிற் வாய்வேகும் போக விட்டு*
*பெருங்குமி ழம்வேர் கழற்சி வேருஞ்*
*சொன்னதொரு கிலுகிலுப்பை வழுதலைகாக் கணமுருங்கை*
*துலங்கு சாரணை சிவதை அமுக்கிராவும்*
*வண்ணமாங் கொடிவேலி வகைபலமு மிடவி*
*விட்டு தண்ணீர் மறுகக் காய்ச்சிப்*
*பொன்னேநீ எட்டொன்றாய் வடித்துக் கொண்டு*
*போடுவாய் வெள்ளுள்ளி பலந்தான் பத்தே!* 181

பெருங்குமிழ், கழற்சி இவற்றின் வேர், கிலுகிலுப்பை, வழுதலை, காக்கணம், முருங்கை, சாரணை, சிவதை, அமுக்கிரா, கொடிவேலி இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துத்

தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க. வெள்ளுள்ளி 350 கி. எடுத்து 10.7 லி. தண்ணீரில் போட்டுக் கொள்க.

*பத்துநீ போட்டிடுவாய் பதக்கு நீரில்*
*பதறாமல் எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொண்டு*
*வத்தினபின் ரண்டுமொன்றாய்ச் சேர்த்து நன்றாய்*
*வகையான வாதடக்கி படிதான் ரண்டு*
*சுத்தமுடன் கழல்பருப்பு பலந்தா னஞ்சு*
*சொல்லிரதங் காந்தங்காய கெந்திகாய மிந்து*
*வெத்திபெருஞ் சவுக்கம் வளைய லுப்பு*
*வெருவா லுளுவை சீரகம் வசம்பே!* 182

எட்டொன்றாய்க் காய்ச்சி வற்றியபின் இரண்டு குடிநீரையும் சேர்த்துக் கொள்க. வாதமடக்கி 2.6 லி., கழற்சிப்பருப்பு, 175 கி., இரசம், காந்தம், கெந்தகம், இந்துப்பு, பெருங்காயம், சவுக்காரம், வளையலுப்பு, வாலுளுவை, சீரகம், வசம்பு எடுக்க.

*வசம்பாக மாயரைப்பாய் கசாய மிட்டு*
*மருந்துசித்தா மணக்கெண்ணை படிதான் ரெண்டு*
*நிசம்படவே ஏகமொன்றா யரைத்துக் கொண்டு*
*நினவாக அடுப்பேத்தி வடித்து நீதான்*
*பிசகாமல் பத்தியந்தா னருந்தும் போது*
*பிணியில்லை வாய்வில்லை வாத மில்லை*
*துசங்கட்டி இதையுண்டு துலைப்பா யானால்*
*தூரத்தே அந்தரவாய்வு துலைந்து போமே!* 183

இவற்றைக் குடிநீரிட்டு அரைத்து அதனுடன் ஆமணக் கெண்ணெய் 2.6 லி. சேர்த்தரைத்துக் காய்ச்சி பக்குவத்தில் வடித்து வைத்துக் கொள்க. அதைப் பத்தியத்துடன் குடிக்க வாய்வு, வாதம் அந்தரவாய்வு ஆகியவை தீரும்.

## அசுவகெந்தி சூரணம்

*துலைவதற்கு இன்னமொரு மருந்து கேளு*
*சுகமான அமுக்கிரா பலந்தா னூறு*
*மலையாமல் சமூலமுடன் உலர்த்தித் தூளாய்*
*வடிகொண்டு கலசத்தில் வேடு கட்டி*
*அலையவே வேண்டாங்கா ணொன்று போது*
*மனுபான மருந்துநீ கொண்டா யானால்*
*மலைபோலே வந்ததொரு வியாதி யெல்லாம்*
*மக்களே விட்டோடு மாறிச் செய்யே!* 184

அமுக்கிரா 3500 கி. சமூலத்துடன் எடுத்து உலர்த்தி வேடுகட்டி முறைப்படி சூரணம் செய்து தக்க அனுபானத்துடன் கொண்டால் பல நோய்கள் விலகும்.

*மாறியே மெலிந்தவுடல் நெய்யில் கொள்ளு*
*மயக்கமாம் பெருத்திருந்தால் தேனில் கொள்ளு*
*மீறுபித்த பாண்டுவுக்கு எருமை மோராம்*
*விஷமான எலிக்கடிக்கு கோமியமு மாகும்*
*பூரியதோர் விரியனுக்கு வெந்நீர் கொண்டு*
*பூசுவது மதுவாகுஞ் சிரங்குக் கெல்லாம்*
*நாரியே வெள்ளாட்டு நீரில் கொண்டு*
*நலமாக மேல்பூச நன்றாய்த் திரும்!* 185

மெலிந்த உடல் பருக்க நெய்யிலும் பருத்த உடல் மெலிய தேனிலும் இச்சூரணத்தை உட்கொள்ள வேண்டும். பாண்டுவிற்கு எருமை மோரிலும், எலிக்கடிக்கு கோமியத்திலும், விரியன் கடிக்கு வெந்நீரிலும் கொடுக்க குணமாகும். சிரங்குக்கு வெள்ளாட்டு நீரில் கலந்து மேல் பூசத் தீரும்.

*நன்றான பிள்ளைதா னிளைத்தி ருந்தால்*
*நலமான ஆவின்பால் கலக்கிக் கொள்ளு*
*சென்றான குன்மவலிக்கு நார்த்தம் பழமாம்*
*தேவிமார் கைமயக்கு பசுவின் வெண்ணெய்*
*ஒன்றான மிளகுத்தூள் கூட விட்டு*
*உடனருந்த கைமயக்க மோடிப் போகும்*

*வென்றதொரு குட்டமெல்லாம் விட்டே போக*
*வேப்பெண்ணெய் நாள்தோறும் மிழுங்கி டாயே!* 186

குழந்தைகள் இளைத்திருந்தால் பசும்பாலிலும் குன்ம வலிக்கு நாரத்தம் பழத்திலும், பெண் வசியம் நீக்குவதற்கு மிளகுத்தூள் சேர்ந்த பசு வெண்ணெயிலும் குட்டத்திற்கு வேப்பெண்ணெயிலும் கலந்து சாப்பிடத் தீரும்.

*விழுங்குவாய் வாதம்விட விளக்கெண் ணைக்குள்*
*மேலும்நீ பூசிடுவாய் கும்பி கொண்டு*
*கலங்காமல் தூரமது காணா விட்டால்*
*காட்டுத்திப் பிலிச்சாறுங் காயங் கூட்டி*
*விளங்குசன்னி கோமியமும் நல்லெண்ணெய் கூட்டி*
*மிகவருந்து மேல்பூசு விட்டே போகும்*
*புளங்குகின்ற விப்புருதி வெந்நீர் கொண்டு*
*பூசிடுவாய் வீக்கத்தில் புகலக் கேளே!* 187

வாதம் நீங்குவதற்கு விளக்கெண்ணெயில் கலந்து மேல் பூச குணமாகும். மாதவிடாய் காணாமைக்குக் காட்டுத்திப்பிலிச் சாற்றையும், பெருங்காயத்தையும் கலந்து அதில் இச்சூரணத்தைக் கொடுக்க காணும். சன்னிக்கு கோமியத்தையும் நல்லெண்ணெ யையும் கூட்டி மேல் பூச நீங்கும். விப்புருதிக்கு வெந்நீரில் இச்சூரணத்தைக் கலந்து வீக்கத்தில் பூச நலமாகும்.

*புகலுவேன் நீர்விரியன் நீரில் பூசு*
*பிள்ளைனோய்க்குக் கருவான் பச்சைப் பாலில்*
*அகலவே மேல்பூச காமா லைக்கு*
*அப்பனே வேப்பம்பட்டைச் சாற்றில் கொள்ள*
*தகைவில்லா திம்முறைகள் பாக மாகத்*
*தப்பாமல் பத்தியங்கள் தாட்சி போகா*
*வகைவகையா யனுபான மறிந்து கொண்டால்*
*மக்களே வியாதியெல்லா மாண்டு போமே!* 188

நீர் விரியன் கடிக்குத் தண்ணீரிலும், குழந்தைகளின் வயிற்று நோய்க்குப் பசும்பாலில் இச்சூரணத்தைக் கலந்து

வயிற்றில் பூச குணமாகும். வேப்பம் பட்டைச்சாற்றில் சூரணத்தைக் கலந்துகொள்ள காமாலை குணமாகும். பத்தியங்கள் அறிந்து தக்க அனுபானத்துடன் இச்சூரணத்தைக் கொண்டால் பல நோய்கள் நீங்கும்.

## குளித் தைலம்

*மாண்டுபோம் பித்தமெல்லாங் குமரி யாலே*
*மதுரமுடன் சந்தனமும் நாகப் பூவும்*
*வேண்டுமடா செண்பகப்பூ கஸ்தூரி மஞ்சள்*
*விளங்குமிரு வேலியுடன் சிவந்தி புன்னை*
*தாண்டுமடா செங்கழுநீர் கோட்டம் ஏலம்*
*தறுகாமல் கடுகுரோ கணியுங் கூட்டி*
*மீண்டுநீ திரிபாலை அஞ்சனக்கல் வங்கம்*
*விதமான தக்கோலம் சாதிக் காயே!* 189

கற்றாழை, அதிமதுரம், சந்தனம், நாகப்பூ, செண்பகப்பூ, கஸ்தூரி மஞ்சள், வெட்டிவேர், சிவந்தி, புன்னை, செங்கழுநீர், கோட்டம், ஏலம், கடுகுரோகணி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், அஞ்சனக்கல், வங்கம், தக்கோலம், சாதிக்காய் எடுக்க.

*காயான சரக்குடனே அகிலு மாஞ்சி*
*கனமான தாமரைப்பூ மூவகையுங் கூட்டி*
*ஓயாமல் மருந்தையெல்லாஞ் சமன தாக*
*எடுத்தரையாய் குமரிவேர் நீரி னாலே*
*ஆயவே எள்ளெண்ணெய் நாழி யிட்டுப்*
*பதறாமல் அடுப்பேற்றி பதம தாக*
*வாயமாய் மெழுகுபதம் வடித்துக் கொண்டு*
*வாசினையாம் புழுகுடனே பூரம் போடே!* 190

அகில், சடாமாஞ்சில் ஆகிய சரக்குகளைச் சமமெடுக்க, தாமரைப் பூக்களின் மூன்று வகையாகிய வெண்டாமரை, செந்தாமரை, நீலத்தாமரை எடுத்துக் கொள்க. கற்றாழை வேர்ச் சாற்றினால் சரக்குகளை அரைத்துக் கொள்க. எள்ளெண்ணெய்

*1.3 லி.* உடன் சேர்த்துக் காய்ச்சி மெழுகுபதமானவுடன் வடித்து புனுகு, பூரம் சேர்க்கவும்.

*பூரமுடன் கோரோ சனையும் போடு*
*பூரித்த தைலத்தின் கலசத் துள்ளே*
*வாரமஞ்ச நீர்புதனுக்கு முழுகி வந்தால்*
*மகத்தான பித்தமெல்லா மாய்ந்து போகுந்*
*தாரமுட னிருபேரும் மூழ்க வேணுஞ்*
*சகலபிணி மேகமெல்லாந் தவறிப் போகும்*
*வீரமுடன் சரீரமெல்லாம் புஷ்டி யாகும்*
*வெகுசுருக்குக் குளித்தயிலம் வேண்டிப் பாரே! 191*

கோரோசினையையும், எண்ணெயில் சேர்த்துக் கொள்க. புதன்கிழமை இவ்வெண்ணெயைத் தேய்த்து முழுக பித்தம் அனைத்தும் நீங்கும். ஆண், பெண், இருவரும் குளிக்க வேண்டும். அனைத்து மேக நோய்களும் நீங்கும். இக்குளித் தைலத்தினால் உடல் உறுதிப்படும்.

## கர்ப்பவதிகளுக்குக் கழிச்சல் ஆனால் மருந்து

*வேண்டியே கர்ப்பமா யிருந்த பேர்க்கு*
*வெடிப்பாக வயிர்கழிந்தால் மருந்து கேளு*
*ஆண்டிருந்த முதல்மாதம் வயிறு போனா*
*லப்பனே முண்டகப்பூக் கொத்துமல்லி*
*மீண்டதொரு இருவேலி சமனும் நீரில்*
*மிகவரைத்துப் பாலருந்த மிதமாய் நிற்கும்*
*மூண்டிருந்த மறுமாதம் போக்குண் டானால்*
*புகழ்நெய்தல் கிழங்குநா யுருவி வேரே! 192*

கர்ப்பமான பெண்களுக்கு ஒவ்வொரு மாதமும் கழிச்சல் உண்டானால் மருந்தினைக் கூறுகிறேன் கேட்பீர்களாக. தாமரைப்பூ, கொத்துமல்லி, வெட்டிவேர், சமமாக எடுத்துத் தண்ணீரில் அரைத்துப் பாலில் கலந்து குடிக்க முதல் மாதத்திய கழிச்சல் நிற்கும்.

*வேருடனே சந்தனமும் நீர ரைத்து*
*விதமான ஆவின்பால் தனில ருந்து*
*பாருநீ மூன்றா மாத்தைக் கறுபார்*
*பகர்நெருஞ்சி ஆம்பல்பூ வாழைக் கட்டை*
*நீராலே தானரைத்துப் பாலில் கொள்ளு*
*நிசம்நாலு மாத்தைக்கி லாமிச் சோடு*
*ஆராக்காஞ் சந்தனம் தாமரையின் வேரு*
*மதில்நீரில் தானரைத்துப் பாலில் கொள்ளே!* 193

இரண்டாம் மாதத்தில் உண்டாகும் கழிச்சலுக்கு நெய்தல் கிழங்கு, நாயுருவிவேர், சந்தனம், இவற்றைத் தண்ணீர் விட்டரைத்துப் பசும்பாலில் கலந்து கொடுக்க குணமாகும். மூன்றாம் மாதத்தில் ஏற்படும் கழிச்சல் நிற்க நெருஞ்சி, ஆம்பல்பூ இவற்றை வாழைத் தண்டு நீரால் அரைத்துப் பாலில் கலந்து கொடுக்கவும். நான்காம் மாதத்திய கழிச்சலுக்கு விலாமிச்சம், சந்தனம், தாமரைவேர் இவற்றைத் தண்ணீரில் அரைத்துப் பாலில் கலந்து கொடுக்கவும்.

*பாலான மாதமஞ்சில் மருந்து கேளு*
*பகருகச் சோலமுடன் லாமிச் சோடு*
*ஆலையமா நெய்தல்வேர் ஆம்பல் பூவு*
*மப்பனே நீரிலாட்டிப் பாலில் கொள்ளு*
*கோலமா மாறுதனில் சீந்தியுட கொழுந்து*
*சீரகம் நெய்தல் முந்திரிகை யோடு*
*காலமே சிறுதிப்பிலி நீரி லாட்டிக்*
*கசப்பில்லாப் பாலுண்ணக் கழிச்சல் நிற்கும்!* 194

ஐந்தாம் மாதத்தில் ஏற்படும் கழிச்சலுக்குக் கச்சோலம், விலாமிச்சம், நெய்தல் வேர், ஆம்பல் மலர் இவற்றை நீரில் அரைத்துப் பாலில் கலந்து குடிக்க குணமாகும். ஆறாம் மாதத்தில் சீந்தில் கொழுந்து, சீரகம், நெய்தல் முந்திரிகை, சிறுதிப்பிலி, இவற்றை நீரில் அரைத்துப் பாலில் கலந்து குடிக்க நலமாகும்.

*நிற்கவே யேழாந்திங்கள் சந்தனம் லாமிச்சு*
*நிசமான தக்கோலந் திப்பிலி நெய்தல்*
*பக்குவமாய் நீரரைத்துப் பாலில் கொள்ளு*
*பகருயெட்டுத் திங்களிலே விளாங்காய்ச் சாறு*
*தக்கனெய்த லரிசியுடன் இலுப்பைப் பூவும்*
*சக்கரையுங் கல்கண்டுந் தான ரைத்து*
*மெய்க்கவே பாலிலுண்ண வியாதி போகும்*
*விதமான ஒன்பதாந் திங்கள் கேளே!* 195

ஏழாம் மாதத்தில் சந்தனம், விலாமிச்சு, தக்கோலம், திப்பிலி, நெய்தல் இவற்றை அரைத்துப் பாலில் கலந்து குடிக்க குணமாகும். எட்டாம் மாதத்தில் விளாங்காய்ச்சாறு, நெய்தல் அரிசி, இலுப்பைப்பூ, சர்க்கரை, கல்கண்டைச் சேர்த்தரைத்துப் பாலில் கலந்து குடிக்க கழிச்சல் நலமாகும்.

*திங்களாம் முந்திரிகை இலுப்பைப் பூவுந்*
*திறமான தாமரைப்பூ பாலில் கொள்ள*
*பொங்கமுடன் பத்தாந்திங்கள் வயிறு போனால்*
*புதுமையுள்ள குலதெய்வம் போற்றி செய்து*
*மங்காமல் காத்திடவே பிராத்தித் தப்பா*
*வச்சுநீ வணங்கிடவே நிவர்த்தி யாகும்*
*கங்கலூர் காவலனாம் சமையத் தெய்வம்*
*காக்கஒன்றா காப்பொன்று மூன்றுகயிர் போடே!* 196

ஒன்பதாம் மாதத்தில் முந்திரிகை, இலுப்பைப்பூ, தாமரைப்பூ இவற்றைப் பாலில் அரைத்துக் குடிக்க கழிச்சல் தீரும். பத்தாம் மாதத்தில் கழிச்சலுக்குக் குல தெய்வத்தை வணங்கினால் நிவர்த்தியாகும். காப்புக் கயிறு கையில் கட்டவும்.

### கர்ப்பவதிகளின் கிராணிக்கு மருந்து

*கைப்பில்லா வின்னமொரு மருந்து கேளு*
*காரிழையாள் கர்ப்பமுடன் கிராணி யெல்லாம்*
*மெய்ப்பான இஞ்சிச்சார் படிதான் ரெண்டு*
*வெந்தயமே குரோசாணி கிராம்பு கூட்டி*

*வைப்பான சாதிக்காய் விராகன் ரெண்டு*
*வகைவகையாய் வாங்கியே விடைய மூன்று*
*தொய்ப்பான இளவறுப்பாய்ச் சூர ணித்து*
*சுகமாக இஞ்சிச்சா றடுப்பி லேற்றி!* 197

கசப்பில்லாத மற்றொரு மருந்தினைக் கேளுங்கள். இஞ்சிச்சாறு 2.6 லி. எடுக்க. வெந்தயம், குரோசாணி ஓமம், கிராம்பு, சாதிக்காய் இவற்றை வகைக்கு 8 கி. எடுக்க. அதிவிடையம் 12 கி. எடுத்து இளஞ்சூட்டில் வறுத்துச் சூரணம் செய்து கொள்க.

*ஏற்றியதோர் சாரணைப் பாகு போலே*
*இதமாகச் சுண்டிவரில் பொடியைத் தூவிப்*
*பார்த்திடுவாய் கற்கம்போல் பதந்தான் கண்டு*
*பாங்கான மறுசட்டி தன்னி லப்பா*
*ஊற்றிடுவாய் கற்கந்தான் வடகம் போல*
*உறுதிக்கி வடகம்போ லுருட்டி வெய்யில்*
*நேர்த்தியதாய்க் கலசத்தில் எடுத்து வைத்து*
*நிதமாக ஒருஉண்டை தயிரில் கொள்ளே!* 198

இஞ்சிச்சாற்றைப் பாகு போல் காய்ச்சிச் சுண்டி வரும் போது சூரணத்தைத் தூவிக் கிளறி கற்கம்போல் ஆகும் போது மறுசட்டியில் மாற்றிக் கொள்க. பின் அம்மருந்தை வடகம் போல் உருட்டி வெயிலில் வைத்து உலர்ந்த பிறகு எடுத்துப் பத்திரப்படுத்திக் கொள்க.

*தயிரான மேதையுட தயிரு மோருந்*
*தப்பாம லோருண்டை தயிரில் வைத்து*
*உயிதமுடன் தயிர்க்கலயம் உள்ளே கொள்ளு*
*உண்பதுசோர் தயிராகும் மற்ற தாகா*
*கயிரான புளிபுகையு முப்புந் தள்ளு*
*காலவே ஒர்வடகங் கவிஞ்சு கொள்ளு*
*பயிரான கிராணியெல்லா யெங்கே போச்சு*
*இதைவிட்டால் மருந்தேது வெந்நீ ராமே!* 199

அதில் ஒரு உருண்டையை எருமைத் தயிரில் அல்லது மோரில் சாப்பிட வேண்டும். தயிர், தயிர்ச்சோறு சாப்பிடுக. மற்றவற்றை நீக்குக. புளி, புகை, உப்பு இவற்றை நீக்குக. மேற்கூறிய வடகத்தைப் பத்தியங்களுடன் உட்கொள்ள கர்ப்பிணிகளின் கிராணி தீரும்.

## முயல் கிருதம்

*வெந்நீராந் தோடையிலை பலந்தா னூறு*
*இதமாக இடித்துநன்றாய் பதக்கு நீரில்*
*நண்ணயமாய்க் காய்ச்சியே எட்டொன் றாக்கி*
*நலமான முசல்தலைகால் குடல்தோல் போக்கிப்*
*பண்ணியதாய்க் கண்டமது பத்தாய் வெட்டிப்*
*பாகமாய்க் குறுணிநீர் தன்னி லிட்டு*
*சென்னியதாய்க் குறுகவே காய்ச்சிக் கொண்டு*
*சேர்த்திடுவாய் முன்சாற்றில் சேரக் கூட்டே!* 200

ஆடாதோடையிலை 3.5 கி.கி. எடுத்து இடித்து 10.7 லி. தண்ணீரில் போட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. முயலின் தலை, கால், குடல், தோல் நீக்கிப் பத்து துண்டங் களாக வெட்டி 5.3 லி. தண்ணீரில் போட்டு குறுக்கிக் காய்ச்சி மேற்சொன்ன குடிநீரில் சேர்த்துக் கொள்க.

*கூட்டுவாய் மதுரம் வெண்காரம் கோஷ்டம் யேலம்*
*கூறியதோர் லவங்கப்பூ கடுக்கா யோமம்*
*வாட்டியதோர் சீரகமும் லவங்கப் பட்டை*
*மகத்தான கற்கண்டு சாதிக் காயும்*
*தாட்டிகமாய் வெள்ளுள்ளி நாழி கூட்டித்*
*தனித்தனியே மருந்தெல்லாங் கழஞ்சு ரெண்டு*
*மூட்டியே இடித்துநீ வைத்துக் கொண்டு*
*முக்கியமா யிளநீரும் பசுவின் பாலே!* 201

அதிமதுரம், வெண்காரம், கோட்டம், ஏலம், இலவங்கப்பூ, கடுக்காய், ஓமம், சீரகம், இலவங்கப்பட்டை, கற்கண்டு, சாதிக்காய், இவற்றை வகைக்கு 10 கி. எடுத்திடித்துக் குடிநீரில் சேர்க்க. 1.3 லி. வெள்ளைப் பூண்டு இடித்துக் கலந்து கொள்க.

*பாலிளநீ ரிருநாழி நெய்யும் நாழி*
*பகருசிறுக் கீரைபொன்னாங் காணிச் சாறு*
*கோலமுடன் கடைமருந்து யெல்லா மொன்றாய்க்*
*கூடவே போட்டுநீ குமுறக் காய்ச்சிச்*
*சாலவே மெழுகுபதமாய் வடித்துத்*
*தறுகாம லாழாக்கு நெய்கு டிப்பாய்*
*ஏலவே மேகமெல்லாந் திரு மப்பா*
*இன்னமொரு வயித்தியந்தா னியம்பக் கேளே!* 202

இளநீர், பசும்பால் வகைக்கு 2.6 லி. நெய், சிறுகீரை, பொன்னாங்காணிச்சாறு வகைக்கு 1.3 லி. எடுத்துக் கலந்து நன்கு காய்ச்சி மெழுகு பதமாய் வடித்துக் கொள்க. 165 மி.லி நெய்யைக் குடிக்க மேகம் அனைத்தும் தீரும்.

## மூத்திரக் கிரிச்சரத்துக்கு மருந்து

*கேட்பதற்கு மூத்திரக் கிருட்சி போகக்*
*கெடியான சிறுபீளை நெருஞ்சி வேரும்*
*பார்ப்பதென்ன செங்கழுநீர் வேரும்.......*
*பகருசெப்பு நெருஞ்சிவேர் பரிந்து கூட்டி*
*வார்ப்பதுதா னாவின்பா லரைத்துக் கொண்டு*
*வளமாக அதில்குழப்பி மருந்து கொள்ளத்*
*தீர்ப்பதுதான் மூத்திரக் கிருட்சி போகுந்*
*தேகத்தின் உள்காந்தல் தெளிவ தாமே!* 203

சிறுபீளை, நெருஞ்சில், செங்கழுநீர், செப்பு நெருஞ்சில் இவற்றின் வேர்களைச் சமமாக எடுத்துப் பசும்பாலில் அரைத்துக் குழைத்து உட்கொள்ள மூத்திரக் கிரிச்சரம் நீங்கும். உடல் வெப்பம் நீங்கும்.

## நடுக்கு வாதத்துக்கு மருந்து நெய்

*தாமென்று நடுக்கியதோர் வாதந் தீரத்*
*தனிமுருங்கை சிவதையுடன் குப்பை மேனி*
*வாமென்ற வெண்ணொச்சி மாவி லிங்கை*
*மறக்காமல் விடைத்தலையும் வெள்வே லாவும்*

*போமென்ற கருவேலு முள்புரண்டி வேரும்*
*புகழ்வேலி முசுட்டை வாத மடக்கி*
*ஆமென்ற கொத்தானுங் கொழிஞ்சி தும்பை*
*அப்பனே சாறுவகை நாழி கூட்டே!* 204

முருங்கை, சிவதை, குப்பைமேனி, வெண்ணொச்சி, மாவிலங்கை, விடத்தலை, வெள்வேல், கருவேல், முள்புரண்டி இவற்றின் வேர்களைச் சமமாய் எடுக்க. வேலிப்பருத்தி முசுட்டை, வாதமடக்கி, கொத்தான், கொழிஞ்சி, தும்பை இவற்றின் சாறுகளை வகைக்கு 1.3 லி. எடுக்க.

*நாழியுடன் முன்வேருஞ் சமனாய்க் கூட்டி*
*நன்றாகச் சாறுவிட்டு அரைத்துக் கொண்டு*
*ஊழியா யெண்ணெய்படி ரெண்டுவிட்டு*
*உறுதியா யொன்றாகக் காய்ச்சிக் கொண்டு*
*தாழியாஞ் சட்டியினில் பதமுங் கண்டு*
*தறுகாமல் வடித்திடுவாய் தயிலந்தன்னை*
*நீளியதோர் கரண்டியுண்டு மேலும் பூசி*
*நிலவரமாய் பத்தியம்வை நிவர்த்தி யாமே!* 205

மேற்சொன்ன வேர்களை இச்சாறுவிட்டு நன்கு அரைத்து நல்லெண்ணெய் 2.6 லி. உடன் சேர்த்துக் காய்ச்சிச் சட்டியில் பதத்தில் வடித்து வைத்துக் கொள்க. அதில் 16 மி.லி. எண்ணெயை உள்ளுக்குக் கொண்டு மேலுக்கும் பூசி பத்தியத்துடன் இருக்க நடுக்குவாதம் தீரும்.

## விப்புருதிக் கெண்ணெய்

*நிவர்த்தியாம் விப்புருதிக் கெண்ணை கேளு*
*நேரிசத்தி சாரணைவேர் கிலுகிலுப்பை வேரும்*
*பவித்தியாம் வசம்புள்ளி தண்ணீர் மிட்டான்*
*பாகமாய் நீலிவேர் சமன தாகத்*
*தவித்திடா தரைத்து விராகன்ரெண்டு காயஞ்*
*சாந்தமா யாவினெய் தன்னில் காய்ச்சிக்*
*குவித்திடவே இருநேர மெட்டு நாளுங்*
*கொண்டிடுவாய் காசிடை பத்தியமுங் காரே!* 206

சத்திச்சாரணை, கிலுகிலுப்பை, வசம்பு, உள்ளி, தண்ணீர் விட்டான், நீலி இவற்றின் வேர்களைச் சமமாக எடுத்து அரைத்துக் கொள்க. 8 கி. பெருங்காயம், பசுநெய்யையும் சேர்த்துக் காய்ச்சி 4 கி. அளவு காலை, மாலை இரு நேரமாக எட்டுநாளைக்குக் கொடுக்க விப்புருதி தீரும்.

*கார்ப்பதுதான் மேற்பூசு புங்கங் கொட்டை*
*காராட்டுப் புழுக்கையுடன் கலந்த ரைத்து*
*வார்ப்பதுதான் நீர்வார்த்து அரைத்துப் பூசி*
*மறக்காமல் கவுதும்பை சேங்கொட்டை*
*ஏற்பதுவே புத்துமண்ணு யிலைதான் பூலா*
*இதமாகப் பூசிடுவா யமுக்கி ராவுந்*
*தீர்ப்பதுதான் சிறுநீரி லரைத்துப் பூசத்*
*தெரிக்குமடா வீக்கமெல்லாந் தெரியும் பாரே!* 207

புங்கங்கொட்டையைக் காராட்டுப் புழுக்கையுடன் சேர்த்தரைத்துத் தண்ணீர் கலந்து மேல்பூச குணமாகும். கவிழ்தும்பை, சேங்கொட்டை, புற்றுமண், பூலாவின் இலை இவற்றைச் சேர்த்தரைத்து மேலுக்குப் பூச நலமாகும். அமுக்கிராவைச் சிறுநீரில் அரைத்துப் பூச வீக்கம் வற்றிப் போகும்.

## கணைக்கு எண்ணெய்

*தெரிந்த ஆமணக் கெண்ணை யுரி*
*சேர்குரோசனை விராகன் ரெண்டு*
*குருந்த வசம்பு ஒருபலமுங்*
*குறையா துள்ளி இருபலமுங்*
*கருந்து பூலா கொழிஞ்சியிலை*
*கருத்த சிரக மரைப்பலமும்*
*அருந்தப் பொடித்து வெயிலில்வைத்து*
*ஆகுங் கணைகள் கருவறுமே!* 208

ஆமணக்கெண்ணெய் 675 மி.லி., குரோசாணி 8 கி., வசம்பு 35கி, உள்ளி 70 கி., பூலா, கொழிஞ்சி இலைகள்,

சீரகம் இவற்றை வகைக்கு 18 கி. எடுத்துப் பொடித்து எண்ணெயில் கலந்து வெயிலில் வைக்க. அதை அளவறிந்து கொடுக்க கணைகள் தீரும்.

## இளைப்புக்கு நெய்

*கருசலாங் கண்ணி சங்காங்*
*காவேளை நொச்சிச் சாறும்*
*பெரியதோர் வில்வச் சாறும்*
*பேராடா தோடைச் சாறும்*
*அரியதூ துவளைச் சாறு*
*அமுக்கிராப் பூச்சாறு வாத*
*எரியநெய் தன்னில் காச்சி*
*நக்கவே இளைப்புத் தீரும்!* 209

கரிசலாங்கண்ணி, சங்கங்குப்பி, காவேளை, நொச்சி, வில்வம், ஆடாதோடை, தூதுவளை, அமுக்கிராப் பூ இவற்றின் சாறுகளைச் சமஅளவெடுத்து நெய்யில் கலந்து காய்ச்சி உள்ளங்கையில் ஊற்றி சாப்பிட இளைப்பு நீங்கும்.

## பல வியாதிக்கு மாத்திரை

*திருமடா கல்மதங் கல்னா ருக்கார்*
*திப்பிலியு மதிவிடையங் கடுகு ரோகணி*
*பேறுபடாத் தாளிசையுஞ் சீரகமும் ரண்டு*
*பெருஓமம் அக்கராகாரம் சாதிக் காயும்*
*பாருஅது பத்திரியுங் கஸ்தூரி மஞ்சள்*
*பஞ்ச திரவியங் குரோசாணி சிங்கி*
*வாருங் கஸ்தூரி ரோசனையும் பூரம்*
*வளமான சிலாசத்து நாயுருவி வேரே!* 210

கல்மதம், கல்நார், திப்பிலி, அதிவிடையம், கடுகுரோகணி, தாளிசபத்திரி, நற்சீரகம், பெருஞ்சீரகம், ஓமம், அக்கராகாரம், சாதிக்காய், சாதிபத்திரி, கத்தூரி மஞ்சள், கோமியம், தயிர், நெய், பால், சாணம், குரோசாணி ஓமம், கற்கடகசிங்கி, கஸ்தூரி, கோரோசனை, பூரம், சிலாசத்து, நாயுருவி வேர் எடுக்க.

*நாயுருவி கிரந்தி நாயகமுங் கூட்டி*
*நன்றாகச் சமன்கொண்டு துளசிச் சாறு*
*ஓயாத கருசலாங் கண்ணிச் சாறு*
*உற்றவெள்ளை நொச்சிச்சார் கஞ்சாங் கோரை*
*பாயுமே இஞ்சிச்சார் மருதஞ் சாறும்*
*பாயவிட்டு அரைத்துநீ கடலை போல*
*மாயமா வந்ததொரு நோய்கள் தீரும்*
*கழஞ்சிபால் தேனாம் கலந்து உண்ணே!* 211

கிரந்தி நாயகம், இவற்றைச் சமமாக எடுக்க, துளசிச் சாறு, கரிசலாங்கண்ணி, வெள்ளை நொச்சி, கஞ்சாங்கோரை, இஞ்சி, மருதம்பட்டை இவற்றின் சாறுகளை விட்டரைத்து கடலை அளவுள்ள உருண்டைகளாகச் செய்து, 5 கி. பால் அல்லது தேனில் கலந்து சாப்பிட பல நோய்கள் தீரும்.

*உண்ணவே ஆவின்நெய் உரியுக் குள்ளே*
*உத்தமமா மிச்சாறு மருந்து சேர்த்துக்*
*கண்ணவே காய்ச்சிநீ துட்டிடையே கொண்டால்*
*கடல்புகளு நோய்களெல்லாங் கமரிப் போகும்*
*பண்ணுசித்தா மணக்கெண்ணை முன்சாறு கூட்டிப்*
*பகுந்திடுவாய் கடைமருந்து கூடச் சேர்த்து*
*திண்ணமா எரிந்துநீ உள்ளில் கொண்டால்*
*தீருமே நோயெல்லாந் தெளிந்து போமே* 212

பசுநெய் 675 மி.லி. எடுத்து மேற்கூறப்பட்ட சாறு சேர்த்து மருந்தினைக் காய்ச்சி 4 கி. அளவு உள்ளுக்குச் சாப்பிட்டால் பல நோய்கள் தீரும். சிற்றாமணக்கெண்ணெயுடன் மேற்கூறப்பட்ட சாற்றினைச் சேர்த்து கடைமருந்தினையும் சேர்த்தெரித்து உள்ளுக்குக் கொள்ள நோய் தெளிந்து போகும்.

*தெளியவே மாத்திரையு நெய்யு மெண்ணை*
*செலுத்தியே வெவ்வேறு கொள்ளும் போது*
*ஒளிகிறதோர் வியாதியெல்லா முரைக்கக் கேளு*
*உறுதியாங் கார மாந்த மெட்டுப்*

*பழியான உள்காய்ச்சல் சுரங்க ளெல்லாம்*
*பட்சியுட தோஷவகை பாலகிரத தோஷம்*
*துளிவான பிரமிகெந்தக காவி சீவு*
*துலங்கு குடல் வாய்வுருண்டலி யிளைப்புத் தீரும்! 213*

இம்மாத்திரையை நெய்யுடனும் எண்ணெயுடனும் சேர்த்து வெவ்வேறாக உட்கொள்ளும்போது மாந்தம் எட்டு உள்காய்ச்சல், சுரங்கள், பட்சி தோட வகைகள், பால கிருகதோடம், குடல்வாய்வு, இளைப்பு தீரும்.

*தீருமே அத்திசுரங் காலெரிவு கையெரிவு*
*திசைகெட்டு ஓடிவிடுங் குளிகை கண்டால்*
*வாருநீ எண்ணைநெய் ஒன்றைவிட் டொரு நாள்*
*மக்களே நோயெல்லா மாய்ந்து போகுங்*
*கூறரிஞ்சு இந்தமுறை மூன்றி லொன்று*
*குழந்தைகள் நோய் தீர்ந்துவிடும் குளிர்ச்சி யாகும்*
*வேறுயின்னஞ் சூரணந்தான் சொல்லக் கேளு*
*வெகுநோய்கள் தீர்ந்துவிடு மேலாதி கேளே! 214*

அத்திசுரம், கை, கால் எரிவு, ஆகிய நோய்களும் தீரும். இவ்வெண்ணெயை ஒன்றுவிட்டொருநாள் கொடுக்க நோய்கள் தீரும். குழந்தைகளின் நோய்கள் குணமாகி குளிர்ச்சியாகும். மற்றுமொரு சூரணத்தைக் கூறக் கேட்பீராக. நோய்கள் அனைத்தும் குணமாகும்.

## ஏலாதிச் சூரணம்

*ஏலங் கோஷ்ட்டம் இலவங்கம்*
*லவங்கப் பத்திரி திரிகடுகு*
*கோல முத்தங் கொத்துமல்லி*
*குலாவு சிரகம் நாகப்பூ*
*வால சந்தனங் கற்பூரம்*
*வைக்குங் கிராம்பு தாளிசையுஞ்*
*சாலச் சமனா யிடைகொண்டு*
*சரியாச் சர்க்கரை யிடைகூட்டே! 215*

ஏலம், கோட்டம், இலவங்கம், இலவங்கப்பத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, கோரைக்கிழங்கு, கொத்துமல்லி, சீரகம், நாகப்பூ, சந்தனம், கற்பூரம், கிராம்பு, தாளிசபத்திரி, இவற்றை வகைக்குச் சமமாய் எடுத்து மொத்த எடைக்குச் சமஅளவு சர்க்கரை சேர்க்கவும்.

*கூட்டி இடித்து இதந்தன்னில்*
*குலைநோ யெரிவு காலெரிவு*
*நாட்டில் மிகுந்த பறங்கிக்குணம்*
*நல்கும் ரத்த பித்தமுடன்*
*ஈட்டின பெருரத்த இளைப்பிருமல்*
*இருகண் சுழற்றல் தலைவலித்தல்*
*வாட்டம் பெருத்த மேலெல்லா*
*மாறிப் போகுங் கண்டீரே! 216*

சேர்த்ததை இடித்துச் சூரணம் செய்து கொள்க. அதனை அளவறிந்து உட்கொள்ள சூலைநோய், எரிச்சல், காலெரிச்சல், இரத்தபித்தம், அதிக ரத்தம் வெளியேறல், இளைப்பினால் ஏற்படும் இருமல், இரண்டு கண்கள் சுழலுதல், தலைவலி, ஆகிய நோய்கள் நீங்கும்.

## அமுதாதிக் குளிகை

*கண்டதொரு குளிகையொன்று சொல்லக் கேளு*
*கசடறவே அமுர்தாதிக் கவியைச் சொன்னேன்*
*மண்டலத்தில் எல்லார்க்கும் வியாதி தீர்க்கும்*
*மகத்தான குளிகையுட மார்க்கங் கேளு*
*பண்டுள்ள வியாதியெல்லாம் பத்த றுக்கும்*
*படுபாவி மேகமெல்லாம் பறந்து போகும்*
*மண்டலத்தி லுயிர்போனா லுடனே மீட்கும்*
*அப்பனே இம்மருந்தை யறிந்து செய்யே! 217*

உலகிலுள்ள பலருக்கும் நோய்கள் தீர அமுதாதிக் குளிகையை நான் கூறுகிறேன். மேகம் தீர்வதற்கும் போன உயிர் மீண்டு வருவதற்குமான இதனை அறிந்து கொள்வீராக.

*அரிதாரந் திரிகடுகு திரி பலையு*
*மானகெந்தி இருனாவி முத்தம்*
*பொரிகாரஞ் சீரகங் கஸ்தூரி மஞ்சள்*
*போனகருஞ் சீரகமும் வில்லை வேரும்*
*தெரியவே மரமஞ்சள் அக்கராக் காரஞ்*
*சேத்திடுநீ வாய்விளங்கஞ் சந்தனமுங் கூட்டிப்*
*பெரியதொருபூ முருங்கைவட்டத் திருப்பி வேரும்*
*பேர்கண்டங் கத்திரியின் வேருஞ் சேரே! 218*

அரிதாரம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கெந்தகம், பச்சை நாவி, வசநாவி ஆகிய இரண்டு நாவிகள், கோரைக் கிழங்கு, பொரிகாரம், சீரகம், கஸ்தூரி மஞ்சள், கருஞ்சீரகம், வில்வவேர், மரமஞ்சள், அக்கராகாரம், வாய்விடங்கம், சந்தனம், முருங்கை, வட்டத் திருப்பி, கண்டங்கத்திரி வேர் ஆகிய வேர் வகைகளை எடுக்க.

*சேர்த்திடுவாய் வேர்வகையுங் கடைம ருந்துந்*
*திறமாக வகைக்குஒரு விராகன் விதம்*
*ஆத்திட்ட வாளஞ்சுத்தி விராகன் பத்து*
*ஆனதொரு மருந்தெல்லா மொன்றாய்ச் சேர்த்து*
*கோர்த்திடவே கடைமருந்துஞ் சுத்திபண்ணி*
*குளிகைக்கல்லி லரைப்பதற்குக் கூறக் கேளு*
*வார்த்திடுவாய் மஞ்சள்சார் பிசறிக் கொண்டு*
*மகிழஅரை கையான்சார் முருங்கைப் பட்டை! 219*

கடைச்சரக்குகளை வகைக்கு 4 கி. எடுத்துக் கொள்க. சுத்தி செய்த நேர்வாளத்தை 40 கி. எடுத்து அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொள்க. மஞ்சள் சாற்றினால் மருந்து களைப் பிசறிக் கொள்க. முருங்கைப் பட்டைச் சாற்றாலும், கையாந்தகரைச் சாற்றாலும் நாளொன்றுக்கு வகைக்கு மூன்று மணி நேரமரைத்துக் கொள்க.

*பட்டையின்சா றொருநாளுங் கையான்சா றொருநாள்*
*பதறாமல் நாளொன்று சாம மொன்று*

எட்டுநா ளிம்முறையா யரைத்து மையா
இதமாக மிளகதுபோல் நிழலு லர்த்திக்
திட்டமாய்க் கைபார்த்து முகத்தை பார்த்துத்
திறமான நோயறிந்து குளிகை யொன்று
கட்டளையாய் நாளஞ்சு யெட்டு யேழு
கனமான நோய்களுக்குப் பத்துநாள் செய்யே! 220

இவ்வாறு எட்டு நாட்கள் அரைத்து மிளகளவாக நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்திக் கொள்க. அதனைத் தக்க அனுபானத்துடன் அளவறிந்து ஐந்து, எட்டு, ஏழு, பத்து நாட்கள் என்று நோயின் தன்மைக் கேற்ப கூட்டியும் குறைத்தும் கொடுக்க நலமாகும்.

செய்திடு வியாதிக் கெல்லாந்
தீரப்பா அனுபா னத்தில்
அய்யத வியாதி வெவ்வே
ரருந்துவ தொவ்வோ ருண்டை
தையலே இருநே ரந்தான்
தாக்கிட னோயள் தீரும்
பய்யவே சங்க கிராணி
போகும்பா திரியின் பட்டை! 221

பல வியாதிகளுக்கு ஏற்ற அனுபானங்களில் இரண்டு நேரமும் கொடுக்க அவை தீரும். கிராணிக்குப் பாதிரியின் பட்டையை அரைத்துக் கொள்ளவும்.

பட்டையை அரைத்து மேதை
இளந்தயிர் குடிக்கத் தீருந்
திட்டமாங் கழிச்ச லுக்குச்
செலுத்து மூன்றே அம்மோரில்
நட்ட விக்கல் வெந்நீராம்
நாட்டு நெல்லிக் காய்ச்சாறு
எட்டி மாய மாய்மிகுந்தா
லங்கு நின்பப் பழச்சாறே! 222

பின் அதை எருமைத் தயிரில் கலந்து குடிக்கத் தீரும். கழிச்சலுக்கு மூன்று குளிகைகளை மோரில் இழைத்துக் கொடுக்க குணமாகும். விக்கலுக்கு வெந்நீரிலும், நெல்லிக்காய்ச் சாற்றிலும் இழைத்துக் கொடுக்க நலமாகும்.

*சாறும் விரையும் உண்டையுடன்*
*தாக்கு நசியங் கண்ணிலிடு*
*மீறு மெருமை சாணிச்சார்*
*வேண்டும் நொச்சி சார்நெய்யாங்*
*கூறு மாச்சி நீலிச்சார்*
*கூட்டு வந்தோ ருண்டையுண்ண*
*ஏறும் விஷம்போம் நீயருந்த*
*எல்லா விஷமு மிகழ்ந்திடுமே!* 223

எட்டி விடத்திற்கு எலுமிச்சம் பழச்சாற்றில் குளிகையை இழைத்துக் கண்ணில் விடவும். மூக்கில் நசியமாக விடவும், விட விடம் நீங்கும். எருமைசாணிச் சாறு, நொச்சிச்சாறு, நீலிச்சாறு இவற்றைக் கலந்து குளிகையை அதில் இழைத்துக் கொடுக்க அனைத்து விடமும் நீங்கும்.

*இகழு மிரத்த வண்டெலிக்கு*
*யிடுநீ பாக்கு வெற்றிலையில்*
*நகலுஞ் சன்னி இஞ்சிச்சார்*
*நாட்டுத் திப்பிலி கூட்டியிடு*
*புகழும் பச்சை நாபிதின்றால்*
*போகும் பச்சைக் களிநீரில்*
*மகிழும் சாதிக் காயாகும்*
*மறுத்துக் கண்ட மாலைப்புண்ணாம்!* 224

வண்டு, எலிக்கடிக்குப் பாக்கு வெற்றிலைச் சாற்றிலும், சன்னிக்கு இஞ்சிச் சாற்றுடன் நாட்டுத் திப்பிலியைக் கலந்த சாற்றிலும் கொடுக்க குணமாகும். பச்சை நாவி விடத்தினால் பாதிக்கப்பட்டவர்களுக்குப் பச்சைக் கழு நீரிலும் கண்டமாலைக்கு சாதிக்காய் இழைத்த நீரிலும் கொடுக்க வேண்டும்.

*புண்ணாந் துளசிச் சாற்றரைத்துப்*
*பூச ஆறும் உள்ளருந்த*
*கண்ண வுதிர வாய்வுக்குக்*
*காட்டு வசம்பு புளியிலைச்சார்*
*திண்ண ஆவி னிராகுஞ்*
*சேரு நெய்யாம் வெந்நீராம்*
*வண்ண மருந்து முதிரோக*
*வாய்வு கையான் சாறாகும்!* 225

புண்ணுக்குத் துளசிச்சாற்றில் அரைத்து மேலுக்குப் பூச ஆறும். உதிர வாய்வுக்குக் காட்டு வசம்பும், புளியிலைச் சாறும் சேர்ந்த கலவையில் இழைத்துச் சாப்பிடக் குணமாகும். நெய்யையும், வெந்நீரையும் சேர்த்துக் கொள்க. இரத்தநோய், வாய்வுக்கு கையாந்தகரைச்சாற்றில் உரைத்துக் கொள்ளவும்.

*சாறாங் குளிகை காய்ச்சலுக்குத்*
*தாக்கு ஆலம் பாலாகுங்*
*கூறு நிம்பப் பழச்சாற்றில்*
*கூட்டி அஞ்சன மிடப்போகுந்*
*தீரும் நாலா முறைக்காச்சல்*
*தெளியு மூமத்தஞ் சாற்றிலுண்ண*
*வாருஞ் சீத சுரத்துக்கு*
*வாங்கு சீரகம் சர்க்கரையே!* 226

காய்ச்சலுக்கு ஆலம் பாலில் இழைத்து உள்ளுக்குக் கொடுக்கவும். எலுமிச்சம் பழச்சாற்றில் இழைத்துக் கண்ணுக்கு மையாக இட காய்ச்சல் நீங்கும். நான்காம் முறைச்சுரத்திற்கு ஊமத்தஞ் சாற்றிலும் சீத சுரத்திற்குச் சீரகம், சர்க்கரை சேர்ந்த குடிநீரிலும் கொடுக்கத் தீரும்.

*கரைக்குந் தாப சுரத்துக்குக்*
*கரையான் துளசிச் சாறாகும்*
*நிறைக்குந் திரிபலைக் கிஷாயமுமாம்*
*நேரே வெந்நீ ரதுவாகும்*

*மறைக்குந் துளசி நின்பச்சார்*
*அதிலே யுரைத்துக் கண்ணிலிடு*
*எரைக்கும் வேறு ரோகமெல்லா*
*மேகும் வசம்பு வரைமுருங்கை!* 227

தாப சுரத்திற்குத் துளசிச்சாற்றிலும், திரிபலைக் குடிநீரிலும், வெந்நீரிலும் உரைத்துக் கொடுக்க வேண்டும். துளசி, எலுமிச்சம் பழச்சாறு இவற்றில் உரைத்துக் கண்ணில் இட கண் நோய்கள் விலகும். பிற நோய்களுக்கு வசம்புத்தூளிலும், முருங்கைச் சாற்றிலும் வழங்கலாம்.

*முருகு திரிதோஷ சுரவாய்வு*
*முழங்கும் பைத்திய மிவையெல்லாங்*
*கருகு நின்பப் பழச்சாற்றில்*
*கடுகு உரைத்துக் கண்ணிலிடப்*
*பெருகு சுக்கிலத் தம்பனம்போம்*
*புளியம் விரைத்தோல் சூரணத்தில்*
*உருகு முசலன் வலிப்புக்கு*
*உரைத்து அஞ்சனங் கையான்சார்!* 228

திரிதோடம், சுரவாய்வு, பித்தம் ஆகிய நோய்களுக்கு எலுமிச்சம் பழச்சாற்றில் இம்மாத்திரையை உரைத்துக் கண்ணில் ஊற்ற நலமாகும். புளியம்விதை ஓட்டுச் சூரணத்தில் இழைத்துக் கொடுக்க சுக்கிலத்தம்பனம் குறையும். கையாந்தகரைச் சாற்றில் இழைத்து அஞ்சன மாகத்தீட்ட முயல்வலிப்பு நீங்கும்.

*சாற்றுகிறோம் வாய்வுசுரம் வயிற்று ஊதல்*
*தவறாமல் பாகையிலைச் சாற்றில் கொள்ள*
*போற்றியதோர் முருங்கைத்தோல் நெய்யு ரைத்து*
*பொருந்தவே உண்டுவிடு பின்னுங் கேளு*
*காத்திடவே சீரகமுஞ் சர்க்கரையுங் கொள்ளு*
*கனமான நெல்லிக்காய் சாறு மாகும்*
*வித்துகட்டுஞ் சூலைக்கு அமுரி கூட்டி*
*வெண்காரம் பொரித்துண்ண விட்டுப் போகும்!* 229

வாய்வு சுரம், வயிற்றுப்பிசத்திற்கு பாகலிலைச் சாற்றில், இழைத்துக் கொடுக்க நலமாகும். முருங்கைத் தோலினை நெய்யில் உரைத்துச் சேர்த்துச் சாப்பிட வேண்டும். சீரகத்தையும், சர்க்கரையையும் சேர்த்துக் கொடுக்கவும். நெல்லிக்காய் சாற்றினையும் குடிக்கவும். விந்துவினைக் கட்டும் சூலைக்கு மாத்திரையை அமுரியுடன் சேர்த்துக் கொடுக்கவும், வெண்காரத்தையும் பொரித்துக் கொடுக்கவும்.

*போவதற்கு வியாதிக்கு ஆட்டுப் பாலில்*
*புகளமுரி கூட்டியே குடிக்க நன்று*
*ஆவதொரு காசம்போம் வெண்கார மாகு*
*மானதே சிறுவழுதல்விரைச் சூரணமுந் திண்ண*
*கேவலமாஞ் சுவாசமுடன் காச மெல்லாங்*
*கெடியான அருகின்சார் எலிச்செவியின் சாரும்*
*பாவகமாய்ச் சிரகமுங் கூட்டிக் கொள்ளு*
*பசியெடுக்க சிரகமும் வெல்ல முண்ணே!* 230

ஆட்டுப்பாலில் அமுரியைச் சேர்த்துக் குடிக்க காசம் நலமாகும். வெண்காரத்தையும் சேர்த்துக் கொள்ளவும். சிறுவழுதுணை விதைச் சூரணத்தைச் சாப்பிட சுவாச காசம் நீங்கும். அருகம்புல் சாற்றையும், எலிச்செவியின் சாற்றையும் கலந்து சீரகத்தைச் சேர்த்து அதில் மாத்திரையை இழைத்துக் கொடுக்க சுவாசகாசம் குணமாகும். சீரகத்தையும், வெல்லத்தையும் சேர்த்து சாப்பிட பசியெடுக்கும்.

*உண்ணான மாதுபிர மேகத் துக்கு*
*உடன்தேனும் திப்பிலியும் ஆட்டுப் பாலாம்*
*ஒண்ணான சேற்றுமம்போம் அக்கலாக் காரம்*
*வாசமுள்ள சாதிக்காய் கூட்டிக் கொள்ள*
*கண்ணான வெற்றிலையில் தின்னத் தீருங்*
*கசடறவே குட்டமெல்லாந் தேனில் கொள்ள*
*எண்ணாமல் சிரகமு மாவி னீரில்*
*இட்டமுடன் கொடுக்கவே குட்டந் தீரும்!* 231

பிரமேகத்துக்கு தேன், திப்பிலி, ஆட்டுப்பால் சேர்த்து அதில் மாத்திரையை இழைத்துக் கொடுக்க குணமாகும். அக்கிராகாரம், சாதிக்காய் சேர்த்து வெற்றிலையில் மாத்திரையை இழைத்துக் கொடுக்க சிலேத்துமம் நீங்கும். தேனிலும் சீரகம் சேர்த்த கோமியத்திலும் இழைத்துக் கொடுக்க குட்டம் நீங்கும்.

*குட்டம்போம் சொறிசிரங்கு தினவு தீரக்*
*குழப்பிநல் லெண்ணையினில் பூசத் தீரும்*
*கட்டுகின்ற சூலைக்கு சலவை சன்னி*
*கையான்சார் கொடுத்திடவே கமரிப்போகும்*
*தொட்டதொரு சூலையின்மேல் மேக மானால்*
*சூரணமாஞ் சர்க்கரையுங் கொட்டைப் பாக்கு*
*வட்டவரிக் கற்றாழைச் சாறுந் தேனும்*
*வரிசையுள்ள சீரகமு முருங்கை வித்தே!* 232

சொறிசிரங்கு, தினவு தீருவதற்கு மாத்திரையைக் குழப்பி நல்லெண்ணெயில் கலந்து பூச குணமாகும். சூலை சன்னிக்கு கையாந்தகரைச் சாற்றில் இழைத்துக் கொடுக்க நலமாகும். சர்க்கரை, கொட்டைப்பாக்கு, வரிக்கற்றாழைச் சாறு, தேன், சீரகம், முருங்கைவித்து எடுக்கவும்.

*வித்துடனே இதையெல்லா மொன்றாய்ச் சேர்த்து*
*விளாவியே பழச்சாற்றில் மிகவ ருந்த*
*இத்தித்துப் பிரமேகம் சருவ மேகம்*
*ஏகமுடன் மேகமெல்லா மெருமைப் பாலாம்*
*சுத்தமா யிந்திரியம் நட்ட மானால்*
*சுருக்கான நெருஞ்சியின்சார் சீரகமுங் கொள்ளு*
*நித்தமுமே கண்ணோவு இசிப்பு மாந்தம்*
*நிகழவே தாதுவளை பிரமி கொள்ளே!* 233

இவற்றைப் பொடித்து ஒன்றாய்ச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றில் கொடுக்க பிரமேகம், அனைத்து வகை மேகம், மேகசூலை இவை குணமாகும். தாது வீணாகாது, கட்ட வேண்டுமென்றால் நெருஞ்சியின் சாற்றில் சீரகத்தைக்

கலந்து அதில் மாத்திரையைக் கொடுக்க வேண்டும். கண்நோய், இசிவு மாந்தத்திற்குத் தூதுவளை, பிரமிச் சாற்றில் குளிகையை இழைத்துக் கொடுக்கவும்.

*கேளான வெகுமூத்திரக் கிரிட்சி தீரக்*
*கொள்ளுகருந் துளசிச்சா றாட்டுப் பாலும்*
*வாளாக ஊமத்தஞ் சாறு கூட்டி*
*மகிழவே யொன்றாகக் குடிக்கத் தீரும்*
*மேளமா முடம்பெல்லா மெண்ணை போல*
*விசியே கஞ்சா செம்முள்ளிச் சாறாம்*
*தாளவாட்டுப் பால்கொம்புச் சந்தனமுந் தேனாம்*
*தாக்கவே நோயெல்லாந் தவறிப் போகும்!* 234

மூத்திரக் கிரிச்சரத்திற்கு கருந்துளசிச்சாறு, ஊமத்தஞ்சாறு இவற்றுடன் ஆட்டுப்பாலைக் கூட்டி குளிகையை இழைத்துக் கொடுக்க குணமாகும். கஞ்சா, செம்முள்ளிச்சாறு, ஆட்டுப்பால், கொம்புச் சந்தனம், தேன், இவற்றைக் கலந்து அதில் குளிகையை இழைத்துக் கொடுக்க குணமாகும்.

*தவறவே பிரமேகம் வெந்தயத்தில் கொள்ளு*
*சர்க்கரையாம் பயித்தியம்போம் நீரில் கொள்ள*
*பகரவே விடிக்கல்லு விழக்கொட்டைப் பாக்கு*
*பாகமாய்ச் சூரணித்துச் சாணிச் சாறு*
*கழறவே பூசணிக்காய் சாறுங் கூட்டி*
*கடுகவே குளிகைதனைக் குடிக்கத் தீரும்*
*நலமான மூலமென்ற வியாதி தீர*
*நாட்டிலுள்ள பிரண்டைச்சா றிஞ்சிச் சாறே!* 235

பிரமேகத்திற்கு வெந்தய நீரிலும், பித்தத்திற்குச் சர்க்கரை யிலும் கொள்ள குணமாகும். கல் விழுவதற்குக் கொட்டைப் பாக்கைச் சூரணம் செய்து சாணிச்சாறு, பூசணிக்காய்ச்சாறு சேர்த்து அதில் குளிகையை இழைத்துக் கொடுக்கக் குணமாகும்.

*இஞ்சிச்சாற் பூசணிக்காய் சாறுங் கூட்டி*
*இட்டமுடன் கொண்டிடவே மூலம் போகும்*

*மிஞ்சியதோர் பீனசமுங் கபாலக் கட்டி*
*விழுகின்ற சீயெல்லாம் விட்டே போக*
*கஞ்சாவி னிலைச்சாறு சீலை யூட்டிக்*
*காயவைத்து யிதின்மேலே மருந்து கேளு*
*அஞ்சாமல் முந்திரிகைப் பழத்தின் சாற்றால்*
*அரைத்திடுநீ பாகல்விரை உளுந்து கூட்டே! 236*

மூலம் தீருவதற்கு குளிகையைப் பிரண்டை, பூசணிக்காய்ச் சாற்றையும், இஞ்சிச்சாற்றையும் சேர்த்து அதில் இழைத்துக் கொடுக்கவும். பீனசம், கபாலக்கட்டி, சீழ் நீங்குவதற்கு திரிஒன்று கூறக் கேளுங்கள். ஒரு துணியில் கஞ்சா இலைச் சாற்றை ஊற்றிக் காய வைத்துக் கொள்க. பிறகு பாகல் விதை, உளுந்து இவற்றை முந்திரிகைப் பழத்தின் சாற்றில் அரைத்துத் துணியில் பரப்பி காயவைத்துக் கொள்க.

*உருட்டியே திரிபுகையை மூக்கி லேற்ற*
*ஓடிப்போம் பீனசமும் சியு மாறும்*
*பிரட்டியே வைத்ததிலே எரிவு கண்டால்*
*பேணியநெல் லிப்பருப்பைச் சூர ணித்துச்*
*சுவட்டியதோ ரிஞ்சிச்சார் வெற்றிலையின் சாறுஞ்*
*சுகமாக.......லகித்து துலங்க உண்ணு*
*மருட்டியே பசியெல்லா மந்த மாகி*
*.....ற்ற பொருமலுக்கு மருந்து சொல்வோம்! 237*

பின் திரியாகத் திரித்து அதைக் கொளுத்திப்புகையை மூக்கு வழியாக ஏற்றவும். பீனசம், சீழ்நீங்கும். புகை இழுத்த தினால் ஏற்படும் எரிச்சல் தீரவேண்டுமென்றால் நெல்லிப் பருப்பைப் பொடித்து இஞ்சிச்சாறு, வெற்றிலைச்சாறு கலந்து கொடுக்க வேண்டும். பசி நீங்கி மந்தம் ஏற்பட்டு அதனால் வரும் பொருமலுக்கான மருந்தினைச் சொல்லக் கேளுங்கள்.

*சொல்லிடுக் கரந்தையுமா மருகன் வேருந்*
*துளிரான புளியிலைக் கசாயம் பண்ணி*
*கல்லுப்போல் குளிகைதனை ஒன்று ரைத்துக்*
*கலக்கியே கொடுத்திடுவாய் மேகந் தீரும்*

*நில்லாத பலகரப்பன் பிரமிச் சாறாம்*
*நிலைக்கவே சரீரசுத்தி நினைவாய்க் கேளு*
*வெல்லவே வருஷமது மூன்று மாதம்*
*விளங்குபட்ச மூன்றுடனே னாளு மொன்றே!* 238

கரந்தை, அருகன்வேர், புளியந்துளிர் ஆகியவற்றினால் முறைப்படி குடிநீர் செய்து அமுதாதிக் குளிகையை இழைத்துக் கொடுக்க மேகம் தீரும். பலவகைக் கரப்பான்களுக்குப் பிரமிச்சாற்றில் கொடுக்க நலமாகும். சரீரம் சுத்தியாகும். ஒரு வருடம், மூன்று மாதம், நாற்பத்தைந்து நாட்கள் என்று நோயின் வன்மை, மென்மைக்குத் தக்கவாறு நாட்களைக் கூட்டியும், குறைத்தும் கொடுக்க வேண்டும்.

*ஒன்றான நாளொன்று குளிகை யொன்று*
*உடனிச்சத் தண்ணிதனி லுகந்து கொள்ளு*
*நன்றாகத் தாபனமும் வசிய முண்டாம்*
*நாட்டுவாய் குளிசத்தில் சிரசி லப்பா*
*பண்டுள்ள தலைதிரும்பி நடுக்க மானால்*
*பதறாமல் பூசணிக்காய்ச் சாற்றில் கொள்ளு*
*என்றுசிறு திசவாய்வு சந்து னோவு*
*யேகஅந்தர வாய்வுடனே வாதந் தானே!* 239

நாளொன்றுக்கு ஒரு குளிகையை உட்கொள்ளவும். குளிகையைப் பழைய சாதம் ஊறிய நீரில் இழைத்துக் கொடுக்க தாபனம், வசியம் ஏற்படும். தலையில் நடுக்க மேற்பட்டால் பூசணிக்காய்ச் சாற்றில் இழைத்துக் கொடுக்க வேண்டும். தசவாய்வு, சந்துவலிகள், அந்தரவாய்வு, வாதங்கள் அனைத்தும் தீரும்.

*தானே முருங்கை வேர்ச்சாற்றில்*
*தளம்பத் துவாலை தானிட்டு*
*மானே.......................................*
*மருந்து திரிபலை திரிகடுகு*
*தேனே நின்பப் பழச்சாற்றில்*
*திரட்டி அரைத்து உள்ளருந்த*

நானே சொன்னேன் மருந்திட்டால்
நாட்டி முறியுங் *கோவியிஞ்சி! 240

முருங்கைவேர்ச் சாற்றில் குளிகையை இழைத்துத் துவாலையிட குணமாகும். கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றைச் சேர்த்து உட்கொள்ள நலமாம். எலுமிச்சம்பழச்சாற்றில் குளிகையைச் சேர்த்தரைத்து உள்ளுக்குக் கொடுக்க மருந்தீடு முறியும்.

இஞ்சியாந் திரிதோஷஞ் சுரமுஞ் சன்னி
இசிப்புக்குத் திரிகடுகு திரிபலையுங் கூட்டி
அஞ்சாமல் சூரணித்துக் குளிகை யொன்று
அன்றாகத் தான்குடிக்க அடங்கு னோய்கள்
மிஞ்சியதோர் மிறுதசன்னி திரிதோ ஷங்கள்
விட்டோடும் நொச்சிச்சார் சங்கன் சாற்றில்
கொஞ்சியதோ ருப்புசமும் பயித்தியமுந் தீரக்
கூட்டுவாய் விளக்கெண்ணெய் நசிய மாமே! 241

திரிகடுகு, திரிபலை சேர்த்துச் சூரணம் செய்து அமுதாதிக் குளிகையை அதில் சேர்த்துக் கொடுக்க திரிதோடம், சுரம், சன்னி நீங்கும். சங்கன், நொச்சி ஆகியவற்றின் சாற்றில் உரைத்துக் கொடுக்க மிருதசன்னி, திரிதோடங்கள் நீங்கும். வயிற்றுப்பிசமும், பித்தமும் நீங்குவதற்கு விளக்கெண்ணெயில் இழைத்து நசியம் செய்யவும்.

ஆகுமே கண்ணுக்கு நசியம் பண்ண
அப்பனே வெற்றிலைச்சார் நசிய மையா
போகுமே சமுத்திரத்தின் பாலைவிரைச் சாறு
பொய்யல்ல நசியம் அஞ்சனமு மாகும்
தாகமாய் நித்திரையைக் கொண்ட பேர்க்குத்
தவறாம லேலரிசி தன்னில் கொள்ளு
மேகமுடன் அன்னத்து வாந்தி யானால்
மிளகுபொடி கொண்டிடவே விட்டுப் போமே! 242

வெற்றிலைச்சாற்றில் உரைத்துக் கண்ணுக்கு நசியம் செய்யலாம். சமுத்திரப் பாலை விதைச் சாற்றில் குளிகையை இழைத்து நசியமாகவும் அஞ்சனமாகவும் கொள்ளலாம். தாகத்துடன் கூடிய தூக்கம் அதிகமாக உள்ளவர்கள் அத்தூக்கத்தைக் குறைக்க ஏலரிசியில் குளிகையை இழைத்துக் கொடுக்கவும். மிளகு பொடியில் இழைத்துக் கொடுக்க மேகத்துடன் கூடிய வாந்தி நிற்கும்.

*தேயடா வாய்நாற்ற முருங்கைச் சாறாம்*
*திரட்டாலம் முந்திரிகை செணப்பூச் சாறு*
*பேயான நரம்புக்கால் சிலந்தி வந்தால்*
*பிசகாமல் நெல்லிக்காய்ச் சாற்றில் கொள்ளு*
*நாய்போலே திரிந்துநீ அலைய வேண்டாம்*
*நாலா யிரத்தில் சிலவான னோவு*
*மாயமாய் பறந்துவிடுங் குளிகை கண்டால்*
*மகத்தான சித்தர்சொன்ன மார்க்கந் தானே* 243

வாய் நாற்றத்திற்கு முருங்கைப்பூச் சாற்றிலும், முந்திரிகை சணப்பூச் சாற்றிலும் குளிகையை உரைத்துக் கொடுக்க குணமாகும். நெல்லிக்காய்ச் சாற்றில் கொடுக்க நரம்புச் சிலந்தி குணமாகும். நீ அலைந்து திரிய வேண்டாம். நாலாயிரம் நோய்களில் சில, சித்தர் சொன்ன மார்க்கத்தில் உள்ள இக்குளிகையால் நீங்கும்.

## எருக்கலாதி சூரணம்

*மாசற்ற சூரணந்தா னின்னங் கேளு*
*வகையான எருக்கலம்வேர் சித்திர மூலம்*
*தேசத்த னெய்க்கொட்டான் அழிஞ்சி வேருஞ்*
*செம்பூரான் பட்டையுடன் வண்டு கொல்லி*
*பாசற்ற தலைச்சுருளி வேப்பம் பட்டை*
*பழுகாமல் பெருமரமு முசிலம் பட்டை*
*மாசற்ற மலைவேம்பு பெருவாகைப் பட்டை*
*வளமான முள்புரண்டி குப்பி வேரும்!* 244

சிறப்பான சூரணத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக, எருக்கம்வேர், சித்திரமூலவேர், நெய்க்கொட்டான் வேர், அழிஞ்சிவேர், செம்பூரான் பட்டை, வண்டுகொல்லி, தலைச் சுருளி, வேப்பம்பட்டை, பெருமரம், உசிலம்பட்டை, மலை வேம்பு, பெருவாகைப்பட்டை, முள்புரண்டி, குப்பிவேர் எடுக்க.

*குப்பியுடன் வெட்பாலை பங்கம் பாளை*
*கூசாமல் விழுதிமலை விழுதி கூட்டிச்*
*செப்பியதோர் கார்போகிக் காய்தானிக் காயுஞ்*
*சிறுகருஞ் சீரகமும் ஒமங் கூட்டித்*
*தப்பாமல் சேங்கொட்டை சுக்குச் சேரு*
*தனக்காற்று சீரகமுஞ் சரிநி றையாய்*
*ஒப்பியே யிளவறுப்பாய்ச் சூர ணித்து*
*ஒருவேளை வெந்நீரில் உகந்து கொள்ளு* *245*

வெட்பாலை, பங்கம்பாளை, விழுதி, கார்போகிக்காய், தான்றிக்காய், சிறுகருஞ்சீரகம், ஓமம், சேராங்கொட்டை, சுக்கு, சீரகம் ஆகியவற்றை வகைக்குச் சம அளவெடுக்க. இளவறுப்பாய் வறுத்து முறைப்படி சூரணம் செய்து கொள்க. அதனை வெந்நீரில் ஒரு வேளை உட்கொள்ள வேண்டும்.

*உகந்துநீ கொண்டாக்கால் தீரும் நோய்கேள்*
*உறுதியாய் மேல்தடிப்புச் சிகப்பு வெள்ளை*
*தகந்துவிடுஞ் செம்பூரான் விஷங்க ளெல்லாந்*
*தழுதணையுங் குட்டமொடு தவறிப் போகும்*
*செகந்தனிலே சொறிசிரங்கு மேக வூறல்*
*தேகத்தி லுள்ளநோய் தெளியும் பாரு*
*இகழ்ந்திடா திம்மருந்து புளிப்புகையுந் தள்ளி*
*இட்டமுடன் மண்டலந்தா னிசைந்து கொள்ளே!* *246*

இவ்வாறு உட்கொள்ள மேல்தடிப்பு, சிகப்பு, வெள்ளை, செம்பூரான் விடங்கள், தழுதணை, குட்டம், சொறிசிரங்கு, மேகவூறல் ஆகிய நோய்கள் தீரும். புளி, புகையை நீக்கி நாற்பது நாட்கள் மருந்தினைக் கொள்ள வேண்டும்.

## கண் புகைச்சலுக்கு எண்ணெய்

*இசைந்ததொரு கண்புகைச்சல் தயிலங் கேளு*
*இளநீரும் பாலுமிரு நாழி கூட்டிப்*
*பசைந்தகா ரெள்ளெண்ணை படிதா னொன்று*
*பண்பான அதிமதுரங் கோஷ்டம் ஓமம்*
*உசந்ததொரு ஆவின்பால் விட்டு ஆட்டி*
*உண்மையா யதில்கரைத்துப் பதம தாகத்*
*துசந்ததொரு சனிபுதனில் மூழ்கி வந்தால்*
*தூரத்தி லிருக்குமருந் ததியுந் தோணும்!* 247

இளநீர், பால் வகைக்கு 2.6 லி., காரெள்ளெண்ணெய் 1.3 லி. எடுக்க. அதிமதுரம், கோட்டம், ஓமம் இவற்றைப் பசும்பாலில் அரைத்து இக்கலவையில் கரைத்துக் கொள்க. எண்ணெயைக் காய்ச்சிப் பக்குவத்துடன் வடித்துக் கொள்க. அதனைச் சனி, புதன் கிழமைகளில் தலை முழுக வேண்டும். கண் புகைச்சல் நீங்கி பார்வை நன்கு தெரியும்.

## பித்த அதிசாரக் குறிகுணம்

*தோணுந் தொப்புள் முறுக்குண்டாம்*
*துவழுங் கடுப்பு ரத்தம்விழு*
*மாணுமலங்கள் சிறுத்து விழும்*
*மையப்பாலின் நறுநுரை யுண்டாம்*
*பூணுங் குரியச் சாத்தியமென்று*
*பிரித்துச் சொன்னேன் மலங்களுக்கு*
*வேணு மிதுக்குக் குறிப்பறிந்து*
*வேண்டதி சாரப் பித்தமும்போம்!* 248

தொப்புளில் முறுக்கேற்படும். மலமானது கடுத்து இரத்தங் கலந்து சிறுத்து விழும். இது சாத்தியமானதென்று பெரியோர் கூறுவர்.

## அதிசாரத்துக்குச் சூரணம்

*பித்ததி சாரந் தானொன்று*
*பேரு கருதி தான்கண்டா*
*லுற்ற கிரிகை செய்குதற்கு*
*உரைப்போம் கற்க முண்மையென*
*மெத்த திப்பிலி கொடிவேலி*
*மிகுத்த வசம்பு வெட்பாலை*
*உத்த மூலி மிலந்தைவேர்*
*முத்தம் விடையந் தான்சேரு!* 249

பித்த அதிசாரம் நீங்குவதற்கான மருந்தினைக் கூறக் கேட்பீர்களாக. திப்பிலி, கொடிவேலி, வசம்பு, வெட்பாலை, உத்தாமணி, இலந்தைவேர், கோரைக்கிழங்கு இவற்றை எடுக்கவும்.

*விடையஞ் செவியம் ரோகணியும்*
*மிருத்த தேக்கு திரிகடுகு*
*அடவே கரும்பை வேப்பலகு*
*மாகுங் கடுகு கருஞ்சீரம்*
*தொடுகீழ் நெல்லி விளாவேருந்*
*தொடுத்த காயத் திவ்வியமா*
*இடுந் சமனாப் பொடியாக்கி*
*இதமாக் கிஷாயம் வெருகடியே!* 250

அதிவிடையம், செவியம், கடுகுரோகணி, தேக்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, நாயுருவி, வேம்பு, கடுகு, கருஞ்சீரகம், கீழாநெல்லி, விளாவேர், பெருங்காயம் ஆகியவற்றைச் சமஅளவெடுத்துச் சூரணித்துக் கொள்க. அதில் மூவிரலளவு எடுத்து அவ்வளவே நீரூற்றிக் காய்ச்சி குடிக்க வேண்டும்.

*வெருகடி யளவ தாக*
*வெந்நீரு மிறுத்துக் கொள்ளப்*
*பருகவே குறுகக் காய்ச்சிப்*
*பரிந்துகொள் ளதிசா ரம்போம்*

*பெருகு தீபனம் போசனமாம்*
*பெருத்த வயிறு பொருமலுடன்*
*உருகு னாவி சிலையுடன்*
*உற்ற கடுப்பு இருமலும்போம்!* 251

இம்மருந்தினை மூவிரலளவு எடுத்து வெந்நீருடன் கலந்து நீரை உட்கொள்ள அதிசாரம் நீங்கி, பசியெடுக்கும். உணவு சாப்பிட முடியும். வயிறு பெருத்தல், வயிற்றுப் பொருமல், கடுப்பு, இருமல் நீங்கும்.

*போகுமதி விடையமிரு வேலி முத்தம்*
*புகழான கூவிளத்தின் பழமுங் கூட்டி*
*ஆகுமிரு கழஞ்சிநிறை தூள தாக்கி*
*ஆனயிரு நாழிநீ ருழக்க தாகத்*
*தாகுமே திப்பிலியுஞ் சுக்குங் கூட்டித்*
*தவிடாக இடித்துமேல் தூவிக் கொண்டு*
*ஏகமாகக் கலக்கிநீ கஷாயங் கொண்டால்*
*ஏகுமதி சாரமுடல் வாத சூலை!* 252

அதிவிடையம், வெட்டிவேர், கோரைக்கிழங்கு, கூவிளப்பழம் இவற்றை வகைக்கு 5 கி. எடுத்து 2.6 லி. நீரூற்றி 335 மி.லி. அளவாகக் குறுக்கிக் காய்ச்சிக் கொள்க. திப்பிலி, சுக்கு இவற்றை இடித்து அதில் தூவி நன்கு கலக்கி குடித்தால் அதிசாரத்துடன் வாத சூலையும் குணமாகும்.

*சூலையா மதிசாரம் போவ தற்குத்*
*துலங்குமர மஞ்சளுடன் மஞ்சள் கூட்டி*
*வேலையா மதுரங் கூவிளமும் வெட்பாலை*
*வேண்டுநீ இருநாழி யுழக்க தாகக்*
*காலமே விடையமேல் பொடியாத் தூவிக்*
*கன்னவே குடிக்கஅதி சாரம் போகும்*
*நீலமாங் கிராணிவகை ஆறும் போகும்*
*நிச்சயமாய்ப் பிரண்டைசுண்டி கறியாம் சூதம்!* 253

சூலையாம் அதிசாரம் நீங்குவதற்கு மரமஞ்சள், மஞ்சள், அதிமதுரம், கூவிளம், வெட்பாலை இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து 2.6 லி. தண்ணீர் விட்டு 335 மி.லி.யாகக் குறுக்கிக் காய்ச்சிக் கொள்க. அதிவிடையத்தைப் பொடித்துக் குடிநீரில் போட்டுக் கலக்கிக் கொடுக்க சூலை, அதிசாரம் நீங்கும். ஆறுவகைக் கிராணி நீங்கும். பிரண்டையைச் சுண்டி கறியாய்ச் செய்து கொடுக்கலாம்.

## சுரக்குளிகை

*சூதமே எட்டுநாபி*
*துலங்கயேழ் கெந்திஆறு*
*நீதமாந் தாரமஞ்சு*
*நிறுத்துவா ளமுடன்*
*ஓதுவெண் காரமூன்று*
*உகந்ததோர் சுக்குரெண்டு*
*ஏதமோர் மிளகுமற்றை*
*விரையரை யேத்தி டாயே* 254

சூதம் எட்டு பங்கு, நாபி ஏழு பங்கு, கெந்தி ஆறு பங்கு, அரிதாரம் ஐந்து பங்கு, நேர்வாளம் ஐந்து பங்கு, வெண்காரம் மூன்று பங்கு, சுக்கு இரண்டு பங்கு, மிளகு அரைப்பங்கு எடுத்துக் கொள்ளவும்.

*ஏத்திடு சித்திர மூலம்*
*இசைந்தசார் விட்ட ரைத்து*
*மேத்திடு மிளகு போல*
*விளங்கவே யுண்டை சேர்த்து*
*உத்தம் நிழலு லர்த்தி*
*உரைத்திள நீரி லிட்டால்*
*அத்தியில் சுரங்க ளெல்லாம்*
*அகற்றிடக் கடுகு கொள்ளே!* 255

சித்திரமூலச்சாறு விட்டரைத்து மிளகு போல உருண்டை களாகத் திரட்டி நிழலில் உலர்த்தி எடுத்துப் பத்திரப்படுத்திக்

கொள்க. அதனை இளநீரில் உரைத்துக் கொடுக்க எலும்புகளில் ஏற்படும் சுரங்கள் நீங்கும்.

*கடிய சுத்தி நேர்வாளங்*
*கனத்த யிரத மிவைமூன்று*
*இடையோ ரொன்று....கழஞ்சி*
*இதுக்குச் சர்க்கரை இருபலமாய்த்*
*திடமாய் முலைப்பால் விட்டரைத்துத்*
*தினந்த பயறு அளவாக*
*இடவே முலைப்பா லிஞ்சியது*
*இடுநீராம் பாண மிதே!* 256

சுத்தி செய்த நேர்வாளம், இரசம் இவற்றை வகைக்கு 5 கி. எடுத்துக் கொள்க. சர்க்கரை 70கி. எடுத்துச் சேர்த்து தாய்ப்பால் விட்டரைத்து 32 மி.கி. அளவுள்ள குளிகைகளாக உருட்டிக் கொள்க. அதனைத் தாய்ப்பால், இஞ்சிச்சாறு, இவற்றில் உரைத்துக் கொடுக்கவும்.

*இதுவாங் கெந்தி வெண்கார*
*மிருக்கும் னாபி யிரதமுடன்*
*அதுவாந் திப்பிலி திரிபாலை*
*யானதொவ்வோர் கழஞ்சி யொன்று*
*மெதுவாஞ் சுக்கு அரிதாரம்*
*வேண்டு மொவ்வோர் முக்கழஞ்சி*
*பொதுவாஞ் சுத்தி நேர்வாளம்*
*பொறுக்க கழஞ்சி நிறைகூட்டே!* 257

கெந்தி, வெண்காரம், நாபி, இரசம், திப்பிலி, திரிபலை இவற்றை வகைக்கு 5கி. எடுக்க. சுக்கு, அரிதாரம், இவற்றை வகைக்கு 15கி. எடுக்க. சுத்தி செய்த நேர்வாளத்தை 5கி. எடுத்து ஒன்று சேர்க்க.

*கூட்டி நறுக்கிக் குழிக்கல்லில்*
*கோலம் புரச னிலைச்சாறு*
*மிட்ட சுத்தி மருந்தையெல்லாம்*
*வேண்டுஞ் சாராயத் தாலரைத்து*

*நீட்டுந் துவரைப் பிரமாணம்*
*நிட்சய மிஞ்சிச் சாற்றிலிட்டு*
*ஒட்டுங் குளிரும் பிரதாபம்*
*ஒளியுஞ் சுரமும் ஒடிடுமே!* 258

அனைத்தையும் குழிக்கல்லில் போட்டு புரசன் இலைச் சாறூற்றி சுத்தி செய்து சாராயம் விட்டு அரைத்து துவரைப் பருப்பு அளவுள்ள குளிகைகளாக உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்க. அதனை இஞ்சிச்சாற்றில் உரைத்துக் கொடுக்க குளிரும் அதனுடன் கூடிய சுரமும் நீங்கும்.

### பல நோய்களுக்குக் குளிகை

*ஓடும் வெண்கா ரம்லிங்க*
*முகந்த சாதிக் காய்மிளகு*
*வாழு மிரத மிந்துப்பு*
*வழங்கும் னாபி மத்துவிரை*
*தேடுந் திப்பிலி பலகரையும்*
*திரும்புஞ் சுக்கு அரிதாரம்*
*நாடுஞ் சமனாய் வரிசைச்சார்*
*நன்றா யரைத்துக் குன்றிபோல!* 259

வெண்காரம், இலிங்கம், சாதிக்காய், மிளகு, இரசம், இந்துப்பு, நாபி, ஊமத்துவிதை, திப்பிலி, பலகரை, சுக்கு, அரிதாரம் இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து அவுரிச்சாறு விட்டரைத்து 130 மி.கி. அளவுள்ள குளிகைகளாக உருட்டிக் கொள்க.

*குன்றிபோ லுருட்டியே இஞ்சிச் சாற்றில்*
*கூறுகேள் பெருவாதஞ் சேற்றும வாதம்*
*மிண்டியதோர் மூத்திரக் கிருட்சி வேட்கை*
*வெடிசூலை அதிசாரம் கிராணி குன்மம்*
*அண்டியிடு பலபல வியாதிக் கெல்லாம்*
*அதிர்ந்தோடு மாத்திரையைக் கண்ட போதே*
*பண்டுள்ள வாழைக்காய் சுறாவின் கண்டம்*
*பால்மோரு கூட்டியே பத்தியங் காரே!* 260

அதனை இஞ்சிச்சாற்றில் உரைத்துக் கொடுக்க பெருவாதம், சிலேத்தும வாதம், மூத்திரக் கிரிச்சரம், தாகம், வெடிசூலை, அதிசாரம், கிராணி, குன்மம், ஆகிய வியாதிகள் நீங்கும். குளிகையைக் கொள்ளும் போது வாழைக்காய், சுறாக்கண்டம், பால், மோர் ஆகியவற்றைச் சேர்த்து பத்தியங் காக்க வேண்டும்.

### கருங்கோழி லேகியம்

*கார்போகி திரிகடுகு காயம் ஓமம்*
*கருஞ்சீரகங் கடுக்காய் குப்பை யிந்து*
*பேரான சங்கம்வேர் சங்கங் குப்பி*
*பெரியதொரு குருந்தவேர் சூரை வேரும்*
*சீரான தவசிவே ரெல்லாங் கூட்டிச்*
*சிறக்கவே படந்தட்டிச் சமன தாக்கிக்*
*கூறாக இவையெல்லாங் குழிக்கல்லி லிட்டுக்*
*குமுறிடவே வெந்நீரால் கூட்டி யாட்டே!* 261

கார்போகி, சுக்கு, மிளகு, திப்பிலி, பெருங்காயம், ஓமம், கருஞ்சீரகம், கடுக்காய், குப்பைமேனி, இந்துப்பு, சங்கம்வேர், சங்கங்குப்பி, குருந்தவேர், சூரைவேர், தவசிவேர் இவற்றைச் சமனெடுத்துக் குழிக்கல்லில் போட்டு வெந்நீர் விட்டு அரைத்துக் கொள்க.

*ஆட்டியதோர் கடைமருந்து ஒருநிறையாய்க் கொண்டு*
*அமுக்கிடுவாய் கருங்கோழி வயிற்றுக் குள்ளே*
*தேட்டியதோர் கள்ளிப்பா லாழாக்கு விட்டுத்*
*திடமான காடி ஆழாக்குக் கூட்டி*
*வாட்டமற வெள்ளாட்டு நீருபடி யிரண்டு*
*வார்த்திடுவாய் சட்டிக்குள் எல்லாம் கூட்டி*
*மூட்டியதோர் கோழியதை யுள்ளே வைத்து*
*மூடுவாய் சீலைமண்தான் மூடிப் பூசே!* 262

அரைத்த மருந்தினைக் கருங்கோழியின் வயிற்றுக் குள்ளிருப்பதை நீக்கி விட்டு திணித்துவிட வேண்டும். பின் ஒரு சட்டிக்குள் கள்ளிப்பால், காடி இவற்றை வகைக்கு

*165 மி.லி., வெள்ளாட்டு நீர் 2.6 லி. எடுத்து ஊற்றி கோழியை உள்ளே வைத்து சட்டியை மூடி சீலைமண் செய்து பூசிவிட வேண்டும்.*

*பூசியே எரித்திடுவாய் வத்த மட்டும்*
*பிறகெடுத்து லேகியம்போ லிடித்து நன்றாய்*
*வாசமிட்டுக் கலசத்தி லடைத்துக் கொண்டு*
*வயிற்றுநோய் குடல்வாதம் மலட்டுப் பூச்சி*
*காசினியி லெரிகுன்மம் பித்த குன்மம்*
*கழல்வாதம் சகலமும்போம் கழஞ்சி ரெண்டு*
*தேசிகனே பத்தியம்வைத் திருபதுநாள் கொள்ளு*
*தெரித்தோடும் வியாதியெல்லாம் பஞ்சு போலே! 263*

அடுப்பேற்றி நன்கு சுண்டும் அளவுக்கு எரித்திட வேண்டும். ஆறிய பின் எடுத்து இளகம்போல் இடித்துக் கலசத்தில் அடைத்துக்கொள்ள வேண்டும். அதனை 10 கி. அளவிற்கு இருபது நாட்கள் தொடர்ந்து கொடுத்து பத்தியம் காத்தால் வயிற்றுநோய், குடல்வாதம், மலட்டுப்பூச்சி, எரிகுன்மம், பித்தகுன்மம், கழல்வாதம் ஆகிய நோய்கள் நீங்கி விடும்.

## பஞ்சலவணக் குளிகை

*பஞ்ச லவணம் குவிடச்சார்**
*பருத்த அழிஞ்சி கொடிவேலி*
*அஞ்சாங் காட்டுக் கரணையுடன்*
*ஆன பிரண்டை அசமோதம்*
*மிஞ்சு சீரகம் பெருங்காய*
*மின்ற வாளம் விழலரிசி*
*தஞ்சம் திரிபலை திரிகடுகு*
*தானே உள்ளி சமன்பொடியே! 264*

பஞ்சலவணம், அழிஞ்சில், கொடிவேலி, காட்டுக் கருணை, பிரண்டை, அசமோதம், சீரகம், பெருங்காயம், நேர்வாளம்,

விழலரிசி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, பூண்டு இவற்றை வகைக்குச் சமஅளவு எடுத்துப் பொடித்துக் கொள்க.

*பொடியே சமனாங் கள்ளிப்பால்*
*பொருந்த அரைத்துக் கடலைகள்போல்*
*மிடிதீர் நெய்பால் தனில்கொள்ள*
*மேவுங் குளிர்ந்த தண்ணீர்க்குள்*
*படியில் தீரும் வியாதியெல்லாம்*
*பகரக் கேளீர் பாரிலுள்ளோர்*
*திடமே தீரு மெனமுனிவன்*
*செப்பும் மூத்திரக் கிரிட்சிபோம்!* 265

அச்சூரணத்திற்குச் சமஅளவு கள்ளிப்பாலை விட்டரைத்து கடலை அளவாக குளிகைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க. அதனை நெய், பால், குளிர்ந்த தண்ணீரில் உரைத்துக் கொடுக்க மூத்திரக் கிரிச்சரம் தீரும்.

*மூத்திரக் கிரிட்சி குன்மமுடன்*
*முசியா மகோதரம் சகலகுன்மம்*
*ஏற்ற சயமும் சுவாசமுடன்*
*இவுந்த அத்தி வாய்வுபல*
*போற்று மந்தாக் கினியிளை*
*பொருந்து பாண்டு காமாலை*
*தீத்தே யேகு மென்றுரைத்தார்*
*திருந்து பஞ்சாக் கினிக்குளிகை!* 266

மூத்திரக்கிரிச்சரம், குன்மம், மகோதரம், குன்ம வகைகள், சயம், சுவாசம், அத்திவாய்வு, மந்தாக்கினி, ஈளை, பாண்டு, காமாலை ஆகிய நோய்கள் பஞ்சாக்கினி குளிகையால் தீருமென்று கூறுவர்.

## ஆனந்தத் தாண்டவன் குளிகை

*குளிகையாம் னாபிசூதம்*
*மனோசிலை கெந்திலிங்கம்*
*அளகுவெண் காரங்கூட்டி*
*அந்திடை யெல்லாஞ் சேர்த்துப்*
*பழநிம்பைச் சாறுவிட்டுப்*
*பண்புடன் சாமம்நாலு*
*தெளிவு டனரைத்து நன்றாய்த்*
*திரட்டிடு கடுகுபோல!* 267

நாபி, சூதம், மனோசிலை, கெந்தகம், லிங்கம், வெண்காரம் இவற்றைச் சமஅளவெடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டு பன்னிரெண்டு மணிநேரம் அரைத்துக் கடுகு போல மாத்திரை களாகத் திரட்டி வைத்துக் கொள்க.

*கடுகுபோல் மாத்திரையைச் சன்னி வாதங்*
*கண்டத்தில் நோயெல்லாம் போவ தற்கு*
*முடுகியதோர் கொழுஞ்சியின் சார்தன்னில் கொண்டால்*
*மோசமில்லைத் தீர்ந்துவிடு முளைச்சி யாகப்*
*படுபாவி சன்னிக்கி முலைப்பாலி லுண்ணப்*
*பறந்துவிடுஞ் சன்னியென்ற தெல்லாம் போகும்*
*திடமுடனே யிந்தமுறை செய்து பாரு*
*சிகத்திலா னந்தத் தாண்டவன் சாதியே!* 268

அதனைக் கொழுஞ்சியின் சாற்றில் உரைத்துக் கொடுக்க சன்னிவாதம், கண்டநோய்கள் நீங்கும். தாய்ப்பாலில் உரைத்துக் கொடுக்க சன்னி வகைகள் பல தீர்ந்துவிடும். இந்த ஆனந்தத் தாண்டவன் குளிகையை மேற்கூறியவாறு செய்து கொடுக்க நோய்கள் தீரும்.

## பரமானந்த வயிரவன்

*சாதிலிங்கம் வெண்கார மிளகு னாபி*
*தற்சமனாம் பழச்சாற்றி லரைத்து நன்றாய்*
*ஏதமறக் குன்றியள வுண்டை செய்து*
*இஞ்சிச்சாற் றாலரைத்து யிடுவி ராகில்*

*போதமுள்ள சுரமேகுஞ் சன்னி போகும்*
*பித்தேகும் தேள்விஷமும் பேசி யோடும்*
*ஓதுபர மானந்த வயிரவனா மென்றே*
*யுரைப்பார்க ளெங்கெங்கு முறுதி காணே!* 269

சாதிலிங்கம், வெண்காரம், மிளகு, நாபி இவற்றை வகைக்குச் சமஅளவு எடுக்க. எலுமிச்சம்பழச்சாற்றில் அரைத்து 130 மி.கி. அளவுள்ள உருண்டைகளாய்ச் செய்து நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்திக் கொள்க. அதனை இஞ்சிச்சாற்றில் உரைத்துக் கொடுக்க சுரம், சன்னி, பித்தம், தேள்விடம் ஆகிய நோய்கள் தீரும்.

*போகுமடா சேற்றுமங் கொம்மட்டி யின்சார்*
*பொருந்தவே மாதளையின் சாறு மாகும்*
*ஏகுமே காசமெல்லாந் தோடை சுக்கு*
*இதுகண்டங் காலியுடன் தூதளையின் சாறாம்*
*ஆகுமே எரிவுஉள் காந்தல் போக*
*அப்பனே நெல்லிக்காய் கிஷாயங் கொள்ளு*
*தாகமே எடுத்தாக்கால் ஆவின் மோராம்*
*தணியுமே நோயென்ற வாய்வு எல்லாம்!* 270

கொம்மட்டிக்காயின் சாற்றிலும் மாதுளையின் சாற்றிலும், வயிரவ மாத்திரையை இழைத்துக் கொடுக்க சிலேத்துமம் நீங்கும். ஆடாதோடை, சுக்கு, கண்டங்காலி, தூதுவளை இவற்றின் சாறுகளில் இழைத்துக் கொடுக்க காசம் தீரும். நெல்லிக்காய்ச் சாற்றில் உரைத்துக் கொடுக்க உடலெரிவு, உள்காந்தல் தீரும். பசுமோரில் கொடுக்க தாகம், வாய்வு வகைகள் நீங்கும்.

*வாய்வு குன்மம் வயிறுறுமும்*
*மருங்கை கைகால் சிறுத்திருக்கும்*
*மேவுஞ் சிறுநீர் துளித்துளியாய்*
*விழுமே தாகும் பிரமாணம்*

*பேயி னித்தி இலைச்சாற்றில்*
*பெருகும் பத்திய மோர்சோறாம்*
*ஓயா மந்தப் பயித்தியமு*
*முகந்த குன்ம நெஞ்செரிவு!* 271

குன்ம வாயு வயிறிரைதல், கை, கால் சிறுத்தல், சிறுநீர் துளித்துளியாய் விழுதல், ஆகிய நோய்க்கு இத்தி இலைச் சாற்றில் மாத்திரையைக் கொடுக்க நலமாகும். மோர் சாதம் பத்தியமாகும்.

*நெஞ்சே யெரிக்குந் தலைவலிக்கும்*
*நெகிழ்ந்த குளிரு முள்காய்ச்சல்*
*பஞ்சு போல சந்துகள்நோம்*
*பருத்த முருங்கைச் சாற்றிலிட*
*மிஞ்சும் ஆவின் பாலுஞ்சோர்*
*மிகுத்த பேய்ப்புடல் முசுமுசுக்கை*
*தஞ்ச மென்றே குளிகையிடத்*
*தவறாச் சோறதில் தயிரருந்தே!* 272

பித்தம், குன்மம், நெஞ்செரிவு, தலைவலித்தல், குளிர், உள்காய்ச்சல், மென்மையான சந்து மூட்டுகள் கூட வலித்தலாகிய குறிகுணங்கள் கொண்ட நோய்க்கு முருங்கைச் சாற்றில் உரைத்துக் கொடுக்க குணமாகும். பசும்பாலும் சோறும் சேர்த்துக் கொள்க. பேய்ப்புடல், முசுமுசுக்கைச் சாற்றில் குளிகையை இழைத்துக் கொடுத்தாலும் குணமாகும். தயிர்ச்சோறு சாப்பிட வேண்டும்.

*அருந்துஞ் சீரணத் தோர்குளிகை*
*அசனம் பண்ணும் போதுகொள்ள*
*மறுகுங் குன்மம் நீர்க்கோவை*
*மகிழுஞ் சுக்கு வெந்நீரே*
*பருநீர்ச் சோறு தானாகும்*
*பகருங் கட்டி நீர்ச்சுருக்கு*
*கருக்கொன் றில்லா வேப்பிலையுங்*
*கருது பாண்டு மிவைதீரும்!* 273

உணவு செரிப்பதற்கு, குன்மம், நீர்க்கோவை குணமாக ஒரு குளிகையைச் சுக்குக் குடிநீரில் இழைத்து உட்கொள்ளவும், சோறு செரிக்கும், கட்டி, நீர்ச்சுருக்கு நீங்கும், வேப்பிலைக் குடிநீரில் உரைத்துக் கொள்ள பாண்டு தீரும்.

*திரு நானாழி நீருழக்காகக் காய்ச்சி*
*சிறந்த திப்பிலி மேல்பொடிகள்*
*பாரு மருந்திட் டுடனுப்பும்*
*பறக்கும் வெள்ளை ஒக்காளம்*
*மாரோ ரணையா அரோசிக்கும்*
*வாயா லெடுக்கும் நுரைதள்ளும்*
*சேருமை நின்ப பழச்சாறு*
*சேர்த்தே மோருஞ் சோறுமுண்ணு!* 274

5.2 லி. நீரூற்றி அதை 335 மி.லி.யாய்ச் சுருக்கிக் காய்ச்சி திப்பிலியைப் பொடித்துப் போட்டுக் கலக்கிக் கொடுக்க வெள்ளோக்காளம், அரோசிகம் நீங்கும். வாந்தி, நுரைதள்ளல் இவை எலுமிச்சம் பழச்சாறு குடித்து மோர் சோறு சாப்பிடத் தீரும்.

*உண்ணுமந்த அக்கினிக்கு காயம் வென்னீர்*
*உள்நெஞ்சு தினவுக்கு வாழை வேராம்*
*திண்ணம்வெட்டி வேராகுங் கூடச் சேரு*
*திரும்பவே கருப்பன்சார் குளிகை யொன்று*
*பண்ணுபுந்தி மேற்சொறியு மரிசி மஞ்சள்*
*பகரவே பொடியாக்கிக் காய்ச்சி யுண்ணு*
*கண்ணவே அரிசியின் மஞ்சள் தூளுங்*
*கைமுறையாய்க் காய்ச்சியுண்ண மூலந் தீரும்!* 275

மந்த அக்கினிக்கு பெருங்காயம் இழைத்த வெந்நீரில் இழைத்துக் கொடுக்கவும். உள் நெஞ்சு தினவுக்கு வாழைத் தண்டு சாற்றிலும் கொடுக்க வேண்டும். வெட்டிவேரையும், கருப்பஞ் சாற்றையும் சேர்த்து அதில் ஒரு குளிகையை இழைத்துக் கொடுக்க புந்தியின் மேற் சொறி தீரும், அரிசி, மஞ்சள் பொடியைக் காய்ச்சி உண்ண மூலம் தீரும்.

*மூல வியாதிக் கோர்குளிகை*
*முனிந்த கரந்தைச் சாற்றிலிடச்*
*சாலப் பத்தியம் பால்சோறு*
*தயங்கு சுவாச காசத்துக்கு*
*ஏலஞ் சிவதை பேரீச்சு*
*எதிலோ னொன்றிற் தானிடவே*
*பால மாடா தோடையிலை*
*பரிந்து கஷாயந் தனில்வையே!* 276

கரந்தைச் சாற்றில் ஒரு குளிகையை இழைத்துக் கொடுக்க மூலம் தீரும். பால் சோற்றைப் பத்தியமாகக் கொள்ள வேண்டும். ஏலம், சிவதை, பேரீச்சு, ஆகியவற்றின் குடிநீரிலும் ஆடாதோடையிலைக் குடிநீரிலும் குளிகையை உரைத்துக் கொடுக்க சுவாசகாசம் தீரும்.

*வையே வயிறு கல்போல*
*மகிழ விங்கித் தொப்புளுமே*
*அய்யச் சுழித்தால் நயமுமில்லை*
*ஆன பசியுந் தாகமில்லை*
*நய்யு மலங்கள் தான்கழற*
*நாடு நொச்சிச் சாற்றிலிடச்*
*செய்யும் பத்தியம் பால்சோறுந்*
*திருந்தக் கூட்டி நீகாரே!* 277

வயிறு கல்போல் அழுத்தமாகவும் வீங்கியும் இருந்தால் தொப்புள் திரண்டிருந்தால் பசி, தாகம் இன்றி இருப்பினும் நொச்சிச் சாற்றில் குளிகையை இழைத்துக் கொடுக்க மேற்சொன்ன குணங்கள் தீரும். மலம் வெளியேறும், பால் சோறு உட்கொள்க.

*கருவேப் பிலையும் வேலங்*
*கனத்த சுக்கு ஓர்பலந்தான்*
*மருவ னாழி நீருழக்காய்*
*மகிழுந் திப்பிலி மேல்பொடிகள்*

*திருவே ரனையாய் முசுமுசுக்கை*
*திருந்த வெல்ல மதில்கூட்ட*
*உருவே மிக்க ஒளிசிறக்கு*
*முணர்வாம் பத்திய முனர்சொல்வோம்!* 278

கருவேப்பிலை, சுக்கு வகைக்கு 35 கி. சேர்த்து 1.3 லி. நீரூற்றி 335 மி.லி.யாய்ச் சுருக்கிக் காய்ச்சி திப்பிலிப் பொடி, முசுமுசுக்கை வேர், வெல்லம் இவற்றைக் குடிநீரில் சேர்த்துக் குளிகையை அதில் இழைத்துக் கொடுக்க உடல் ஒளிபெறும். வண்ணம் அதிகரிக்கும்.

*சொன்னனு பானந் தப்பாமல்*
*சுகித்த மருந்து தான்கொள்ள*
*வன்னப் பத்திய மீறாமல்*
*மகிழ்ந்தே யுண்டு நடந்தாக்கால்*
*அன்னம் போலே நடையுடையாள்*
*அலைக்கும் வியாதிக ளெல்லாம்*
*நன்மை யாகு னாளுக்குள்*
*நன்றாய்த் துலங்கும் வயிரவனே!* 279

மேற்கூறிய அனுபானமுறைகளைக் கடைபிடித்து பரமானந்த வயிரவன் குளிகையை அதில் உட்கொள்ளப் பத்தியங்களை நன்கு கைக்கொண்டால் துன்பம் கொடுக்கும் அனைத்து வியாதிகளும் நீங்கும்.

## நேர்வாளக் குளிகை

*உறுதியாந் திரிபலையு மகரந் தங்காய்*
*முகந்தலிங்கம் வெண்கார மிந்துதிரி கடுகு*
*பிறுதியாமல் வசம்புடனே வாய்விளங்கம் ஓமம்*
*பின்னுமோர் குரோசாணி கழஞ்சிவகை யொன்றே*
*அறுதியா மிந்திடைக்கி வாளஞ் சேர்த்து*
*அப்பனே னொச்சிச்சா றரைநாள் முன்றே!* 280

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், லிங்கம், வெண்காரம், இந்து, சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு, வாய்விடங்கம், ஓமம், குரோசாணி இவற்றை வகைக்கு 5 கி. எடுக்க. இந்த மொத்த எடைக்கு நேர்வாளம் சேர்த்து நொச்சிச் சாறூற்றி மூன்று நாள் அரைத்துக் கொள்க.

மூன்றுநாள் தானரைத்துக் கடலை போல
முழுகவே நிழலுலர்த்தி வைத்துக் கொண்டு
என்றதொரு விரோசனமா மெல்லா மாகு
மெடுத்திட்டால் மோர்தனிலே உண்ணத் தீரும்
சென்றதொரு குன்மமது நொச்சிச் சாறாம்
தீருமே ஆவின்பால் சோறு நல்கு
வென்றசீ ரகஞ்சுக்கு கஷாயங் கொள்ள
வெற்பான சுரங்களெல்லாம் விட்டே போகும்! 281

அதனைக் கடலை அளவாய் உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்க. கழிச்சலுக்கு மோரில் உரைத்து உண்ண நீங்கும். நொச்சிச் சாற்றில் உரைத்துக் கொடுக்க குன்மம் தீரும். பசும்பாலும் சோறும் கொடுக்கவும். சீரகம், சுக்கு, இவற்றால் ஆன குடிநீர் கொடுக்க சுரங்கள் அனைத்தும் தீரும்.

## தாளக பற்பம்

உண்டையாந் தாளகத்தை இஞ்சிச் சாறு
உகந்துசம் பழச்சாறு முள்ளிச் சாறு
தண்டாத பூவரசன் பட்டைச் சாறு
தருகாம லரைத்திடுவாய் நாலு சாமம்
மிண்டவே அடைதட்டிப் பூவரசஞ் சாம்பல்
மிகுத்ததொரு குகைபிடித்து உலர வைத்துப்
பண்டான தாளகத்தை உள்ளே வைத்துப்
பதறாமல் கீழ்மேலுஞ் சாம்ப லிட்டே! 282

தாளகத்தை இஞ்சிச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, முள்ளிச்சாறு, பூவரசம் பட்டைச்சாறு இவற்றால் பன்னிரெண்டு

மணிநேரம் அரைத்து அடை செய்து கொள்க. பூவரசச் சாம்பலைக் குகையாகச் செய்து உலர வைத்து அதனுள் தாளக அடையை உள்ளே வைத்துச் சாம்பலினால் மேலும் கீழும் பூசி விடுக.

*இட்டுநீ சட்டிக்குள் மேலு மூடி*
*இதமாகத் தீயெரிக்கப் பற்ப மாகும்*
*புட்டுபோ லதையெடுத்துப் பரணியினில் வைத்துப்*
*புகட்டிடுவாய் சயமீளை இரைப்புத் தீரும்*
*திட்டமொரு பணவிடைதான் திரிகடுகு பொடியில்*
*திருமே சயகாசம் ஈளை போகும்*
*தொட்டதொரு வியாதியெல்லா முடனே போகுஞ்*
*சுகமாக இன்னமொரு இருவி கேளே!* 283

பின் அதனை அப்படியே எடுத்துச் சட்டிக்குள் வைத்து மூடி எரிக்க பற்பமாகும். புட்டினை உதிர்த்து எடுப்பதைப் போல் எடுத்து பரணில் பத்திரப்படுத்திக் கொள்க. 488 மி.கி. அளவு திரிகடுகுப் பொடியில் கலந்து கொடுக்க சயம், காசம், ஈளை ஆகிய நோய்கள் நீங்கும்.

### சஞ்சீவிக் குளிகை

*இருவி நாபி அரிதாரம்*
*இரதங் கெந்தி சாதிலிங்கம்*
*வருமே தாணிக் காய்சுக்கு*
*மருந்து மிளகு திப்பிலியுந்*
*தருமே யொன்று கழஞ்சாகத்*
*தானே வாள மைங்கழஞ்சி*
*அருமை யாக சுத்திபண்ணி*
*அரைக்க வென்று கையான்சார்!* 284

இருவி, நாபி, அரிதாரம், இரசம், கெந்தகம், சாதிலிங்கம், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றை வகைக்கு 5 கி. எடுத்துக் கொள்க. வாளத்தை 25கி. எடுத்து முறைப்படி சுத்தி செய்து சேர்க்க.

*கையாந் தகரைச் சாறதினால்*
*கதிக்க ஏழு நாளரைத்து*
*மெய்யே ஒருநாட் கொருசாம*
*மிதமா யிராமல் தானரைத்து*
*உய்யும் பயிறு பிரமாணம்*
*உண்டை யாக்கி நிழலுலத்தி*
*அய்யா சஞ்சீவிக் குளிகையென்று*
*அருளிச் செய்தா ரகத்தியனார்!* 285

கையாந்தகரைச் சாறுவிட்டு ஒரு நாளைக்கு மூன்று மணி நேரமாக ஏழு நாட்கள் அரைக்க வேண்டும். 32 மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்திக் கொள்க. இதுவே அகத்தியனார் செய்த சஞ்சீவிக் குளிகையாகும்.

*அகத்தியமாச் சொல்லுகிறோம் பவுத்திர மூலம்*
*ஆகுமே சாதிக்காய் தன்னில் கொள்ள*
*மகத்தான வாய்வுக்கு சிறுநீ ராகும்*
*மாசற்ற பழச்சாறு விஷத்துக் காகும்*
*சுகமில்லாச் சூலைக்கு முருங்கைப் பட்டை*
*சுத்தவேள் குன்மத்துக் குடிநீர் நொச்சி*
*அகத்திலே பிரமேகம் பஞ்ச மேகம்*
*ஏகுமே நறுந்தாளிச் சாறு கொள்ளே!* 286

பவுத்திர மூலத்துக்குச் சாதிக்காய்க் குடிநீரிலும், வாய்வுக்குச் சிறுநீரிலும், விஷத்துக்கு எலுமிச்சம் பழச்சாற்றிலும், சூலைக்கு முருங்கைப் பட்டைச் சாற்றிலும், குன்மத்துக்கு நொச்சிக் குடிநீரிலும், பிரமேகம், பஞ்ச மேகத்திற்கு நறுந்தாளிச் சாற்றிலும் கொடுக்க குணமாகும்.

*கொள்ளுமடா அஞ்சியதோர் குளிர்வெ துப்பு*
*கூறுநெல்லிக் காய்க்கி ஷாயம் வெந்நீர்*
*தள்ளுமே பிரண்டைவெண்ணை மலக்கட் டப்பா*
*தாங்காத எரிகுன்மம் சிந்திச் சாறு*

*வள்ளவே சயம்பத்துப் போக வேண்டில்*
*மகத்தான வெள்ளாட்டுப் பாலில் கொள்ள*
*மெல்லவே வயிற்றிலுள்ள குன்ம மெல்லாம்*
*விட்டோடும் திரிபலையுந் திரிகடுகில் கொள்ளே!* *287*

குளிர் சுரத்திற்கு நெல்லிக்காய்க் குடிநீரிலும், வெந்நீரிலும் கொடுக்கவும். மலக்கட்டிற்குப் பிரண்டை, வெண்ணெயிலும் எரிகுன்மத்திற்குச் சீந்தில் சாற்றிலும், பத்துவகை சயத்திற்கு வெள்ளாட்டுப் பாலிலும், குன்மத்திற்கு திரிபலை, திரிகடுகுக் குடிநீரிலும் கொடுக்க குணமாகும்.

*கடுக்கும் வயிற்றில் குறிப்பறிந்து*
*கண்டு செய்வா யனுபானம்*
*எடுக்கும் வியாதி குறிப்பறிந்து*
*யெல்லா னோவும் தீர்ந்துவிடும்*
*தொடுக்கும் பேதி மாம்பட்டை*
*துலங்கு முப்பில் இஞ்சிச்சார்*
*நடுக்குஞ் சஞ்சீவிக் குளிகைகண்டால்*
*நாடா தோடுங் கெந்தகங்கேள்!* *288*

வயிற்றின் குறிப்பையும், நோயின் குறிப்பையும் அறிந்து அனுபானம் செய்ய நோய் நீங்கும். கழிச்சலுக்கு மாம்பட்டைச் சாற்றிலும் முப்பு கலந்த இஞ்சிச்சாற்றிலும் கொடுக்க நலமாகும்.

*கெந்தகம் பன்னிரு கழஞ்சி*
*கிளர்ந்த ரசமு மறுகழஞ்சி*
*வந்த தரைபொடி அய்யஞ்சு*
*மருவு மருந்து நிறைகொண்டு*
*விந்தக் குமரிட சாற்றரைத்து*
*மேவு தேங்காய் தனிலிட்டு*
*அந்தம் பெறவே பொடியுள்ளே*
*அடவாய் தேங்காய் தனைவையே!* *289*

கெந்தகம் 60 கி., இரசம் 30 கி., அரப்பொடி 25 கி. எடுத்து கற்றாழைச் சாற்றால் அரைத்து தேங்காய்க்குள் பொதிந்து வைத்து விடுக.

*வைத்த மருந்தை மூன்றுநாள்*
*மகிழ அரைத்துப் பொடியாக்கி*
*நித்தம் நாலு பணவிடைதான்*
*நிறையா நெய்யில் தான்கொள்ள*
*அத்த சோகை பாண்டுவுடன்*
*ஆன கழிச்ச லதிசாரம்*
*இத்தனை யெல்லாந் தீருமென்றா*
*ரிறையோர் கதியா யியம்பியதே!* 290

பிறகு அதை மூன்று நாட்கள் கழித்தெடுத்து நன்கு அரைக்கவும். அரைத்த பொடியதனை 488 மி.கி. எடுத்து தேவையான அளவு நெய்யில் கலந்து உட்கொள்ள சோகை, பாண்டு, கழிச்சல், அதிசாரம் ஆகிய நோய்கள் தீரும்.

### நாவி மாத்திரை

*இயம்பியதோர் நாவிரசங் கெந்தந் தார*
*மென்றமனோ சிலையுடனே வாளங் கூட்டிச்*
*செயம்பெறவே வச்சிரசெந் தூரங் கூட்டிச்*
*சேரடா லிங்கமுடன் சமன தாக*
*வயம்பெறவே நொச்சியிலை மத்தஞ் சாறு*
*வகைவகைச் சாற்றாலரைத்துக் குன்றிமுத்து*
*நயம்பெறவே உருட்டிநீ நிழலு லர்த்தி*
*நன்றாகச் சட்டியிட்டு வேடு கட்டே!* 291

நாவி, இரசம், கெந்தகம், அரிதாரம், மனோசிலை, நேர்வாளம், வச்சிர செந்தூரம், லிங்கம் இவற்றை வகைக்குச் சமஅளவு கூட்டி நொச்சியிலைச் சாற்றிலும், ஊமத்தஞ் சாற்றிலும் அரைத்து 130 மி.கி. அளவுள்ள உருண்டைகளாக உருட்டி நிழலில் உலர்த்தி எடுத்து வைத்துக் கொள்க. அதனைச் சட்டியில் போட்டு வேடுகட்டி வெயிலில் வைக்க.

*கட்டிடவே வெயிலில்வைத்து யெடுத்து அப்பா*
*கைபார்த்து முகம்பார்த்துக் குணங்கள் பார்த்து*
*திட்டமுடன் மாத்திரைதா னொன்றெ டுத்துத்*
*திறமான அனுபானம் வைத்துக் கொள்ள*
*வட்டான ஆலைவெல்லக் கட்டி தன்னில்*
*வைத்தருந்த வேறுவெந்நீர் சுரத்துக் காகும்*
*இட்டமுடன் வாதசுரம் பித்தசுர மெல்லா*
*மேகுமே சீதசுர மெல்லா நிற்கும்!* 292

பின் எடுத்துப் பத்திரப்படுத்திக் கொள்க. நோயாளியின் நாடி, முகம் பார்த்து, நோயின் குணமறிந்து ஒரு மாத்திரையை எடுத்துத் தகுந்த அனுபானங்களில் கொடுக்க நோய் குணமாகும். ஆலை வெல்லக் கட்டியில் குளிகையை வைத்து உட்கொண்டு வெந்நீர் குடிக்க வாதசுரம், பித்த சுரம், சீதசுரம் ஆகிய சுரங்கள் தீரும்.

*நிற்கும் கெந்தகம் வெண்காரம்*
*நின்ற நாவி சமனாக*
*ஒக்கக் கூட்டிப் பழச்சாற்றில்*
*உருளத் திரட்டி வைத்துக் கொண்டு*
*மெய்க்குங் கிரி வாயில்வைத்து*
*வேண்டும் வாலைச் சுருட்டியடை*
*தக்க பானை தனிலுப்பைத்*
*தானே கொட்டி மேல்வையே!* 293

கெந்தகம், வெண்காரம், நாவி இவற்றைச் சமஅளவெடுத்து, சேர்த்துப் பழச்சாற்றில் அரைத்து நன்கு திரட்டி கீரியின் வாயில் அடைத்து வாலைச் சுருட்டி தைத்து விடுக. சட்டியில் உப்பைக் கொட்டவும்.

*வைத்து அதுமேல் கொட்டுப்பு*
*வாயை மூடிச் சிலைசெய்து*
*உற்ற அடுப்பி லனலையிட்டு*
*ஓயா தெரிக்க நால்சாமம்*

*கைத்தாழ் வில்லாத் தீயெரித்துக்*
*கலசத் தெடுத்து மத்தஞ்சார்*
*மெய்த்தார் நொச்சி இஞ்சிச்சார்*
*விளங்கப் பிசறி யுலர்த்தியிடி! 294*

அதன் மீது கிரியை வைத்து உப்பை மறுபடியும் அதன் மீது கொட்டி சட்டியின் வாய்க்குச் சீலை மண் செய்து கொள்க. அடுப்பேற்றி சட்டியை வைத்து தொடர்ந்து பன்னிரெண்டு மணிநேரம் எரித்துப் பின்பு ஆறவைத்துக் கொள்க. கலசத்தினை எடுத்து ஊமத்தஞ்சாறு, நொச்சியிலைச்சாறு, இஞ்சிச்சாறு ஊற்றி பிசறி நிழலில் உலர்த்துக.

*உலர்த்தி வைத்த சூரணந்தான்*
*ஒடுங்குஞ் சுரமு நசியமிடப்*
*பிலத்தே இடமும் வலமாகில்*
*பேணி சுரமு மிகவடித்தால்*
*வலத்தஞ் சிதனி லூத*
*மாறு மிடமு மப்படியே*
*நிலத்தே ஏக சுரமானால்*
*நிகழும் ரண்டு நாசியுமே! 295*

பின்பு எடுத்திடித்துச் சூரணமாக்கிக் கொள்க. வலம், இடம் தனித்தனியே நசியமிட சாதாரண சுரங்கள் குணமாகும். வலப்பக்கமும் இடப்பக்கமுமாக இரு பக்கமும் நசியம் செய்தால் கடுமையான சுரங்கள் குணமாகும்.

## தாளகக் குளிகை

*நாசியே மயில்துத்தம் பலந்தா னொன்று*
*நாட்டிலுள்ள தாளகமும் பலந்தான் மூன்று*
*பேசியதோர் கல்சுண்ணம் பலந்தா னாலு*
*பிணங்கவே வாழைமரச் சாற்ற ரைத்து*
*பேசாமலே லியிரண்டு சாம மாட்டி*
*குறித்ததொரு பதங்கண்டு மிளகு போலே*
*ஆசைபெற வேயுருட்டி நிழலு லர்த்தி*
*ஆனதொரு உண்மைதனை அருந்தக் கேளே! 296*

மயில் துத்தம் 35 கி., தாளகம் 105 கி., கல்சுண்ணம் 140 கி. எடுத்து வாழைத்தண்டுச் சாற்றால் ஆறுமணி நேரம் அரைத்துப் பதத்துடன் எடுத்து மிளகளவாக உருட்டி நிழலில் உலர்த்தி எடுத்துப் பத்திரப்படுத்திக் கொள்க.

*ஆனதொரு உண்டைதனை இஞ்சிச் சாற்றா*
*லருந்தவே சீதசுர மகலு மப்பா*
*போனதொரு எருக்கம்பால் கோதும்பை மாவில்*
*புகட்டியே புதைந்துவைத்துப் பின்னெ டுத்துக்*
*கானகத்துச் சதுரக்கள்ளிப் பாலா லாட்டிக்*
*கையடைபோல் தட்டியே நெய்யில் பூசி*
*தானமாம் அடைசுட்டு வைத்துக் கொண்டு*
*சாப்பிடுவாய் கடலைப்பருப்பு வெல்லம் நெய்யே! 297*

ஒரு உருண்டையை இஞ்சிச்சாற்றில் அரைத்துக் கொடுக்க சீதசுரம் தீரும். எருக்கம்பால் சேர்ந்த கோதுமைமாவில் உருண்டையைப் புதைத்து வைத்துப் பிறகெடுத்து சதுரக் கள்ளிப்பாலில் அரைத்து அடை தட்டி வைத்து நெய்யில் சுட்டு சாப்பிடுக. கடலைப்பருப்பு, வெல்லம், நெய்ச்சோறு, மோர்ச்சோறு சேர்த்துக் கொள்க. பாண்டு, காமாலை போகும்.

## கெந்தி மாத்திரை

*நெய்யாகுஞ் சோறுடனே மோரு முண்ணு*
*நேர்த்தியாய் பாண்டுகா மாலை போகும்*
*நய்யுமே கெந்தகமும் காட்டுப் பாகல்*
**நல்கிழங்கு கடுக்காயும் சமனாய்க் கூட்டி*
*கையினால் செம்பிலைச்சார் விட்டு ஆட்டிக்*
*கதிக்கவே நீர்சேர்த்து தன்னி லாட்டி*
*மெய்யாக உளுந்தளவு உண்டை செய்து*
*வெயிலில் வையாதெடுத்து நிழலு லர்த்தே! 298*

கெந்தகம், காட்டுப்பாகல், கருணைக்கிழங்கு, கடுக்காய் இவற்றைச் சமமாய் எடுத்து செம்பிலைச்சாறு விட்டு தண்ணீரும் உடன் சேர்த்தரைத்து 65 மி.கி. அளவு உருண்டைகளாய்ச்

செய்து வெயிலில் வைக்காது நிழலில் வைத்தெடுத்து பத்திரப்படுத்திக் கொள்க.

*உலர்த்தியதோர் குளிகைதனைத் திரிகடுகி லிட்டால்*
*ஓமேபதி மூன்றுசன்னி சுவாச காசம்*
*பிலத்திட்ட பாண்டுவுடன் கிராணி வாய்வு*
*பேரான புண்ணுபதி னெட்டுக் குட்டம்*
*துளைத்திட்ட யேழுவகை சுவாச காசம்*
*சுருக்கான அற்புதமாம் வாதந் தீரும்*
*மதித்திட்டுப் போகாம லின்னங் கேளு*
*மகத்தான சுரக்குளிகை வணங்கிச் செய்யே!* 299

உருண்டையைத் திரிகடுகுச் சூரணத்தில் கலந்து உட்கொண்டால் பதிமூன்று வகைச் சன்னி, சுவாசகாசம், பாண்டு, கிராணி, வாய்வு, புண், பதினெட்டு வகைக்குட்டம், ஏழுவகைச் சுவாசகாசம், வாதம் ஆகியவை தீரும்.

### சுரக்குளிகைகள்

*வணக்கமுடன் துத்தமஞ்சு இரத மொன்று*
*மயிலான துருசுஒன்று நாபி முக்கால்*
*இணக்கமுடன் தாரமொன்று கூடச் சேர்த்து*
*இயல்பாகப் பாகலிலைச் சாற்ற ரைத்து*
*கணக்குடனே பயிறளவு உண்டை செய்து*
*கசாயம் விட்டுணுகிரந்தி இலையுரைத்துக் கொள்ள*
*பிணங்கொன்று மில்லையப்பா சுரங்க ளெல்லாம்*
*பேசாதே ஓடிவிடும் பேணிச் செய்யே!* 300

துத்தம் ஐந்து பங்கு, இரசம் ஒரு பங்கு, துருசு ஒரு பங்கு, நாபி முக்கால் பங்கு, அரிதாரம் ஒரு பங்கு எடுத்து பாகல் இலைச்சாறு விட்டரைத்து 32 மி.கி. அளவு உருண்டை களாய்ச் செய்து கொள்க. அதனை விஷ்ணு கிரந்திக் குடிநீரில் உரைத்துக் கொடுக்க சுரங்கள் அனைத்தும் சரியாகும்.

*பேணியே இரதமுடன் அப்பிரகஞ் சேர்த்துப்*
*பிசகாமல் சமன்கூட்டி மருக்கொழுந்துச் சாறு*
*ஏணியா மிருவேலிச் சாறு கூட்டி*
*இதமாகத் தானரைத்துக் கடுகு உண்டை*
*துணிவாக விடாச்சுரமும் போக வேண்டித்*
*துடிப்பாக இருவேலி நீச்சுத் தண்ணீர்*
*ஆணியா யுண்டைதனை உரைத்துக் கொண்டு*
*அஞ்சியிடுந் தோஷசுர மெருக்கின் சாறே!* *301*

இரசம் அப்பிரகத்தைச் சமஅளவெடுத்து மருக்கொழுந்துச் சாறு, வெட்டிவேர்ச்சாறு சேர்த்தரைத்து கடுகு அளவாக உருண்டை செய்து பத்திரப்படுத்திக் கொள்க. அதனை வெட்டிவேர்ச்சாறு, பழைய சாதம் ஊறியநீர் இவற்றில் உரைத்துக் கொடுக்க விடாச்சுரம் தீரும். எருக்கின் சாற்றில் இழைத்துக் கொடுக்க தோஷசுரம் தீரும்.

## சூரணம்

*சார மிரதங் கெந்தகமுந்*
*தாக்கு னாபி மனோசிலையும்*
*விரையா முடைய வெண்காரம்*
*விளங்க வகைக்கி ஒர்கழஞ்சி*
*கூறா அதுக்கு எட்டெடையாய்க்*
*கூட்டு மிளகு பொடிசெய்து*
*திரா யிடித்து வடிகொண்டு*
*திண்ணப் பணவிடை சூரணமே!* *302*

நவச்சாரம், இரசம், கெந்தகம், நாபி, மனோசிலை, வெண்காரம், இவற்றை வகைக்கு 5கி எடுத்து அதற்கு எட்டு பங்கு மிளகை எடுத்துப் பொடித்து சேர்த்துக் கொள்க.

*சூரணமாம் வெற்றிலையில் மடித்து உண்டு*
*சுகமாக வெந்நீர்தான் குடிக்கத் தீரும்*
*காரணமாம் பாண்டுவுடன் சோகை தீருங்*
*காமாலை குன்மமுடன் வறட்சி தீரும்*

*வாரணமாம் வலிப்புடனே இசிப்புத் தீரும்*
*மகத்தான குளிர்க்காய்ச்சல் மாறிப் போகும்*
*பூரணமாய்ப் பின்னையுமோர் பித்தந் தீரும்*
*புகழான குளிகையொன்று இரதங் கேளே! 303*

*488* மி.கி. சூரணத்தை வெற்றிலையில் வைத்து உட்கொண்டு வெந்நீர் குடிக்க வேண்டும். அவ்வாறு செய்ய பாண்டு, சோகை, குன்மம், வறட்சி, இசிப்பு, குளிர்காய்ச்சல், பித்தம் ஆகிய நோய்கள் தீரும்.

## சுரத்திற்குக் குளிகைகள்

*இரதங் கெந்தகம் வெண்கார*
*மேகுந் தாரம் மனோசிலையும்*
*மருவுந் தாம்பிர பற்பமுடன்*
*வண்மை திப்பிலி மிளகுடனே*
*உருமை நொச்சி கண்டங்காலி*
*ஒங்கு மாடா தோடையிலை*
*பெருகுஞ் சாறால் தானரைத்துப்*
*பேணிப் பயிறள வுண்டைசெய்யே! 304*

இரசம், கெந்தகம், வெண்காரம், அரிதாரம், மனோசிலை, தாமிரபற்பம், திப்பிலி, மிளகு, நொச்சி, கண்டங்கத்தரி ஆகியவற்றை வகைக்குச் சம அளவெடுத்து ஆடாதோடை யிலைச் சாற்றால் அரைத்து 32 மி.கி. அளவு உருண்டை களாய்ச் செய்து கொள்க.

*செய்த உண்டைக் கனுபானந்*
*தேனெய் சர்க்கரை இஞ்சியில் கொள்*
*அய்யங் குளையாஞ் சுவாசம்பத்து*
*ஆன இளைப்பு இருமல்சுரம்*
*வெய்யுங் குன்மம் பிரளியுடன்*
*மிகுத்த சுரவகை தானனைத்து*
*முய்ய விடமு மில்லையென்று*
*ஓடிப் போகுங் கண்டாயே! 305*

உருண்டையைத் தேன், நெய், சர்க்கரை, இஞ்சியில் உரைத்துக் கொடுக்க பத்துவகை சுவாசம், இளைப்பு, இருமல், சுரம், குன்மம், பிரளி, சுரவகைகள் ஆகிய நோய்கள் நீங்கும். விடத்தன்மையும் நீங்கி விடும்.

*கண்டா லிதுக்குப் பத்தியந்தான்*
*கருதுந் துவரை அரைக்கீரை*
*அண்டம் புகழும் மிஞ்சிசுண்டி*
*ஆகு மென்றா ரகத்தியனார்*
*தொண்டர் புகழும் பராபரனார்*
*சுவித்த பாதம் போற்றியபின்*
*மிண்டி வினைபோம் சுராங்கிஷந்தான்*
*மிகுத்ததி சாரந் தீர்ந்திடுமே!* 306

துவரைப் பருப்பு, அரைக்கீரை, இஞ்சி, சுக்கு ஆகியவை பத்தியமாகக் கொள்ளத் தக்கன. சுரங்களுடன் அதிசாரமும் தீரும்.

*தீரும் நெல்லி திப்பிலியும்*
*திகைக்கோ ரொன்று முக்கழஞ்சி*
*பாருங் கெந்தி நாவியுடன்*
*பகரவோ ரொன்று கழஞ்சாகச்*
*சேரு மிஞ்சிச் சாற்றரைத்துத்*
*தெளியுங் குன்றி பிரமாணம்*
*நேரா யுணர்த்தி இஞ்சியிலிட*
*நெகிழும் வியாதி இனிகேளு!* 307

நெல்லி, திப்பிலி இவற்றை வகைக்கு 15 கி., கெந்தி, நாவி இவற்றை வகைக்கு 5கி. எடுத்து இஞ்சிச்சாற்றால் அரைத்து 130 மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி இஞ்சிச்சாற்றில் உரைத்துக் கொடுக்க வேண்டும்.

*கேளீர் சர்த்தி பிரமேகங்*
*கிளர்ந்த சன்னி பதிமூன்று*
*நாளு முடலில் வாதம்பல*
*நன்றாய்த் தீருந் தப்பாது*

*ஆளு மாவின் பாலுடனே*
*அரிகக் கூடத் தான்போட்டு*
*மீளும் பசக்கித் தான்கழஞ்சி*
*முன்னோ ருரைத்த மொழியிதுவே!* 308

பசும்பாலை அனுபானமாகக் கொண்டு இக்குளிகையை உரைத்துக் கொடுக்க வாந்தி, பிரமேகம், பதிமூன்று வகை சன்னி, வாதம் ஆகிய நோய்கள் தீரும்.

## வெண்காரக் குளிகை

*இதுவே கேளு வெண்காரம்*
*இரத மனோசிலை மத்தவிரை*
*பொதுவாம் நாவி வகைக்கழஞ்சி*
*போற்றுந் திரிகடுகு அறுகழஞ்சி*
*மெதுவாந் தேசிச் சாற்றரைத்து*
*மீறுங் குன்றிப் பிரமாணம்*
*அதுவாந் தேசிச் சாற்றிலிட*
*ஆன சுரங்க ளகன்றிடுமே!* 309

வெண்காரம், இரசம், மனோசிலை, ஊமத்தவிதை, நாவி இவற்றை வகைக்கு 5கி., சுக்கு, மிளகு, திப்பிலி 30 கி. எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து 130 மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து கொள்க. அதனை எலுமிச்சம்பழச்சாற்றிலேயே உரைத்துக் கொடுக்க சுரங்கள் நீங்கும்.

*அகண்ட ரோணி திரிகடுகு*
*ஆன இலுப்பைப் பூவுடனே*
*புகண்டு கோளி யதிலப்பா*
*புகளும் நாசக் கருவெடுத்து*
*அகண்ட இதுவுஞ் சரிசமனா*
*மான முலைப்பால் விட்டரைத்து*
*இகண்ட சுண்டைக் காயளவு*
*இஞ்சி முலைப்பால் குணமாமே!* 310

கடுகுரோகணி, சுக்கு, மிளகு, திப்பிலி, இலுப்பைப்பூ, இவற்றைச் சமமாய் எடுத்து தாய்ப்பால் விட்டரைத்து சுண்டைக்காயளவுள்ள குளிகைகளாய் உருட்டிக் கொள்க. அதனை இஞ்சி, தாய்ப்பாலில் உரைத்துக் கொடுக்க குணமாம்.

## வாய்வு இருமல், சுரத்திற்கு மருந்து

*குணமாந் திப்பிலி சுக்குடனே*
*கூட்டுங் கடுகு மிளகுடனே*
*மணமாங் காய மோமமுடன்*
*மறவாத் திப்பிலிக் கட்டையுடன்*
*தணலா மிஞ்சிச் சாறுவிட்டுத்*
*தாங்கா தரைத்து விழுங்கிடவே*
*குணமாம் வாய்வு இருமலறும்*
*எல்லாச் சுரமும் விட்டேகும்!* 311

திப்பிலி, சுக்கு, கடுகு, மிளகு, பெருங்காயம், ஓமம், திப்பிலிக்கட்டை இவற்றைச் சமமாக எடுத்து இஞ்சிச் சாறுவிட்டு அரைத்து விழுங்கிவிட வாய்வு, இருமல், அனைத்து வகைச் சுரங்கள் நீங்கும்.

## இருமலுக்குச் சூரணம்

*ஏகுமே கற்கடக சிங்கி தேக்கு*
*இதமான திப்பிலியு முரத்த தாண்டி*
*போகுமே சடாமாஞ்சி சுக்கு கோட்டம்*
*பொருந்தியதோர் வழுதலையு மிளகு யிந்து*
*ஆகுமே தூதுவளை கண்டங் காலி*
*அருநெல்லிப் பருப்புடனே பொரியுங் கூட்டி*
*வாகுபெற வறுத்துநீ பொடிய தாக்கி*
*வளமாகத் தேனிலுண்ண இருமல் தீரும்!* 312

கற்கடகசிங்கி, தேக்கு, திப்பிலி, சடாமாஞ்சில், சுக்கு, கோட்டம், வழுதலை, மிளகு, இந்துப்பு, தூதுவளை,

கண்டங்கத்தரி, அருநெல்லிப்பருப்பு, பொரி இவற்றை வறுத்துப் பொடியாக்கிக் கொள்க. அதனைத் தேனில் கலந்து கொடுக்க இருமல் தீரும்.

## அனைத்துச் சுரத்திற்குக் குடிநீர்

*திருமே சுக்குடனே சிந்தி கூட்டிச்*
*சேவுகனு மிருவேசை லாமிச் சோடு*
*பாருயிரு நாழிநீ எட்டொன் றாக்கிப்*
*பதறாமல் திப்பிலியை வறுத்துக் கொண்டு*
*சேருநீ கிஷாயத்தில் மேலே தூவிச்*
*செலுத்துவா யிருநேரங் கிஷாயந் தன்னை*
*மாறுமே சுரங்களெல்லாம் விட்டே போகும்*
*மயக்கமுடன் தாகமெல்லாம் மாறிப் போமே!* *313*

சுக்கு, சீந்தில், சேவகன்பூடு, விலாமிச்சை இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து *1.3* லி. தண்ணீர் விட்டு எட்டொன்றாய்ச் சுருக்கிக் கொள்க. திப்பிலியை வறுத்துப் பொடித்துக் குடிநீரில் தூவிக் கொள்க. பின் பக்குவத்துடன் வடித்து இரண்டு நேரமுங் குடிக்க சுரங்கள் அனைத்தும் நீங்கும். மயக்கம், தாகம் தீரும்.

## தாக சுரத்திற்குக் குடிநீர்

*போமே தாணிதிரி கடுகுநெல்லி*
*போற்றுந் தாமரை இலவங்கம்*
*ஆமே கொன்றைத் தோலுடனே*
*அரிய கழஞ்சி ஒரொன்று*
*நாமே சொன்னோ மிருநாழி*
*நல்ல நீரில் வெந்திறக்கு*
*தாமே திப்பிலி தூவியுண்ணத்*
*தாக சுரமுந் தங்காதே!* *314*

தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, நெல்லி, தாமரை, இலவங்கம், கொன்றைப்பட்டை, இவற்றை வகைக்கு 5 கி.

எடுத்துக் கொள்க. 2.6 லி. தண்ணீர் விட்டு முறைப்படி குடிநீராய்க் காய்ச்சிக் கொள்க. இறக்கும்போது திப்பிலிச் சூரணத்தைத் தூவி கொடுக்க தாக சுரம் தீரும்.

## சுரத்திற்குக் குடிநீர் வகைகள்

*தங்காத் தாமரையின் கிழங்குச் சாறு*
*சம்மட்டி மதுரமுடன் ஓமங் காயம்*
*பங்கமில்லா நன்னாரி வேரு மிந்து*
*பகரிலுப்பைப் பூவுடனே சமன தாகச்*
*சிங்கார மானதொன்றுக் கிருக ழஞ்சி*
*சேரவே காய்ச்சிநீ எட்டொன் றாக்கி*
*பங்கமில்லாத் திப்பிலிமேல் பொடிய தாக்கி*
*பவினையாக் கொள்ளுசுரம் பாழ தாமே!* 315

தாமரைக் கிழங்குச் சாறு, அதிமதுரம், ஓமம், பெருங்காயம், நன்னாரிவேர், சம்மட்டி, இலுப்பைப்பூ இவற்றை வகைக்கு 10 கி. தண்ணீர் ஊற்றி எட்டொன்றாய்ச் சுருக்கிக் காய்ச்சி திப்பியைப் பொடித்துத் தூவி நோயாளிகளுக்குக் கொடுக்க சுரம் தீரும்.

*ஆமே நெல்லி கடுகுதான்றி*
*ஆகு மிஞ்சி இருவேலி*
*தாமே சொல்லு மிலாமிச்சு*
*தர்மத் தாமரைக் கிழங்குடனே*
*ஓமே ஒரொன் றிருகழஞ்சி*
*ஒளியும் நீரில் எட்டொன்றாய்*
*வேமே வெந்து குடிப்பிரால்*
*வெதுப்பு மில்லை விதியெனவே!* 316

நெல்லி, கடுகு, தான்றிக்காய், இஞ்சி, இருவேலி, இலாமிச்சு, தாமரைக் கிழங்கு இவற்றை வகைக்கு 10 கி. எடுத்துத் தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி அளவறிந்து கொடுக்க சுரம் தீரும்.

*விதியே யென்னும் வெண்காரம்*
*வேண்டுந் தண்ணி பதக்காகக்*
*கொதியா நின்ற வெதுப்புடனே*
*கூட்டிக் கொள்ளக் கொள்ளுமதில்*
*சதியா யருந்த தக்கதாய்*
*தாம மதியச் சாறுடனே*
*பதியே யல்லக் காணுமது*
*பாரீர் சுரமும் பவ்வெனவே!* *317*

வெண்காரத்தை எடுத்து 10.7 லி. தண்ணீரூற்றி முறைப்படி எட்டிலொன்றாய்க் காய்ச்சி அளவறிந்து கொடுக்க சுரம் தீரும்.

*பய்யே சிறுகாஞ் சொறியுடனே*
*பருத்த சீந்தித் தோடையிலை*
*செய்யுஞ் சிறிய வழுதலையுஞ்*
*சேருஞ் சுக்கு வன்னிவேர்*
*மைய இடிக்க வகைகழஞ்சி*
*மறுகக் காய்ச்சி எட்டொன்றாய்*
*நய்ய எடுத்துக் கொடுப்பீரால்*
*நமனுஞ் சுரமும் நாடாதே!* *318*

சிறுகாஞ்சொறி, சீந்தில், ஆடாதோடையிலை, சிறுவழுதலை, சுக்கு, வன்னிவேர் இவற்றை வகைக்கு 5 கி. எடுத்துக் கொள்க. தேவையான அளவு நீர் ஊற்றி முறைப்படி எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. அதனை அளவறிந்து நோயாளிக்குக் கொடுக்க சுரம் தீரும்.

*நாடுஞ் சீந்தி வேர்ப்பிர்க்கு*
*நல்ல நெல்லி கடுகுதான்றி*
*போடாப் புடலும் ரோசனையும்*
*போற்றுஞ் சிறுகாஞ் சோறியுடன்*

*பாடாப் பகருங் பெருங்குரும்பை*
*பதித்த பட்டை வேருடனே*
*கோடா திருந்து யெட்டொன்றாய்க்*
*கொடுப்பீர் கழஞ்சு தேனுடனே! 319*

சீந்தில், வேம்பின் ஈர்க்கு, நெல்லி, கடுகு, தான்றி, புடல், சிறுகாஞ்சொறி, பெருங்குரும்பையின் பட்டை, வேர் இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்துத் தண்ணீர் ஊற்றி எட்டொன்றாய்க் காய்ச்சி வைத்துக் கொள்க. அதனை 5 கி. எடுத்துத் தேனையும் சேர்த்துக் கொடுக்க சுரம் நீங்கும்.

*தேனாஞ் சிறுதேக்கு நிலவேம்பு*
*திப்பிலி கோட்டம் முத்தக்காசு*
*வான்சிறு காஞ்சொறி பற்படாக*
*மதிக்குஞ் சீந்தி கத்தரிவேர்*
*நான்சிறு சுக்கு னாழிநீர்*
*நண்பாய்க் காய்ச்சி எட்டொன்றாய்த்*
*தானது மூன்று நாள்குடிக்கச்*
*சகல சுரமும் வாராதே! 320*

சிறுதேக்கு, நிலவேம்பு, திப்பிலி, கோஷ்டம், முத்தக்காசு, சிறுகாஞ்சொறி, பற்பாடகம், சீந்தில், கத்தரிவேர், சுக்கு, இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து 1.3 லி. நீரூற்றி முறைப்படி எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. இவ்வாறே மூன்று நாட்களுக்குக் காய்ச்சிக் குடிக்க அனைத்து வகை சுரமும் நீங்கும்.

*வாராய் சுக்கு சீந்தியுடன்*
*மருவும் வழுதலை கத்தரிவேர்*
*நாரங் கோட்ட முடன்கழஞ்சாம்*
*நண்பா தகரை யிருனாழிநீர்*
*பாராய் கிஷாய மெட்டொன்றாய்ப்*
*பருகக் காய்ச்சிக் குடிப்பீராய்*
*சீராய் வந்த சுரங்களெல்லாஞ்*
*சிதறிப் போகுங் கண்டீரே! 321*

சுக்கு, சீந்தில், வழுதலை, கத்தரிவேர், தகரை, கோஷ்டம், இவற்றை வகைக்கு 5 கி. எடுத்து 2.6 லி. நீரூற்றி எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. அதனை அளவறிந்து கொடுக்க சுரங்கள் நீங்கும்.

*கண்டதொரு சந்தனம் நன்னாரி வேரு*
*காட்டிக்கொட்டிக் கிழங்குசெங் கழுநீர் கோட்டம்*
*முண்டதொரு முந்திரிகை யிலுப்பைப் பூவும்*
*மீறாம லிருகழஞ்சி கூட்டிக் காய்ச்சிச்*
*சுண்டவே எட்டொன்றாய்க் கிஷாயங் கொண்டால்*
*சுரமனைத்தும் பதைத்தோடும் பருகு விரே*
*..................................................................*
*..................................................................! 322*

சந்தனம், நன்னாரிவேர், கொட்டிக் கிழங்கு, செங்கழுநீர், கோஷ்டம், முந்திரிகை, இலுப்பைப்பூ இவற்றை வகைக்கு 10 கி. எடுத்து தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்துக் கொள்க. அதனை அளவறிந்து குடித்தால் சுரங்கள் போகும்.

*பருகிப் பழத்தின் முந்திரிகை*
*பருத்த லாமிச் சிருவேலி*
*வரும்பே ரீச்சுச் சரிசமனாய்*
*மறுகக் காய்ச்சிக் குடிப்பிரால்*
*குருகச் சுரமும் பரிதவித்துக்*
*குதித்தே ஒடிப் போவதற்கு*
*மருவிக் கிஷாயந் தான்கொள்ளு*
*மருண்டு போகுங் கண்டீரே! 323*

முந்திரிகைப்பழம், இலாமிச்சு, வெட்டிவேர், பேரீச்சு, இவற்றை வகைக்குச் சமமெடுக்க. நீர்விட்டு முறைப்படி சுருக்கிக் காய்ச்சிக் கொடுக்க சுரம் ஓடிப்போகும்.

*கண்டதொரு கிஷாயமொன்று சொல்லக் கேளு*
*கசடான சுரம்விட்டுப் போவ தற்கு*
*மண்டலத்தில் சிந்தியதின் கழஞ்சு கூட்டி*
*வகையான சுக்குனாற் கழஞ்சு கூட்டி*

*தண்டாம லிடித்திடுவாய் தூள தாகத்*
*தனிநீரி லெட்டொன்றாய்க் கிஷாயங் கொண்டால்*
*பண்டுள்ள சுரங்களெல்லாம் பறந்து போகும்*
*பாவினையாத் தேன்கூட்டிப் பருக நன்றே!* *324*

கசடாகிய சுரம் நீங்குவதற்குக் குடிநீர் ஒன்றைக் கூறுகிறேன் கேளுங்கள். சீந்தில் 5 கி., சுக்கு 20 கி. எடுத்துப் பொடித்துக் கொள்க. அதில் நீரூற்றி எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொடுக்க நீண்ட நாட்களாய் இருந்த சுரங்கள் நீங்கும். தேன் சேர்த்துக் குடித்தால் மிகவும் நன்மை பயக்கும்.

*நன்றே மதுரம் சுக்குடனே*
*நறுக்கு மூலந் தோடையிலை*
*இண்டே நீர்தா னிருனாழி*
*இடித்துக் காய்ச்சி எட்டொன்றாய்ச்*
*சென்றே குடிக்கச் சுரங்கள் விட்டுத்*
*தெறித்துப் போகுங் கண்டீரே*
*குன்றே முலையாள் காந்திமுத்தங்*
*கூட்டிக் கொள்ளக் குணமாமே!* *325*

அதிமதுரம், சுக்கு, நறுக்குமூலம், ஆடாதோடையிலை, இண்டிலை, இவற்றைச் சேர்த்து 2.6 லி. நீர் விட்டு எட்டொன்றாய்ச் சுருக்கிக் காய்ச்சிக் கொடுக்க சுரங்கள் விட்டுப் போகும். விஷ்ணுகாந்தி, முத்தக்காசினையும் சேர்த்துக் கொள்ள சுரம் குணமாகும்.

*குணமாம் ரோகணி செவ்வியமுங்*
*கூட்டுங் கடுக்காய் சுக்குடனே*
*மணமாஞ் சாரணை மரமஞ்சள்*
*வாய்க்குந் தேவ தாரமுடன்*
*பணம்போல் நீரி லெட்டொன்றாய்*
*பறக்கக் காய்ச்சித் தானிறக்கி*
*உணர்வாத் திப்பிலி மேல்தூவி*
*உகந்து கொள்ளச் சுரமறுமே!* *326*

கடுகுரோகணி, செவ்வியம், கடுக்காய், சுக்கு, சாரணை, மரமஞ்சள், தேவதாரம் இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து தண்ணீரூற்றி முறைப்படி காய்ச்சி எட்டிலொன்றாய்ச் சுருக்கிக் கொள்க. திப்பிலியைப் பொடித்துத் தூவிக் கொடுக்க சுரம் நீங்கும்.

*அறுமே மிளகு கோட்டமுடன்*
*ஆன குமிளு வேப்பலகு*
*குறுகுங் கொத்தான் துத்தமுடன்*
*கொள்ளுந் தேவ தாரம்சேர*
*மறுகோ காணி பெருங்குரும்பை*
*வயக்கும் புடலோ விடையமுடன்*
*சிறுகாஞ் சோரி கிழ்நெல்லி*
*சேர்த்தே கஷாயஞ் சுரமகலும்!* *327*

மிளகு, கோஷ்டம், குமிழ், வேம்பின் ஈர்க்கு, கொத்தான், துத்தம், தேவதாரம், பெருங்குரும்பை, அதிவிடையம், சிறுகாஞ்சொறி, கீழாநெல்லி இவற்றை வகைக்குச் சம அளவெடுத்து நீரூற்றி முறைப்படி குடிநீராய்க் காய்ச்சிக் கொடுக்க. சுரம் நீங்கும்.

*அகலுங் கொன்றைத் தாணியுடன்*
*ஆகும் ரோசன்ன வேப்பலகு*
*புகலு முத்தக் காசுசுக்கு*
*பொதுவாம் மூலம் சிரகமும்*
*வகையாம் கழஞ்சி தானுவாங்கி*
*வற்றக் காய்ச்சிக் குடிப்பீராய்*
*தகையா திப்பிலி மேல்ப்பொடியாம்*
*தாங்கா தெடுத்துக் குடிப்பீரே* *328*

கொன்றை, தான்றிக்காய், கோரோசனை, வேம்பின் ஈர்க்கு, முத்தக்காசு, சுக்கு, சீரகம், சித்திரமூலம் இவற்றை வகைக்கு 5 கி. எடுக்க. நீர் ஊற்றி முறைப்படி குடிநீராய்க் காய்ச்சி திப்பிலியைப் பொடித்து மேல் தூவிக் கொடுக்க சுரம் தீரும்.

*குடிக்கும் சுக்கு முத்தக்காசு*
*கூட்டுஞ் சாரணை வேப்பலகு*
*முடிக்க கசாயம் ஒரொன்று*
*முடுகு மெள்ளு முக்கழஞ்சி*
*படிக்கும் படியே மேலிட்டுப்*
*பய்யக் காய்ச்சி எட்டொன்றாய்*
*மடிக்கப் பொடியை மேலிட்டு*
*மதித்துக் குடிசுரம் வாராதே* 329

சுக்கு, முத்தக்காசு, சாரணை, வேம்பின் ஈர்க்கு இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து எட்டொன்றாய்ச் சுருக்கி குடிநீராய்க் காய்ச்சிக் கொள்க. அதில் 15 கி. எள்ளினைப் பொடித்துப் போட்டுக் கலந்து கொடுக்க சுரம் வராது நீங்கும்.

*வாராய் சிவதை கண்டங்காலி*
*வளருஞ் சுக்கு மிளகுடனே*
*ஏரா தென்ன சொல்லுகிறேன்*
*இதுவே றொன்று முக்கழஞ்சி*
*காரார் குழலே எட்டொன்றாய்க்*
*காய்ச்சித் திப்பிலி மேல்பொடியாம்*
*சீரா மலையா திருபோதில்*
*திகழப் பருகத் திண்ணமதே* 330

சிவதை, கண்டங்கத்திரி, சுக்கு, மிளகு இவற்றை வகைக்கு 15 கி. எடுத்துத் தேவையான அளவு தண்ணீர் விட்டு எட்டொன்றாய்ச் சுருக்கிக் காய்ச்சிக் கொள்க. அதில் திப்பிலியைப் பொடித்துத் தூவி இரண்டு நேரம் குடிக்க காய்ச்சல் தீரும்.

*திண்ண மதுவே தோடையிலை*
*சிந்திக் கொடியும் வழுதலையுந்*
*தண்ணு சுக்கு வகையொன்று*
*தாங்காக் கொள்ளு முக்கழஞ்சி*
*வண்ணம் புதிய நீரிலிட்டு*
*வற்றக் காய்ச்சி எட்டொன்றாய்த்*
*தண்ணந் திப்பிலி மேல்பொடியாய்த்*
*தாக்க சுரமும் தறுகாதே* 331

ஆடாதோடையிலை, சீந்தில் கொடி, வழுதலை, சுக்கு இவற்றை வகைக்கு ஒரு பங்கு, கொள்ளு 15 கி. எடுத்து பழைய நீரை விடுத்து புதிய நீரை ஊற்றி முறைப்படி எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. அதில் திப்பிலியைப் பொடித்துத் தூவிக் கலந்து கொடுக்க சுரம் தீரும்.

*தறுகாது கடுக்காயுஞ் சிவதை வேருந்*
*தாக்குசுக்கு ரோகணியுஞ் சிவதை கூட்டி*
*முறுகியதோர் களிப்பாக்கு சீந்தித் தண்டு*
*முதுகண்ணிச் சருகுடனே மொக்கி நண்பா*
*உறுதியா நீரிலிட்டு எட்டொன் றாக்கி*
*உடனாகத் திப்பிலியு மேல்பொடியுங் கொள்ளு*
*தறுகாது சுரமேகும் வயிறு போகுந்*
*தனிக்குளிகை கெந்தகத்தைச் சாற்று வோமே* 332

கடுக்காய், சிவதைவேர், சுக்கு, கடுகு, ரோகணி, சிவதை, களிப்பாக்கு, சீந்தில் தண்டு இவற்றைச் சமஅளவெடுத்துக் கொள்க. தண்ணீர்விட்டு எட்டொன்றாய்ச் சுருக்கிக் காய்ச்சி திப்பிலியைப் பொடித்துப் போட்டு கலக்கிக் கொடுக்க சுரம் நீங்கும்.

## கெந்தகக் குளிகை

*கெந்தகம் பச்சை நாபி*
*கேளுநீ மிளகு சூதம்*
*வெந்தநேர் வாளந் தன்னை*
*விஷமது தள்ளிக் கூட்டிப்*
*புந்திபூ சணிப்ப ருப்பு*
*பொருந்தவே தானுங் கூட்டி*
*இந்த உளுந்து அளவாக*
*இஞ்சிச் சாற்றி லரைத்துருட்டே* 333

கெந்தகம், பச்சை நாவி, மிளகு, இரசம், சுத்தி செய்த நேர்வாளம், பூசணிப்பருப்பு இவற்றை எடுத்து இஞ்சிச்சாறு சேர்த்தரைத்து 65 மி.கி. அளவாக உருட்டிக் கொள்க.

*உருட்டுங் குளிகை சுக்கிலிட*
*ஓடுஞ் சுரங்க ளனைத்துநிற்கு*
*மிருக்குஞ் சன்னி பதிமூன்று*
*ஏகு மிஞ்சிச் சாற்றிலிட*
*அறுக்கும் வயிற்றில் நோவெல்லா*
*மளிக்குந் தேனு மிஞ்சிரசம்*
*குறுக்கு முந்தி மலக்கட்டுக்*
*கோழி யறுக்கு விளக்கெண்ணெய்* 334

அதனைச் சுக்கில் இழைத்துக் கொடுக்க சுரங்கள் நீங்கும். இஞ்சிச் சாற்றில் இழைத்துக் கொடுக்க பதிமூன்று வகைச் சன்னியும், இஞ்சிச்சாறும் தேனும் கலந்த கலவையில் உரைத்துக் கொடுக்க வயிற்று வலியும் விளக்கெண்ணெயில் கொடுக்க மலக்கட்டும் தீரும்.

## குளிகைகள்

*விளங்குந் துத்த னாலுடனே*
*வெண்பா சாண மூன்றாகுங்*
*களங்க மற்ற வாளம்ரெண்டு*
*காட்டுஞ் சாத்திர பேதியொன்று*
*விளங்க மோரு விட்டரைத்துப்*
*பேணிக் கடுகு போலுருட்டி*
*உளங்கள் குளிரு சுரமனைத்து*
*யோடி யொளிக்கு மோரிலிடே* 335

துத்தம் நான்கு பங்கு, வெள்ளைப் பாசாணம் மூன்று பங்கு, வாளம் இரண்டு பங்கு, சாத்திர பேதி ஒரு பங்கு எடுத்து மோர் சேர்த்தரைத்து கடுகளவுள்ள மாத்திரைகளாக உருட்டி மோரிலேயே உரைத்துக் கொடுக்க குளிர்சுரங்கள் அனைத்தும் நீங்கும்.

*மோரா மத்து விரைநாலு*
*முனிவெண் காரம் அஞ்சாகும்*
*பாராய் கெந்தம் ஆறாகும்*
*பகரு னாபி யேழாகுங்*

*கூரா யிரதன் ரெண்டுடனே*
*கூட்டிச் சேர்த்து நிறைகொண்டு*
*வேராஞ் சித்திர வேர்ச்சாற்றில்*
*விளங்கக் குன்றி முத்தாகும்!* 336

ஊமத்தன் விதை நான்கு பங்கு, வெண்காரம் ஐந்து பங்கு, கெந்தகம் ஆறுபங்கு, நாபி ஏழு பங்கு, இரசம் இரண்டு பங்கு எடுத்து சித்திரவேர் சாற்றில் அரைத்து 130 மி.கி. அளவுள்ள உருண்டைகளாய்ச் செய்துகொள்க.

*முத்தாம் உண்டை தனையெடுத்து*
*மோதுஞ் சுரத்தி லிஞ்சியிடு*
*மெத்த வலிக்கும் வலிகுன்மம்*
*வெள்ளை யுள்ளிச் சாற்றிலிட*
*பித்த மிருந்து தலைசுற்றில்*
*பேணி நொச்சிச் சாற்றிடைச்*
*சுத்த வாதம் பிடித்ததுக்குத்*
*துலங்கு நொச்சிச் சாற்றருந்தே* 337

உருண்டையை இஞ்சியில் இழைத்துக் கொடுக்க சுரமும் வெள்ளை உள்ளிச் சாற்றில் உரைக்க வலியுள்ள குன்மமும் நொச்சிச் சாற்றில் கொடுக்க பித்தத்தால் ஆன தலை சுற்றும் வாதபிடிப்பும் தீரும்.

*அருந்தும் வெள்ளைப் பாஷாணம்*
*ஆன கழஞ்சி ரெண்டாகும்*
*பொருந்து சந்தன முக்கழஞ்சி*
*போதாக் குழிக்கல் தனிலிட்டு*
*வருந்து முலைப்பால் விட்டாட்டி*
*மறுக மூன்று நாளரைத்துத்*
*திருந்த மிளகு அளவுவெந்நீர்*
*தீரும் வெள்ளை சுரமிருமல்!* 338

வெள்ளைப் பாடாணம் 10 கி., சந்தனம் 15 கி. எடுத்து குழிக்கல்லில் இட்டு தாய்ப்பால் விட்டு மூன்று நாளரைத்து மிளகளவுள்ள உருண்டைகளாய்ச் செய்து கொள்க. அதனை

வெந்நீரில் இழைத்துக் கொடுக்க வெள்ளை சுரம், இருமல் தீரும்.

*சுரமாந் துத்தம் பத்துடனே*
*துலங்கு பாஷாணம் நாலாகும்*
*வருமே இதனை இடைகொண்டு*
*மற்றும் எருக்கின் சாற்றரைத்துப்*
*பருவ மாக இரண்டுநாள்*
*பாங்கா யரைத்துக் கடலைகள்போல்*
*சறுவ சுரமு மாவின்பால்*
*தன்னி லருந்தச் சாற்றியதே!* 339

துத்தம் பத்து பங்கு, வெள்ளைப்பாடாணம் நான்கு பங்கு எடுத்து எருக்கிலைச் சாற்றினை விட்டரைத்துக் கொள்க. இரண்டு நாட்கள் அரைத்த பிறகு கடலைபோல் குளிகைகளாய்ச் செய்து கொள்க. பசும்பாலில் இழைத்துக் கொடுக்க அனைத்து சுரமும் நீங்கும்.

*சாதி லிங்கம் வெண்பாசாணந்*
*தானே ஊமத்தஞ் சாற்றரைத்து*
*மேத மாகச் சாமமரை*
*விளங்கும் உளுந்துப் பிரமாணம்*
*போத உருட்டிக் குளுந்ததண்ணீர்*
*பொருந்தக் குடிக்க வல்லீராய்*
*மாலே குளிருஞ் சுரமாறும்*
*மண்ணும் பிரமா அஸ்தமிதாம்* 340

சாதிலிங்கம், வெள்ளைப் பாடாணம் எடுத்து ஊமத்தஞ்சாறு சேர்த்து ஒன்றரை மணி நேரம் அரைத்து 65 மி.கி அளவுள்ள குளிகைகளாய் உருட்டிக் கொள்க. அதனைக் குளிர்ந்த நீரில் இழைத்துக் கொடுக்க சுரங்கள் தீரும்.

*இரதஞ் சுத்தி அறுகழஞ்சி*
*ஏமந் தேசிப் பழச்சாற்றில்*
*நிருத மாக நாளொன்று*
*நிகண்ட சத்திச் சாரணையும்*

*அரிதே சுக்கு திப்பிலியு*
*மதுக்குக் கழஞ்சி வகையொன்று*
*பருது வாக இலுமிச்சம்*
*பழமு மிஞ்சிச் சார்பகரே!* 341

இரசத்தைச் சுத்திசெய்து 30 கி. எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றில் ஒரு நாள் அரைத்துக் கொள்க. சத்திச்சாரணை, சுக்கு, திப்பிலி இவற்றை வகைக்கு 5 கி. எடுத்து எலுமிச்சம் பழச்சாறு, இஞ்சிச்சாறு இவற்றில் மூன்று நாள் அரைக்கவும்.

*பகலு முதலாய் நாள்மூன்று*
*பரிந்தே அரைத்துப் பயிறளவாய்*
*ஏக மாகக் குளிகைசெய்து*
*இஞ்சி தேனில் தானிடவே*
*சோகை சன்னி வாதமுடன்*
*சொல்லுங் கைகால் குளுந்தசுர*
*மாகுஞ் சன்னி விஷமாறு*
*மதிசார சுரமு மஞ்சியதே!* 342

32 மி.கி. அளவாக உருண்டை செய்து கொள்க. அதனை, இஞ்சி, தேன் இவற்றில் உரைத்துக் கொடுத்திட சோகை, சன்னி, வாதமுடன் கூடிய கைகால், குளிரெடுத்தலுடன் வரும் காய்ச்சல், சன்னி, விஷம், அதிசாரசுரம் தீரும்.

*அஞ்சு மிஞ்சிச் சாற்றிலிட*
*ஆகு மாடா தோடையிலை*
*மிஞ்சு பூசணி கொத்தமல்லி*
*மிகுகற் றாழஞ் சாறுசுக்கு*
*மிஞ்சு பற்ப டாகமிவை*
*விளங்கச் சமனாய்த் தான்காய்ச்சி*
*அஞ்சா தொருண்டை தானிடவே*
*யான சுரமாங் கிஷமதுசாதி!* 343

ஆடாதோடையிலை, பூசணி, கொத்துமல்லி, கற்றாழைச் சோறு, சுக்கு, பற்பாடகம், இவற்றைச் சமனெடுத்து காய்ச்சிக்

கொள்க. அதில் மேற்சொன்ன உருண்டை ஒன்றை இடித்துக் கொடுக்க சுரமாங்கிஷம் நீங்கும்.

*சாதி லிங்கம் பெருங்காயந்*
*தானே நாபி வெண்கார*
*மேத மிளகு சமனாக*
*என்று வாள முக்கழஞ்சி*
*போதக் கற்றாழஞ் சாற்றிலுருண்டை*
*பொருந்த மிளகுப் பிரமாணம்*
*மாதே இஞ்சி இவையன்றி*
*வருந்துங் கருப்புக் கட்டியுண்ணு!* 344

சாதிலிங்கம், பெருங்காயம், நாபி, வெண்காரம், மிளகு இவற்றைச் சமனாக எடுத்துக் கொள்க. வாளத்தை 15 கி. எடுக்க. கற்றாழைச் சாற்றை விட்டரைத்து மிளகளவுள்ள உருண்டைகளாய்ச் செய்து கொள்க. அதனை இஞ்சிச் சாற்றில் மட்டுமல்லாது கருப்புக் கட்டியுடன் கொடுக்கவும்

*உண்ணு சுரங்கள் தான்திரு*
*மோடு மதிசார மொழிந்துவிடும்*
*பண்ணு சீத சுடமாறும்*
*பரதாபச் சுரங்கள் பயந்தோடு*
*மெண்ணும் வாத சுரமேகு*
*மேக பித்த சுரந்திரும்*
*திண்ண மிதுவே யனுபானஞ்*
*செய்யக் குளிர்சுரந் தீர்ந்திடுமே!* 345

அவ்வாறு செய்ய சுரங்கள், அதிசாரம், சீதசுரம், தாபசுரம், வாதசுரம், பித்தசுரம், குளிர்சுரம் இவை தீரும்.

*தீர்ந்த சாதிக் காய்குடைந்து*
*தீர்நறும் பிசினி றையவிட்டு*
*சேர்ந்த பின்னுங் காய்குடைந்து*
*சீரகம் நிறையத் தானமுக்கி*

*போந்த வாழைத் தண்டுரித்துப்*
*பொருந்த நாரால் தான்சுற்றி*
*வாந்த மாகப் புடங்களிட்டு*
*மறுத்து வாழைத் தண்டதுதான்!* 346

சாதிக்காயைக் குடைந்தெடுத்துப் பிசினியை விட்டு மேலும் குடைந்தெடுத்து விடுக. சீரகத்தை அப்பகுதியில் அடைத்து வாழைத் தண்டினை உரித்து அந்நாரினால் சுற்றி விடுக. வாழைத் தண்டினில் வைத்துப் புடமிடுக.

*வாழைத் தண்டு மருந்தோடை*
*மகிழச் சுட்டுத் தானரைத்து*
*மீளச் சுண்டைக் காயளவு*
*மிகுத்த கசாயஞ் சிறுகீரை*
*தாளவெட் பூலா வேரிலையுந்*
*தந்த கசாயத் தோருண்டை*
*ஆள அமுக்குஞ் சுரங்களெல்லா*
*மதிரிட் டோடு மதுகேளே!* 347

ஆறிய பிறகெடுத்து மருந்தினை அரைத்துச் சுண்டைக் காயளவாக உருண்டைகள் செய்து கொள்க. சிறுகீரை, வெட்பூலாவேர், இலை இவற்றைச் சேர்த்து முறைப்படி குடிநீராக்கிக் கொள்க. அதில் மேற்சொன்ன உருண்டையை இழைத்துக் கொடுக்க சுரங்கள் தீரும்.

## வாய்வுக் குளிகை

*கெந்த மிரத மதிவிடையங்*
*கிளர்ந்த கடுக்காய் முத்தமுடன்*
*குத்து கற்கடக சிங்கியுடன்*
*கூறுஞ் சவுக்கார மிலவம்பிசின்*
*முந்தும் வசம்பு சமனாக*
*முனிந்த கஞ்சா விலைச்சாற்றில்*
*அந்தம் பெறவே தானரைத்து*
*அப்பால் கருசாலஞ் சாறொருநாள்!* 348

கெந்தகம், இரசம், அதிவிடையம், கடுக்காய், முத்தக்காசு, கற்கடகசிங்கி, சவுக்காரம், இலவம்பிசின், வசம்பு இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து கஞ்சாஇலைச் சாற்றில் ஒரு நாளும் கரிசாலைச் சாற்றில் ஒரு நாளும் முறையே நன்கு அரைத்துக் கொள்க.

*ஒருநா ளரைக்கு இலுமிச்சை*
*ஒகந்த சாற்றி லோர்நாளாம்*
*வருமே தேத்தான் விரைபோல*
*மகிழ உலர்த்தி அனுபான*
*மருவும் வாய்வு தேனிலிட*
*மருங்கு பித்த மெருமைத்தயிர்*
*தருமே சேற்றுமந் தேனிலிடத்*
*தங்கு திப்பிலி மேல்பொடியே!* *349*

எலுமிச்சைச் சாற்றில் ஒருநாள் அரைத்து தேற்றான் விதை போல குளிகை செய்து உலர்த்தி வைத்துக் கொள்க. அதனைத் தேனில் இழைத்துக் கொடுக்க வாய்வும் எருமைத் தயிரில் கொடுக்க பித்தமும் தேனில் கொடுக்க சேற்றுமமும் தீரும். திப்பிலியைப் பொடித்து மேலே தூவிக் கொடுக்கவும்.

## கிராணிக் குளிகைகள்

*பொடியா மிந்து திரிகடுகு*
*புகலும் விடையம் னாபியபின்*
*விடியுங் கல்மதஞ் சீரகமு*
*மேவு மோதகம் வெண்காரந்*
*துடியாங் கெந்தக மூமத்துவிரை*
*துலங்கு லிங்க மாங்கொட்டை*
*படியாம் புளிய விரைத்தோலும்*
*பகரு கூகை நீராமே!* *350*

இந்துப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, அதிவிடையம், நாபி, அபின், கல்மதம், சீரகம், கடுக்காய், வெண்காரம்,

கெந்தகம், ஊமத்தன்விதை, லிங்கம், மாங்கொட்டை, புளியங்கொட்டையின் தோல், கூகைநீர் எடுக்க.

*நீராஞ் சந்தனஞ் சாதிக்காய்*
*நேரா வசம்பு கிராம்புடனே*
*பேராங் காஞ்சொறி வசுவாசி*
*பின்னு நொச்சி இஞ்சிச்சார்*
*நேரும் சிரத்திற் குன்றியுண்டை*
*நேர்ந்து சர்க்கரை தயிர்தேனிற்*
*கூறாய் அருந்தக் கிராணிகடு*
*கூட்டு விசுழி குடிபோகும்! 351*

சந்தனம், சாதிக்காய், வசம்பு, கிராம்பு, காஞ்சொறி, சாதிபத்திரி ஆகிய மருந்துப் பொருட்களைச் சமஅளவெடுத்து நொச்சி, இஞ்சி இவற்றின் சாறுகளில் அரைத்து 130 மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து கொள்க. அதனை சர்க்கரை, தயிர், தேன் இவற்றில் ஏதேனுமொன்றில் இழைத்துக் கொடுக்க கிராணி, கடுப்பு, விசுழி எனும் கழிச்சல் நீங்கும்.

*போகுங் குரும்பை பாண்டுடனே*
*புகழும் பாளை அப்படியே*
*ஆகுங் கெந்தக மந்திடையே*
*ஆறு கழஞ்சி சுக்காகும்*
*வாகு முத்த மந்தயிடை*
*வளர்காரீய மாறாகும்*
*பாக மாவரை பன்னிரண்டு*
*பாளை சாத்திரக் கிராணிக் கீடே! 352*

குரும்பை, பாளை, கெந்தகம் ஆகியவற்றைச் சம அளவெடுக்க. சுக்கு, கோரைக் கிழங்கு, காரீயம் 30 கி., ஆவரை 60 கி. எடுத்து இவற்றை அனுபானமாக முறைப்படி கொண்டு கிராணிக்குக் கொடுக்கவும்.

*இடுநீ யிரதம் நாபிகெந்தி*
*ஈன்ற கருவாய் தோல்வசம்பு*

*திடமா மிவையொன் றொருகழஞ்சி*
*திருந்த மிளகு இருகழஞ்சி*
*அடவா மாதுளைப் பழச் சாற்றா*
*லரைத்து உளுந்து அடவாகப்*
*படுபாவி நோயனைத் தினுக்கும்*
*பறக்க அடிக்கு மிதுவடவாம்!* 353

இரசம், நாபி, கெந்தகம், கருவாப்பட்டை, வசம்பு, ஆகியவற்றை வகைக்கு 5கி., மிளகு 10கி. எடுத்து மாதுளைப் பழச்சாற்றாலரைத்து 65 மி.கி. அளவாகக் குளிகைகள் செய்து கொள்க. அதனைத் தக்க அனுபானங்களில் இழைத்துக் கொடுக்க பல நோய்கள் நீங்கும்.

*அடவாம் வாத சுரத்துக்கு*
*ஆகும் நொச்சிச் சாற்றிலிட*
*அடவாம் பித்தங் கொத்துமல்லி*
*ஆன சன்னி சுரத்துக்கு*
*அடவாந் திரிகடு கிந்துப்பு*
*அந்தப் பொடியி லிழைத்துண்ண*
*அடவாங் கண்ணு நோவுக்கு*
*ஆகு மெருக்கம் பழச்சாறே!* 354

நொச்சிச் சாற்றில் இழைத்துக் கொடுக்க வாதசுரமும், கொத்துமல்லிக் குடிநீரில் கொடுக்க பித்தமும், சுக்கு மிளகு, திப்பிலி, இந்துப்புத் தூளில் உரைத்துக் கொடுக்க சன்னி சுரமும், எருக்கம் பழச்சாற்றில் கொடுக்க கண்நோயும் நீங்கும்.

*சாரம் நீல காசமுடன்*
*சாற்று மாவி நீராகுந்*
*தீரா எரிப்புக் காமாலை*
*தீர்க்க ஆவின் பாலாகும்*
*பாரா யுதர வியாதியுள்போம்*
*பாலாஞ் சீனி சந்தனமாஞ்*
*சேரா வாத வாயுவுடன்*
*தீரு மாமணக் கெண்ணையிடே* 355

நீல காசத்திற்குக் கொதித்த நீரிலும் காமாலைக்குப் பசும்பாலிலும், வயிற்று வலிக்குப் பால், சீனி சந்தனம் சேர்ந்த கலவையிலும் வாதத்திற்கு ஆமணக்கெண்ணையிலும் கொடுக்க அந்நோய்கள் தீரும்.

*இடுவாய் நசியந் தலைவலிக்கி*
*ஏகு மகத்திச் சார்பகரு*
*தொடுமே திரிபலை திரிகடுகு*
*தூளாம் சேற்றுமந் தான்மாவாம்*
*விடுமே மூல கெந்தகத்தை*
*விளங்கு கழஞ்சி பொடியதனிற்*
*குடுநீ கிராணி தான்திரக்*
*கொள்வாய் வாழைப் பழந்தனிலே! 356*

அகத்திச் சாற்றில் இழைத்து நசியமிட தலைவலி தீரும். கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி சேர்ந்த கலவையில் இழைத்துக் கொடுக்க சிலேத்துமம் தீரும். கெந்தகப் பொடியை 5 கி. எடுத்து அதில் இழைத்துக் கொடுக்க மூலம் தீரும். வாழைப் பழத்தில் கொடுக்க கிராணி நீங்கும்.

*அதன மான விசுழிக்கு*
*ஆகு மிளகுச் சூரணமாம்*
*விதன மான வயிற்றில்நோய்*
*விளங்கும் வெள்ளுள்ளித் தைலமதாஞ்*
*சுதன மான சீத சுரத்*
*துக்குச் சுக்கு யிஞ்சிதேன்*
*பதன மாத்திரை யாம்வியாதி*
*பறக்கும் ராம பாணமிதே! 357*

மிளகுச் சூரணத்தில் கொடுக்க கழிச்சலும், பூண்டுச் சாற்றில் கொடுக்க வயிற்றில் வரும் நோய்களும், சுக்கு, இஞ்சி, இவற்றின் சாறுகளுடன் தேனும் கலந்து கொடுக்க சீதசுரமும் தீரும்.

## இரசக் குளிகை

*இதமா மிரத மரட்டியுடன்*
*ஏகுங் கெந்தி திரிகடுகு*
*பதன மான திரிபாலை வெண்காரம்*
*பருகுந் துருசு துத்தமுடன்*
*நிதமா ரமோ தகமு ......*
*நிகண்டாய்ச் சமனாய்ப் பழச்சாற்றில்*
*மிதமா யொருநாள் தானரைத்து*
*விளங்குக் குழிக்கல் தன்னில் வையே!* 358

இரசம், கெந்தகம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், வெங்காரம், துருசு, துத்தம், ஓமம் இவற்றைச் சமமாய் எடுத்து எலுமிச்சம்பழச்சாறு விட்டு ஒரு நாள் அரைத்துக் குழிக்கல்லில் வைத்துக் கொள்க.

*வைத்த மருந்து இடையோடே*
*வளமாத் தாம்பிர பற்பமிதை*
*அத்தோ டிதையுஞ் சரிகொண்டு*
*ஆன தேசிப் பழச்சாற்றில்*
*மத்த நாளுந் தானரைத்து*
*மருவ மூன்று நாள்வெய்யி*
*லுற்ற புடத்தில் தான் வைத்து*
*உகந்த கடலை யளவுயிஞ்சி!* 359

அந்த எடைக்குத் தாம்பிர பற்பத்தைச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறுவிட்டு அடுத்த நாள் அரைத்து மூன்று நாள் வெயிலில் வைத்து எடுத்துக் கொள்க. அதனை கடலை அளவாக குளிகைகள் செய்து கொள்க.

*இஞ்சிச் சாற்றில் தானிடவே*
*இயங்கும் வியாதி கூறக்கேள்*
*வஞ்ச குன்மம் காய்ச்சலுடன்*
*மருவும் பித்தஞ் சயகாச*

*மிஞ்சு பாண்டு காமாலை*
*மிகுந்த கிராணி பஞ்சகுன்மம்*
*அஞ்சி யோடு மிதுவெல்லா*
*மலைக்கும் வியாதி பல வாய்வு!* 360

அதனை இஞ்சிச் சாற்றில் இழைத்துக் கொடுக்க குன்மம், காய்ச்சல், பித்தம், சயம், காசம், பாண்டு, காமாலை, கிராணி, ஐந்து வகைக் குன்மம் பலவகை வாய்வுகள் ஆகிய நோய்கள் தீரும்.

*வாய்வு பத்தும் பலநோவு*
*மருவும் வாதம் எண்பதுடன்*
*ஆயுங் குழலாய் தீர்ந்திடுங்காண்*
*ஆன பத்தியம் பகரக்கேள்*
*நேய பித்த மதனுக்கு*
*நெய்ப்பால் பலாவின் பிஞ்சுடனே*
*காய மெண்ணும் பூசணிக்காய்*
*கருது மெள்ளு மிவை கூட்டே!* 361

பத்து வகை வாய்வு, வாதம் எண்பது ஆகியவை தீரும். நெய், பால், பலாவினுடைய பிஞ்சு, பூசணிக்காய், எள் இவற்றைப் பித்த உடலினர் உணவில் சேர்த்துக் கொள்ளலாம்.

*கூட்டே உப்பு புளிப்பது தான்*
*குலாவும் பித்தந் தாக்காது*
*வாட்ட மில்லாச் சயரோக*
*மருவுங் கைப்பு விடத்திருந்*
*திட்டும் பசுவி நெய்கழஞ்சி*
*திடமா முருங்கை புடலங்காய்*
*ஆட்டு வத்தல் தானாகு*
*மானால் பீர்க்கங் காயாகும்!* 362

உப்பு, புளியைச் சேர்த்துக் கொள்க. பித்தம் தன்னளவினின்று கூடாது. சயநோய்க்காரர்கள் கசப்பை நீக்கி விட்டால் அந்நோய் தீரும். பசுநெய் 5கி., முருங்கைக்காய், புடலங்காய்,

ஆட்டுவற்றல், பீர்க்கங்காய் ஆகியவை உணவில் சேர்த்துக் கொள்ளலாம்.

*காயாம் பகரு வாழைக்காய்*
*காடை யுடனே மானிறைச்சி*
*ஓயா துலர்த்தி யுண்டுவிடு*
*உகந்த பிரண்டை சிறு பயிறு*
*தாயமுள் ளங்கி பசுவின்பால்*
*தாங்குங் கருணை தானாகும்*
*பாயுஞ் சம்பா வரிசியுண்ண*
*பறக்கும் வியாதி பதிவிட்டே!* 363

வாழைக்காய், உலர்ந்த காடை, மான் இறைச்சி, பிரண்டை, சிறு பயிறு, முள்ளங்கி, பசும்பால், கருணைக்கிழங்கு, சம்பா அரிசி ஆகிய உணவுப்பொருட்களைச் சேர்த்துக் கொள்ள நோய்கள் தீரும்.

## வச்சிரானந்த வயிரவன்

*விட்டே சாதிக் காய்லிங்கம்*
*விளங்கு கிராம்பு சுக்குடனே*
*காட்டு நாபி பொன்மத்தை*
*கட்டு விரையுந் திப்பிலியுந்*
*திட்ட முத்தக் காசுடனே*
*சேர ஓர்நிறை தான்கொண்டு*
*தோட்டுந் தேசி இஞ்சிச்சாற்*
*துலங்கூ மத்தை யிலைச்சாறே!* 364

சாதிக்காய், லிங்கம், கிராம்பு, சுக்கு, காட்டு நாபி, பொன்னூமத்தை, திப்பிலி, கோரைக் கிழங்கு இவற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. எலுமிச்சம் பழச்சாறு, இஞ்சிச்சாறு.

*இலைச்சா றொன்று மும்மூன்று*
*இயன்ற நாளுந் தானரைத்து*
*குலைச்ச குன்றிப் பிரமாணம்*
*கூட்டி இஞ்சிச் சாற்றிலிட*

*இயத்த மான சுரங்கள்யாவும்*
*இயங்கும் வியாதி யறுஞ்சுரமே!* 365

ஊமத்தை இலைச்சாறு ஆகியவை ஒவ்வொன்றிலும் முறையே வகைக்கு மூன்று நாளும் அரைத்து 130 மி.கி. அளவுள்ள குளிகைகளாக உருட்டிக் கொள்க. அதனை இஞ்சிச்சாற்றில் இழைத்துக் கொடுக்க சுரங்கள் தீரும்.

*சுரமதி சாரஞ் சூலையுடன்*
*சுக்கில மாகு மிந்திரியம்*
*இரவிக் குரியக்......................*
*இலுப்பை பட்டை நாற்கழஞ்சி*
*அரவுங் குழலாய் சுக்குரெண்டு*
*ஆன யிருநாழி நீருழக்காய்ப்*
*பரவுங் கசாயங் குளிகையிடப்*
*பறக்குங் கிராணி வகை நெல்லி!* 366

அதிசாரம், சூலை நீங்கும். தாது விருத்தியாகும். இலுப்பைப் பட்டை 20 கி. சுக்கு 10 கி. எடுத்து 2.6 லி. நீரூற்றி 335 மி.லி. சுருக்கிக் காய்ச்சி அதில் குளிகையை இழைத்துக் கொடுக்க கிராணி வகைகள் தீரும்.

*நெல்லி முள்ளிக் கசாயத்தில்*
*நிகழுந் தயிரு மதனாலும்*
*வல்லதி சார சுரத்துக்கு*
*மருவுங் குளிகை தானிடவே*
*நல்ல கசாயம் நாம்சொன்னோம்*
*நயந்த வியாதிக் கனுபானம்*
*எல்லாந் தீரும் வச்சிரமா*
*மேகு மானந்த வயிரவனே!* 367

நெல்லி முள்ளியைக் குடிநீராக்கி அதனுடன் தயிர் சேர்த்து அதில் குளிகையை இழைத்துக் கொடுக்க அதிசார சுரம் தீரும். மேற்குறிப்பிட்ட படி ஆனந்த வயிரவமாத்திரையைத் தக்க அனுபானங்களில் வழங்க நோய் தீர்ந்து உடல் வைரமாகும்.

## நவக்கிரகம்

*வயிர மான வெங்காரம்*
*வளரும் நாபி ரசமிளகு*
*கயறாஞ் சுக்கு திப்பிலியுங்*
*கனத்த லோக செந்தூரம்*
*பயிரா மத்த விரையுடனே*
*பாங்கா யாண்டு பங்குமிட்டு*
*உயருங் கெந்தக மொருபங்கு*
*ஊமத்தஞ் சாற்றி லரைகுன்றி* 368

வெங்காரம், நாபி, இரசம், மிளகு, சுக்கு, திப்பிலி, இரும்பு செந்தூரம், ஊமத்தவிதை இவற்றைச் சமஅளவெடுத்துக் கொள்க. கெந்தகம் ஒரு பங்கு எடுத்து ஊமத்தஞ்சாற்றில் அரைக்கவும்.

*குன்றி போல உருண்டையது*
*கொம்புத் தேனில் நயனமிட*
*நன்றாஞ் சுவாச காசமுடன்*
*நயந்த மந்தார சேற்றுமமும்*
*என்றே வரிய பயித்தியமு*
*இயன்ற வாத மதுவெல்லாஞ்*
*சென்றதி சாரக் கிராணியுடன்*
*தீர்க்குங் குளிகை நவக்கிரகம்!* 369

அரைத்த விழுதை 130 மி.கி. அளவாக உருண்டை செய்து கொள்க. அதனைக் கொம்புத் தேனில் இழைத்துக் கலிக்கமிட சுவாச காசம், மந்தார சிலேத்துமம், பித்தம், வாதம், அதிசாரக்கிராணி ஆகிய நோய்கள் தீரும்.

## சுதாராட்சதக் குளிகை

*கிரதாம் பூர மெட்டுடனே*
*கெந்தி ரெண்டு ரசமொன்று*
*துரக மனோசிலை மூன்றாகுஞ்*
*சொல்லரி தாரம் நாலாகும்*

*விரகம் நாபி ரண்டுடனே*
*மேவி யதனை நிறைகொண்டு*
*உரகங் கையான் சாறாகு*
*மோங்கு நொச்சிச் சாறதனால்! 370*

பூரம் எட்டுபங்கு, கெந்தகம் இரண்டு பங்கு, இரசம் ஒரு பங்கு, மனோசிலை மூன்று பங்கு, அரிதாரம் நான்கு பங்கு, நாபி இரண்டு பங்கு எடுத்துக் கொள்க. கையாந்தகரைச்சாறு, நொச்சிச்சாறு எடுக்க.

*நாலு நாளாய்த் தானரைக்க*
*நன்றாய்க் குன்றிப் பிரமாணம்*
*மேலுந் திரிகடுகு பொடியுடனே*
*விளங்குந் தேனில் தானிடவே*
*பாலர் மகோதரம் பஞ்சசயம்*
*பருத்த கவிசை பஞ்சகுன்ம*
*மாலம் பாதம் போற்றிலினை*
*மாறுஞ் சுதாராட் சதக் குளிகை! 371*

மேற்குறிப்பிட்ட சாற்றால் நான்கு நாள் அரைத்து 130 மி.கி. அளவாக உருட்டி திரிகடுகுப்பொடியையும் சேர்த்து தேன் கலந்து கொடுக்க குழந்தைகளின் மகோதரம், ஐந்து வகைச் சயங்கள், கவிசை, ஐந்துவகைக் குன்மம் ஆகிய நோய்கள் தீரும்.

## எழு குளிகை

*குளிகை இரதங் கெந்தகமுங்*
*கூட்டு மிருவி வெண்காரம்*
*அளவாம் நாபி அரிதார*
*மான திரிபலை திரிகடுகு*
*புளகந் துத்தம் பெருங்காயம்*
*போற்றும் விடையஞ் சாதிக்காய்*
*தளமாங் கிராம்பு எட்டுவிரை*
*தாக்குங் காரம் நவச்சாரம்! 372*

இரசம், கெந்தகம், இருவி, வெண்காரம், (குறிப்பிட்ட அளவு) நாபி, அரிதாரம், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, துத்தம், பெருங்காயம், அதிவிடையம், சாதிக்காய், கிராம்பு இவை எட்டு பங்கு.

*சாரந் துருசு வாளமுடன்*
*சமனா மிதனைச் சரிகொண்டு*
*சோர யிடித்துத் தூளாக்கித்*
*துலங்கச் சீலை வடிகொண்டு*
*தீரகத் தாளஞ் சாறொருநாள்*
*திகைக்கக் கைய்யான் நாள்பத்து*
*மீறப் பழுத்த மிளகளவாய்*
*மேவி யதனை நிழலுலத்தே!* 373

படிகாரம், நவச்சாரம், துரிசு, நேர்வாளம் இவற்றையும் வகைக்குச் சமமாய் எடுத்துப் பொடித்துச் சீலையில் வடிகட்டி பத்திரப்படுத்திக் கொள்க. அதனைக் கற்றாழைச் சாற்றில் ஒரு நாளும் கையாந்தகரைச் சாற்றில் பத்துநாட்களும் அரைத்து மிளகளவாய் உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க.

*உலத்துங் குளிகை ஓமப்பொடி*
*உடனாஞ் சீதக் கழிச்சலுக்குக்*
*குலத்து னாபி புசித்தாக்கால்*
*கொள்ளே ஆமணக் கெண்ணைதனில்*
*நிலத்துச் சற்பம் வேப்பெண்ணெய்*
*நின்ற வாய்வுக் கிஞ்சிரசம்*
*பிலத்த சொறியுஞ் சிரங்குக்குப்*
*பின்னும் பசுவி னெய்யேழே!* 374

குளிகையை ஓமப்பொடியுடன் சேர்த்துக் கொடுக்க சீதக் கழிச்சலும், ஆமணக்கெண்ணெயில் இழைத்துக் கொடுக்க கொப்பூழ் வலியும், வேப்பெண்ணெயில் கொடுக்க நிலத்தில் வாழும் பாம்புக் கடியும், இஞ்சிச் சாற்றில் இழைத்துக் கொடுக்க வாய்வும், பசுவின் நெய்யில் ஏழு நாட்கள் கொள்ள சொறி சிரங்கு நீங்கும்.

*ஏழு நாள்கொள் சொறிபரங்கி*
*ஈழை கய்யான் தகரைச்சார்*
*வாழும் பிரமிய மெட்டுக்கு*
*வளருங் குறிஞ்சா இலைச்சாற்றில்*
*தாழும் பித்தஞ் சீனிதனில்*
*தாக்கப் போகு மதுவெல்லாம்*
*மீளு மேக மனைத்தினுக்கும்*
*வெண்ணை ஆவின் பால் தயிரே!* 375

கையாந்தகரைச் சாற்றில் கொடுக்க ஈளையும் குறிஞ்சா இலைச்சாற்றில் கொடுக்க எட்டுவகை பிரமியமும், சீனியில் கொடுக்க பித்தமும்,வெண்ணெய், பசும்பால், தயிரில் கொடுக்க அனைத்து வகை மேகமும் தீரும்.

*தயிர்மோ ராகும் பசுவின் மோர்*
*தங்காப் பித்தம் வெல்லமுடன்*
*ஆயிரா மேழு னாள்கொள்ள*
*ஆகாதிருமல் கீழ்நெல்லி*
*முயிராம் சிரணம் பெருங்காய*
*முற்றம் வசுவாசி வசம்புடனே*
*துயிராம் பாண்டு காக்கணம்வேர்*
*துலங்கக் குடிக்கச் சுகமாமே!* 376

பசுந்தயிர், பசுமோர், வெல்லம் ஆகியவற்றில் இழைத்து ஏழு நாட்கள் குளிகையைக் கொடுக்க பித்தமும் கீழாநெல்லியில் கொடுக்க இருமலும் பெருங்காயத்தில் கொடுக்க செரியாமையும் சாதிபத்திரி, வசம்பில் கொடுக்க பாண்டுவும் குணமாகும். காக்கணம் வேரைக் குடிநீராக்கிக் கொடுக்க சுகமுண்டாகும்.

*சுகமா மூத்திரக் கிருட்சிக்கித்*
*துலங்குங் கொடிய மொருமூசுந்*
*தகமா மருந்து அரையாண்டு*
*சயமுங் குன்மந் தான் தீரும்*
*அகமாம் பித்தந் தான்கழிய*
*ஆமணக் கெண்ணை யதில்திரும்*

*பகமா மந்தாக் கினிக்குப்*
*பகருங் கடுக்கா யிளநீரே!* 377

மூத்திரக் கிரிச்சரம், சயம், குன்மம் ஆகியவற்றிற்கு ஆறுமாதம் மருந்து கொடுக்க குணமாகும். பித்தத்திற்கு ஆமணக்கெண்ணெயிலும், மந்தாக்கினிக்கு கடுக்காய், இளநீர் இவற்றில் இழைத்துக் கொடுக்க குணமாகும்.

*நீராஞ் சறுவ விஷம்போகத்*
*நிட்சய மாவி னெய்யாகும்*
*பாராய் கண்ட சொறிசிரங்கு*
*பகரு மாவின் பாலாகுந்*
*தீராய் பித்தங் கற்பூரஞ்*
*சேருங் காச சுவாசத்துக்கு*
*கூறாய் திப்பிலிப் பொடியாகுங்*
*கொள்ளு உட்டிணஞ் செண்பகச்சார்!* 378

பசுநெய்யில் கொடுக்க அனைத்து வகை விடமும் பசும்பாலில் இழைத்துக் கொடுக்க சொறி சிரங்கும் கற்பூரத்தில் கொடுக்க பித்தமும், திப்பிலிப் பொடியில் உரைத்துக் கொடுக்க சுவாசகாசமும், செண்பகச் சாற்றில் கொடுக்க உட்டிணமும் நீங்கும்.

*சாந்த வசூரி வருமுன்*
*தாக்குங் குளிகை தேனிலிட*
*வாந்த பலபல வியாதிகட்கு*
*வையே வெற்றிலைச் சார்தனில்*
*போந்த தலையின் வலிதனக்குப்*
*புகட்டு மணத்தக் காளிச்சார்*
*சேந்த சூலை தான்போகந்*
*தேடும் ஆவி னெய்யாமே!* 379

வைசூரிக்குத் தேனிலும், பல நோய்களுக்கு வெற்றிலைச் சாற்றிலும், தலைவலிக்கு மணத்தக்காளிச் சாற்றிலும், சூலைக்குப் பசு நெய்யிலும் குளிகையை இழைத்துக் கொடுக்கத் தீரும்.

*ஆமே குன்ம மிந்துப்பு*
*ஆகா வாய்வு வாதசன்னி*
*போமே ஊமத் திலைச்சாறு*
*பொல்லா விஷம்போம் நறுந்தாளி*
*தாமே பிரமிய மாவின்பால்*
*தாங்குங் கண்ணோ யதுவாகுங்*
*காமே மூல வியாதிபோங்*
*காண பிரண்டைப் பொடியிடவே!* 380

இந்துப்புவுடன் சேர்த்துக் கொடுக்க குன்மமும் ஊமத்தம் இலைச் சாற்றில் இழைத்துக் கொடுக்க வாய்வும், வாத சன்னியும், நறுந்தாளியில் கொடுக்க விடமும் பசும்பாலில் கலந்தளிக்க பிரமியமும் பிரண்டைப் பொடியில் கலந்து கொடுக்க மூல நோயும் குணமாகும்.

*இடவே கக்கிச கிராணிபோ*
*மேகுஞ் சோற்றில் தானிடவே*
*தொடுமே வாய்வு முசல்காதிலை*
*துலங்கும் வாய்வு பலமனைத்தும்*
*விடுமே நொச்சிச் சாற்றிலிட*
*விளங்கு மந்திர வாய்வுபோம்*
*கடுகு தீபன மசமோதங்*
*களறு முள்ளங்கி வாய்நாற்றம்!* 381

சோற்றில் இழைத்துக் கொடுக்க கிராணியும், முயற்காதிலை சாற்றில் கொடுக்க வாய்வுகளும், நொச்சிச் சாற்றில் இழைத்துக் கொடுக்க அந்தர வாய்வும் நீங்கும். அசமோதகத்துடன் கலந்து கொடுக்க பசியுண்டாகும். முள்ளங்கிச் சாற்றில் கொடுக்க வாய் நாற்றம் நீங்கும்.

*நாத்த மிரும லீளைபோம்*
*நன்றாய்ச் சாத்திர பேதியினில்*
*கூத்த னுதிரந் தான்சாய்த்தால்*
*சொல்லுஞ் சன்னி பசுவின்நெய்*

*ஏற்ற மான வாய்வுக்கு*
*ஏகுஞ் சயத்தின் வாய்வுக்கு*
*நீத்தஞ் சிறுகீரைச் சாற்றருந்த*
*நீயனுப் பான மானதுகேள்!* 382

சாத்திர பேதியுடன் சேர்த்துக் கொடுக்க வாய் நாற்றம், இருமல், ஈளையகலும். வாய்வு, சயவாய்வு இவற்றிற்குச் சிறுகீரைச் சாற்றில் கொடுக்க குணமாகும்.

*ஆன ஆவின் பால்நெய்யா*
*மாகாப் புளிப்பு கைப்புவிடு*
*போன சுவாச காசமுடன்*
*பொருந்துங் கரந்தைச் சாறாகு*
*மேனம் பரங்கி கால்பிடிப்பு*
*எடுக்குந் துரலைப் பெரும்பாடு*
*தானா மாவின் சாணாகம்*
*சந்தனந் தீருந் தானாகும்!* 383

பசும்பால், நெய் ஆகியவற்றைத் துணை மருந்தாகக் கொண்டு புளிப்பு, கைப்பை நீக்கி விடுக. சுவாச காசத்திற்குக் கரந்தைச் சாற்றில் கொடுக்கவும். பரங்கி நோயின் கால் பிடிப்புக்குப் பசுவின் கோமியத்திலும் பெரும்பாட்டிற்குச் சந்தனத்திலும் கொடுக்க குணமாகும்.

*ஆகஞ் சருவ வியாதிகட்கு*
*ஆன பசுவின் நெய்யதனில்*
*போகுங் கொத்து மல்லியுடன்*
*பொருந்து மாங்காய் கூட்டியுண்ணு*
*வேகஞ் செண்பகப் பட்டைச்சார்*
*விளங்கு ரத்தப் பிரமியம்போம்*
*தாகம் பார்வைக் குறைதீர்ந்தால்*
*தாக்கு யெள்ளுந் தோல்போக்கி!* 384

பசு நெய்யுடன் கொத்துமல்லி, மாங்காய், சேர்த்து உண்பது அனைத்து நோயாளிகளுக்கும் ஆகும். செண்பகப்பட்டைச்

சாற்றில் குளிகையை உரைத்துக் கொடுக்க இரத்த பிரமியமும் தோல் நீக்கிய எள்ளில் கொடுக்க தாகம், பார்வை குறைவும் குணமாகும்.

*போக்குங் காதில் சீழ்வடிந்தால்*
*புகட்டுஞ் சிறுநீர் குளிகையுடன்*
*தாக்குங் கண்ணில் படலத்துக்குத்*
*தாங்காக் கதலிச் சாற்றிலெங்குங்*
*ஏற்கும் வைசூரி தான்வந்தால்*
*ஏகுந் திரிபலைச் சாற்றிலிட*
*ஆர்க்குங் குளிகை அனைத்தினுக்கு*
*மடவா மெளுவாம் குளிகையிதே!* 385

சிறுநீரில் இழைத்துக் கொடுக்க காதில் சீழ்வடிதலும், வாழைச் சாற்றில் இழைத்துக் கொடுக்க கண்படலமும், திரிபலைச் சாற்றில் கொடுக்க வைசூரியும் குணமாகும். எழுகுளிகையான இது தக்க அனுபானங்களில் கொடுக்க பல நோய்கள் தீரும்.

## பலநோய் தீர்க்கும் குளிகை

*இதுவாம் லிங்கம் வெண்கார*
*மேகுங் கெந்தி நாபியுடன்*
*அதுவே திரிபலை திரிகடுகு*
*ஆகப் பதின்கழஞ் சடவாகப்*
*பொதுவாந் தாரும் பதின்கழஞ்சி*
*புகளும் வாளம் பதின்கழஞ்சி*
*மெதுவா மருந்து பனிரண்டும்*
*விளங்குங் கழஞ்சி முப்பதுவே!* 386

இலிங்கம், வெண்காரம், கெந்தகம், நாபி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றை வகைக்கு 50 கி. எடுக்க. தேவதாரம் 50 கி.,நேர்வாளத்தை 50கி. எடுக்க. ஆக மொத்தம் 12 சரக்குகளாம்.

*முப்பது கழஞ்சி யடவாக*
*முருக்கிலை புரசனிலைச் சாற்றால்*
*தப்பா தோரொரு நால்சாமம்*
*தானே அஞ்சுநா ளரைத்து*
*மிப்பார் புகழு மிளகளவாய்*
*மீறுங் குளிகை நிழலுலர்த்தி*
*ஒப்பாம் வியாதிக் கனுபானம்*
*உரைப்போ மிஞ்சிச் சாற்றிலிடே!* 387

மேற்சொன்ன மருந்துப் பொருட்கள் அனைத்தையும் சேர்த்து கல்யாண முருக்கிலை, புரச இலை இவற்றின் சாற்றினால் தனித்தனியாகப் பனிரெண்டு மணி நேரமரைத்துக் கொள்க. இவ்வாறே ஐந்து நாள் அரைத்து மிளகளவாய் உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்க. தக்க அனுபானங்களில் கொடுக்க பல நோய்கள் நீங்கும்.

*இஞ்சிச் சாற்றில் சீதசுர*
*மியன்ற தாபசுரம் பசும்பால்*
*மிஞ்சு வெள்ளுள்ளி தைலத்தில்*
*மேவும் பழஞ்சுர மதுக்காகும்*
*வஞ்ச சயத்துக் காய்ச்சலுக்கு*
*மகிழுஞ் சுக்கு விடையம்நீர்*
*அஞ்சா விஷபாக சுரத்துக்கு*
*ஆகு முலைப்பால் சர்க்கரையே!* 388

சீத சுரத்திற்கு இஞ்சிச்சாற்றில் கொடுக்கவும். தாப சுரத்திற்குப் பசும்பாலிலும், பழஞ்சுரத்திற்கு வெள்ளுள்ளித் தைலத்திலும் சயக்காய்ச்சலுக்குச் சுக்கு, அதிவிடையக் குடிநீரிலும், விடபாக சுரத்திற்குத் தாய்ப்பால், சர்க்கரையிலும் கொடுக்க குணமாகும்.

*சர்க்கரை பசும்பால் காமாலை*
*தானே பாம்பு கடித்தாக்கால்*
*மிக்க தேசி பழச்சாற்றில்*
*விரைய உரைத்துக் கலிக்கமிடு*

*தக்க திரிபுரச் சாற்றரைத்துத்*
*தானே தேள்கொட்டு வாயிலிடு*
*ஒக்குமாம் பட்டைச் சாற்றிலிட*
*ஒருக்குங் கிராணி யதுகொள்ளே!* 389

குளிகையைச் சர்க்கரை, பசும்பால் சேர்த்துக் கொடுக்க காமாலை குணமாகும். பாம்புக்கடிக்கு எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்துக் கண்ணிற்குக் கலிக்கமிட விடம் நீங்கும். தேள் கடிக்கு அதன் கடி வாயில் சிவனார்வேம்புச்சாற்றில் அரைத்துப் பூச விடம் போகும். மாம்பட்டைச் சாற்றில் கொடுக்க கிராணி நீங்கும்.

*கொள்ளுத் தண்ணி தானிடவே*
*கூசா தோடும் வாதமெல்லா*
*மெல்ல பத்தியம் பால்சோறு*
*மிளகு நீரு தானாகும்*
*உள்ள வாத காச்சலுக்கு*
*உகந்த கஞ்சி தானாகும்*
*கொள்ளுங் கிராணி தயிருடனே*
*கொண்டே சோறும் வெந்நீராம்!* 390

வாதத்திற்குக் கொள்ளுத் தண்ணீரில் குளிகையை இழைத்துக் கொடுக்க நலம். பால்சோறு, மிளகுநீர் இவை பத்தியமாகக் கொள்ளத் தக்கன. வாதக் காய்ச்சலுக்குக் கஞ்சி தான் உகந்த உணவாகும். கிராணிக்குத் தயிர்ச்சோறும் வெந்நீருமாம்.

*வெந்நீர் நீக்கி சாதிக்காய்*
*விளங்க நறுக்கித் தான்வெதுப்பித்*
*திண்ணீர் பொடியைத் தேன்கலந்து*
*தீய்க்கும் வயிற்றில் நோயறுமே*
*பின்னீர் வெள்ளைக் கழிச்சலுக்குப்*
*பெருத்த கழற்சிப் பொடியுடனே*
*மன்னீர் வெண்ணை தான்கலந்து*
*மதித்துத் தின்ன மாறிடுமே!* 391

சாதிக்காயை நறுக்கி வெதுப்பிப் பொடியாக்கித் தேனில் கலந்து கொடுக்க வயிற்றிலுள்ள நோய்கள் நீங்கும். கழற்சிக் காயைப் பொடித்து வெண்ணெயில் கலந்து கொடுக்க வெள்ளைக் கழிச்சல் தீரும்.

*மாறுங் கறுத்த சீரகத்தை*
*வாகாகக் கசாயந் தேன்கூட்டிக்*
*கூறாய் ரத்தக் கிராணிக்கு*
*கொடுக்க நோயது தான்தீரும்*
*ஏறுந் தாப சுரத்துக்கு*
*இருகீழ் நெல்லிச் சாறதனில்*
*மாறும் நாலா முறைக்காச்சல்*
*வையே கைய்யான் தகரைச்சார்!* 392

கருஞ் சீரகத்தைக் குடிநீராக்கி அதனுடன் தேன் சேர்த்துக் கொடுக்க இரத்தக் கிராணி தீரும். கீழாநெல்லிச் சாற்றில் கொடுக்க தாப சுரமும், கையாந்தகரைச் சாற்றில் கொடுக்க நான்காமுறைக் காய்ச்சலும் தீரும்.

*சாராங் கரச சாறதனில்*
*தாக்க அசிரணந் தான்போகும்*
*பாராய் தயிர்வடி தண்ணீரில்*
*பருத்த வயிற்றுக் கழிச்சல்போம்*
*தீராச் செவ்வட்டைக் கடிதனக்குத்*
*தேசிப் பழச்சார் மேல்பூச்சு*
*நேராங் கத்தாழஞ் சாறதனில்*
*நெகிழப் பூசி உள்மிழுங்கு!* 393

செரியாமைக்கு இளநீரிலும், வயிறு பருத்து அதனா லுண்டான கழிச்சலுக்குத் தயிர்த் தெளி தண்ணீரிலும், குளிகையை உரைத்துக் கொடுக்க குணமாகும். செவ்வட்டையின் கடிக்கு எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்து மேல்பூச வேண்டும். கற்றாழைச் சாற்றில் இழைத்து உள்ளுக்குக் கொடுத்து மேலுக்குப் பூச வேண்டும்.

*முழங்கு மூத்திர கிரிட்சிமஞ்சள்*
*முனிந்த சாற்றில் வெண்காரம்*
*பிளங்கப் பொரித்துக் குளிகையுடன்*
*பேணி யுண்ண வதுதீரும்*
*களங்க மான இருமலறுங்*
*காட்டுத் துளசிச் சாற்றிலிட*
*விளங்கு பித்த மதுதனக்கு*
*மீறு மத்தைச் சார்நசியம்!* 394

மஞ்சள் சாற்றில் வெண்காரத்தைப் பொரித்து அதில் குளிகையை இழைத்துக் கொடுக்க மூத்திரக் கிரிச்சரம் நீங்கும். காட்டுத்துளசிச் சாற்றிலிட இருமல் தீரும். ஊமத்தஞ் சாற்றில் இழைத்து நசியமிட பித்தம் தீரும்.

*நசியம் பண்ண வெறிபித்தம்*
*நன்றா யூமத்தை இலைச் சாற்றில்*
*இசைய வெள்ளாட்டுப் பாலதனில்*
*இட்டுமோர் குளிகை தலைதனக்கு*
*அசையாய் வெள்ளாட்டுப் பாலரைத்து*
*அதுவுந் தலையில் தப்பிடவே*
*நிசமாம் பிரமிக் கிஷாயத்தில்*
*நிச்சயம் பித்தந் தீர்ந்திடுமே!* 395

ஊமத்தம் இலைச்சாற்றில் நசியமிட வெறிபித்தம் நீங்கும். வெள்ளாட்டுப் பாலில் மேற்சொன்ன குளிகையை இழைத்துக் கொடுக்கவும். வெள்ளாட்டுப் பாலினை அரைத்துத் தலையில் அப்பிவிட வேண்டும். பிரமிக் குடிநீரில் கொடுக்க பித்தம் தீரும்.

*தீர்ந்திடும் வேப்பிலைச் சாறதனால்*
*தெளியுங் குட்ட மனைத்தினுக்கு*
*மாய்ந்திடு மெருக்கம் பாலதனா*
*லான சிலை தானூட்டி*
*வார்ந்த குளிகை தானுரைத்து*
*மடித்துத் திரியுந் தானுருட்டிப்*

*போந்த நெருப்பில் தான்கொளுத்திப்*
*புகையை நாசி தனிலேற்று!* 396

வேப்பிலைச் சாற்றில் கொடுக்க குட்டம் அனைத்தும் தீரும். எருக்கம்பாலைச் சீலையில் நனைத்துக் கொள்க. மேற்சொன்ன குளிகையை உரைத்து அத்திரியிலேயே ஊற்றிக் கொள்க. திரியை நன்கு காயவைத்து கொளுத்திப் புகையை நாசியில் ஏற்றிக் கொள்ள தலைவலி நீங்கும்.

*ஏற்றியதோர் புகையதனை நாசிக் கேற்ற*
*எழுந்தோடுந் தலைநோவு எங்கே என்று*
*கோத்திடுமே கோவையிலைச் சாற்றினாலே*
*கூறுபடக் கஞ்சனா னோவு தீரும்*
..................................................
..................................................
*போத்தியதோர் மருந்திட்டுப் போக உண்ணு*
*மறக்காம லின்னமொரு மருந்து கேளே!* 397

திரியை நன்கு காயவைத்து கொளுத்திப் புகையை நாசியில் ஏற்றிக் கொள்ள தலைவலி நீங்கும். கோவையிலைச் சாற்றில் குளிகையை இழைத்துக் கொடுக்க நாக்கு வலி தீரும்.

*கேளு திப்பிலி தேனுடனே*
*கேட்கும்விக்கல் சர்த்திபல*
*வாழுந் தேளு கொட்டினாக்கால்*
*மதித்து இஞ்சி கண்ணிலிடு*
*தாளு மகோதரங் கண்ணிலிடு*
*சிறுநீரில் தாக்கு மணத்தக்காளிச்சார்*
*ஆளும் பூர நட்டுவாக்காலி*
*அதுவு மிஞ்சிச் சார்நசியம்!* 398

திப்பிலியைத் தேனுடன் சேர்த்து, குளிகையை இழைத்துக் கொடுக்க விக்கல், வாந்தி தீரும். இஞ்சிச் சாற்றில் இழைத்துக் கண்ணிலிட்டால் தேள் கடித்த விடம் தீரும். மணித்தக்காளிச் சாற்றையும் சிறுநீரையும் கலந்து குளிகையை இழைத்துக்

கண்ணிலிட மகோதரம் தீரும். இஞ்சிச் சாற்றில் இழைத்து நசியமிட நட்டுவக்காலி கடி தீரும். இஞ்சி, மணித்தக்காளி சாறு கண்ணிலிட இயலுமா என்பது ஐயமே.

*நசிய மகோதரம் மணத்தக்காளி*
*நாட்டி வயற்றில் பூசவிடும்*
*வசையாங் கண்ணோய் தேசிப்பழம்*
*மனுடர் முலைப்பால் அஞ்சனமாம்*
*அசையா திருமல் பலதிரும்*
*ஆன கொள்ளுத் திரிபலையும்*
*பிசகொன் றில்லாச் சூரணத்தில்*
*பேணிக் குளிகை பொடித்துண்ணே!* 399

மகோதரத்திற்கு மணித்தக்காளிச் சாற்றில் இழைத்து வயிற்றில் பூசவும். கண்ணோய்க்கு எலுமிச்சம்பழ சாற்றையும், தாய்ப்பாலையும் சேர்த்துக் கண்மையிடவும். கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றின் சூரணத்தில் குளிகையைக் கலந்துண்ண இருமல் போன்ற நோய்கள் குணமடையும்.

*உண்ணும் வாய்வு மணலிச் சார்*
*உரைத்துக் குளிகை தானு*
*முண்ண வாய்வு உடன் தீரும்*
*தெளியாங் குன்மம் பலவுக்கு*
*நண்ணும் நொச்சிச் சாற்றிலிடு*
*நாட்டுங் கண்ணில் சூட்டுக்கு*
*யெண்ணு மெள்ளிலைச் சாற்றிலிட*
*யேகுஞ் சூதான் கரையும்!* 400

வாய்வுக்கு மணலி எனும் நாய்ப்பீளைச் சாற்றிலும் குன்மத்திற்கு நொச்சிச் சாற்றிலும், கண்ணில் உள்ள சூட்டிற்கு எள்ளிலைச் சாற்றிலும் இழைத்துக் கொடுக்க குணமாகும்.

*கரைக்கு அமுக்கிரா சூரணத்தில்*
*கலந்து குளிகை வெந்நீரும்*
*உரைத்துக் குடிக்க சந்துநோ*
*யுடனே வாதம் பலதீரும்*

*திரைக்கும் வயிற்று வாய்வுக்குத்*
*தீரும் வீழி இலைச் சாற்றில்*
*குறித்துச் சொன்னோம் பலதீருங்*
*குணமா மின்னம் திரிபலையே!* 401

அமுக்கிராச் சூரணத்தில் வெந்நீரைக் கலந்து அதில் குளிகையை உரைத்துக் கொடுக்க சந்துவலி, வாதம் இவை தீரும். வீழி இலைச் சாற்றில் கொடுக்க வயிற்று வாய்வு தீரும்.

*திரிபலைச் சூரணம் வெந்நீரும்*
*திறக்க அய்ந்து யிடையிட*
*குறியா முப்புச் சந்தனம்*
*போகுங் கொண்டால் தாதுவிர்த்தி*
*நிறையாம் தழுதாழை வெண்குன்றி*
*நிச்சயம் சாற்றில் தானிடவே*
*குறியாம் சயரோகம் ரோகந்தனக்கு*
*கொண்டே பொசிக்கத் தீந்திடுமே!* 402

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் சேர்ந்த சூரணத்தில் வெந்நீரைக் கலந்து அதில் கொள்ள பலவகை நோய்கள் தீரும். உப்பு, சந்தனம் சேர்த்து அதில் குளிகையைக் கொள்ள தாதுவிருத்தியாகும். தழுதாழையை வெண்குன்றிச் சாற்றில், வெள்ளைப்பூண்டுச் சாற்றில் கலந்து குளிகையை இழைத்துக் கொடுக்க காசநோய் தீரும்.

*தீந்திடு ஒமம் வெந்நீரு*
*தெளியுங் காசுக் கட்டியுடன்*
*பாந்த மாகக் கலக்கியுண்ணப்*
*பறக்குஞ் சயம்காசம் நோயெல்லாம்*
*வாந்திடு வயற்று நோவுக்கு*
*மகிழும் ஆவின் தயிரிலிட*
*ஏந்துங் கிராணிக் காவின் மோர்*
*இயன்ற விரேசனம் விளக்கெண்ணை!* 403

ஓமத்தெளிநீருடன் காசுக் கட்டியைச் சேர்த்து, அதில் குளிகையை இழைத்துக் கொடுக்க சயம், காசம் தீரும். பசுந்தயிரில் கொள்ள வாந்தியுடன் கூடிய வயிற்று நோயும், பசுமோரில் கொள்ள கிராணியும் நீங்கும். விளக்கெண்ணெயில் கொள்ள கழிச்சல் ஆகும்.

..................................................................

..................................................................

*நண்ணும் பிரமியம் வெள்ளாட்டுப் பால்*
*நாட்டு முடம்பு யெரிவுக்கு*
*உண்ணும் பச்சை கள்நீரில்*
*உகந்து குடிக்கத் தான்தீருந்*
*திண்ணம் நரைமா றுதற்குத்*
*தீரும் ஆட்டுப் பாலாகும்!* 404

பிரமேகத்திற்கு வெள்ளாட்டுப் பாலிலும், உடல் எரிவுக்குக் கழுநீரிலும், நரைக்கு ஆட்டுப்பாலிலும் உரைத்துக் கொடுக்க குணமாகும்.

*ஆகுங் கல்சுண்ணம் தேசிப்பழம்*
*அலையும் பல்லுத் தானிறுகும்*
*போகுஞ் சன்னி ஊமத்திலைச்சார்*
*புகட்டுந் தீய்ப்பட்ட புண்ணுக்கு*
*ஏகும் வெல்லத் துடன் கொள்ள*
*இதமாம் வல்லாரைச் சாறதனால்*
*வாகு பெறவே அனுபானம்*
*மருவிக் குடிக்கத் தீர்ந்திடுமே!* 405

கல்சுண்ணத்தை எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்து அதில் குளிகையை இழைத்துக் கொடுக்க பல் இறுகும். ஊமத்தை இலைச் சாற்றில் குளிகையைக் கொடுக்க சன்னி தீரும். தீப்புண்ணிற்கு வெல்லத்துடன் சேர்த்துக் கொடுக்கலாம். வல்லாரைச் சாற்றில் இழைத்துக் கொடுத்தாலும் தீப்புண் ஆறும்.

### சுரக் குளிகை

*திருஞ் சூதம் ரோகணியுஞ்*
*சிலையோ ரிடையும் ஒன்றாக*
*வாருந் தாண்டி திரிகடுகு*
*வகைக்கி ரண்டு இடையாகுஞ்*
*சேரும் வாளஞ் சுத்தியிடை*
*சேத்து மூணு கழஞ்சாகப்*
*பாரும் பாகலிலைச் சாற்றால்*
*பருத்தி விரைபோல் தானுருட்டே!* 406

இரசம், கடுகுரோகணி, மனோசிலை இவற்றைச் சமமாய் எடுத்துக் கொள்க. சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றை வகைக்கு இரண்டு பங்காக எடுத்துக் கொள்க. சுத்திசெய்த நேர்வாளத்தை 15 கி., அளவாக எடுத்துக் கொள்க. அனைத்தையும் பாகல் இலைச்சாறு விட்டரைத்து பருத்தி விதைபோல் உருட்டிக் கொள்க.

*உருட்டுங் குளிகை சீதசுர*
*மோங்கு மிஞ்சிச் சாற்றிலிடத்*
*திருட்டுப் பித்தந் தீருதற்குத்*
*தெளிவாந் தேசிப் பழச்சாற்றில்*
*விரட்டும் வாதந் தான்போக*
*வெண்ணொச்சிச் சாற்றி லிடவாகும்*
*பிரட்டுக் குன்ம மாவின்பால்*
*பேசா தோடும் வாய்வெல்லாம்!* 407

இக்குளிகையை இஞ்சிச் சாற்றில் கொடுக்க சீதசுரமும், எலுமிச்சம் பழச்சாற்றில் கொடுக்க பித்தமும், வெண்ணொச்சிச் சாற்றில் கொடுக்க வாதமும், பசும்பாலில் கொடுக்க குன்மமும் தீரும்.

### சனிக் குளிகை

*எல்லாந் திரும் லிங்கமுடன்*
*ஏகும் நாபி வெண்காரம்*
*நல்ல திப்பிலி எவட்சாரம்*
*நாட்டு மிளகு காந்தங்கெந்தி*

*சொல்லு நிமிளை சரிசமனாய்*
*துலங்க இஞ்சிச் சாற்றரைத்து*
*மெல்லக் குன்றிப் பிரமாணம்*
*விளங்கு மிஞ்சி மருவறுமே!* 408

இலிங்கம், நாபி, வெண்காரம், திப்பிலி, எவட்சாரம், மிளகு, காந்தம், கெந்தகம், நிமிளை இவற்றைச் சமமாய் எடுத்து இஞ்சிச்சாறு சேர்த்தரைத்து 130 மி.கி. அளவுள்ள குளிகைகளாய்ச் செய்து கொள்க. அதனை இஞ்சிச்சாற்றில் கொடுக்க மரு நீங்கும்.

## கஸ்தூரி மாத்திரை

*அரும்கஸ் தூரி பணவிடை*
*அஞ்சாகும் ரோசனை பணமரையும்*
*பெறுமே கிராம்பு அரைப்பணமும்*
*பின்னுங் குங்கும மப்படியே*
*இறுகஞ் சாதி பத்திரியு*
*மிதுவும் பணவிடை அரையாகும்*
*குறுகுங் *காட்டு மிறுகரத்தங்*
*குறையா தந்த யிடை சேரே!* 409

கஸ்தூரி 2.5 கி., கோரோசனை, 244 மி.கி., கிராம்பு, குங்குமப்பூ வகைக்கு 244 மி.கி., சாதிபத்திரி, முசுமுசுக்கைச் சாறு வகைக்கு 244 கி. எடுத்துக் கொள்க.

*சேருநீ வெள்ளருகு செருப்படிச் சார் கூட்டித்*
*தேடுநீ மேனியின்சா றாடுதின்னாப் பாளை*
*வாருநீ பொடுதலையுங் கருசாலங் கண்ணி*
*வகையான கரந்தைகொட்டான் சாறு கூட்டிப்*
*பேரான யேழுவகைச் சாறுஞ் கூட்டிப்*
*பிசகாம லரைத்திடுவாய் யேழு நாளும்*
*கூறாகத் தானரைத்துக் கடுகு போல*
*குவிய உலர்த்தி வைத்துக் கொள்ளே!* 410

வெள்ளருகு, செருப்படி, குப்பைமேனி, ஆடுதின்னாப் பாளை, பொடுதலை, கரிசலாங்கண்ணி, கொட்டைக் கரந்தை ஆகிய மூலிகைகளின் சாறு சேர்த்து ஒவ்வொரு நாளாக ஏழு நாட்கள் அரைத்து, கடுகளவாக உருட்டி உலர்த்தி வைத்துக் கொள்க.

*கொள்ளுவாய் குளிகைதனைப் பண்ணிக்*
*கூறறிந்து கொடுத்திடுவாய் கூத்தன் போல*
*தள்ளாத சன்னிவகை யனைத்து நிற்குந்*
*தாங்காத சுரங்குளிர்ந்த சுரங்க ளெல்லா*
*மெள்ளவே திரிதோ ஷமதின் தோஷம்*
*விளங்கவே யனைத்து நிற்கும் விருப்ப மாக*
*உள்ளபடி தேனதிலே குளிகை யொன்று*
*உரைத்துநீ கொடுத்திடவே ஒழிந்து போமே!* 411

அதினின்று ஒரு குளிகையை எடுத்து, தேனில் இழைத்துக் கொடுக்க சன்னி வகைககள், தாங்காத சுரம், குளிர்ந்த சுரம், திரிதோடம் மற்றும் பல தோடங்கள் ஆகிய நோய்கள் தீரும்.

## வாய்வு சன்னிக்குக் குழம்பு

*ஒளிவான மனோசி லைசிலா சத்து*
*உதவுகின்ற குங்கிலியங் கற்பூரங் கூட்டித்*
*தெளிவான யிருவிகெந்தி தானம் தாரம்*
*தெகிட்டுபடிக் காரமிந்து துருசு கூட்டிக்*
*களியாக அரைத்திடுவாய் சாம மட்டுங்*
*கறுத்து நிற்கும் புளிபோலக் காணும் பாரே*
*..........................................................*
*..........................................................!* 412

மனோசிலை, சிலாசத்து, குங்கிலியம், கற்பூரம், இருவி, கெந்தகம், இரசம், அரிதாரம், படிகாரம், இந்துப்பு, துருசு இவற்றைச் சமமெடுத்து மூன்று மணி நேரமரைத்துக் கொள்க. அரைத்த விழுது புளி போன்று இருக்கும்.

பார்தனில் வெல்லமொரு பலமும் போடு
பாங்கான கோஷ்ட'வச்சி கரியும்பல மாகும்
சேர்த்திடுவாய் தேங்காய்ப்பால் விட்டு ஆட்டி
சிமிள்மாட்டுக் கொம்பதனி லடைத்து வைத்துக்
கூற்றறிந்து பயிறளவு வெற்றி லையில்
கொடுத்திடவே வாய்வுவகை யெண்பதுவுந் தீரும்
வீத்திருந்த சன்னிப்பதி மூன்றுந் தீரும்
விஷமெல்லாம் பறந்துவிடும் மேன்மே காணே 413

அதனுடன் வெல்லம், கோட்டம், வச்சிகரி எனும் காயாமரத்தின் கரி இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துச் சேர்த்து தேங்காய்ப்பால் விட்டு அரைத்து மாட்டுக் கொம்பினால் ஆன சிமிளில் அடைத்து வைத்துக் கொள்க. அதனை 32 மி.கி. எடுத்து வெற்றிலையில் வைத்துக் கொடுக்க எண்பது வகை வாயுவும், பதிமூன்று வகைச் சன்னியும் குணமாகும்.

## அரப்பொடிச் செந்தூரம்

செய்யவே அரப்பொடி பன்னிரு கழஞ்சி
செயமான பலமொன்று இரதங் கூட்டிப்
பய்யவே கெந்திதான் கழஞ்சி யேழு
பருத்ததோர் வெண்காரம் நாற்க ழஞ்சி
துய்யவே அவுரிச்சாற் நாலு சாமந்
துலங்கவே அரைத்திடுவாய் சாந்து போல
அய்யமுடன் கம்பிளிபோல் நிறம தாகு
மதையெடுத்து அடைதட்டிச் சட்டியினில் வையே! 414

அரப்பொடி 60 கி., இரதம் 35 கி., கெந்தகம் 35 கி., வெண்காரம் 20கி. எடுத்து அவுரிச்சாறு விட்டு பன்னிரெண்டு மணிநேரமரைத்து நன்கு மைபோல ஆனவுடன் எடுத்து வைத்துக் கொள்க. கம்பிளி போன்ற நிறமான அதையெடுத்து அடைதட்டி சட்டிக்குள் வைத்துக்கொள்க.

வைக்குஞ் சட்டி யதுக்குள்ளே
மருவிக் குமரிச் சாற்றையிட்டு

*மெய்க்க அதின்மே லடையை வைத்து*
*மேவிப் பின்னுஞ் சோறுவைத்து*
*தக்க சட்டி யுடன்கொண்டு*
*தானே சீலை மண்செய்து*
*ஒக்க அடுப்பில் நாலுநாள்*
*உரக்க யெரிக்கச் செந்தூரம்!* 415

குமரி எனும் கற்றாழைச் சோற்றைச் சட்டிக்குள் விட்டு, மேலே அடையை வைத்து மீண்டும் அச்சோற்றை வைத்து, சட்டியினால் மூடி சீலை மண்செய்து கொள்க. அடுப்பில் வைத்து நான்கு நாள் வேகமாக எரிக்கச் செந்தூரமாகும்.

*செந்தூரம் பணவிடையுந் தேனில் கொண்டால்*
*திருநோய் சொல்லுகிறோம் செப்பக் கேளு*
*வந்ததொரு விஷபாகஞ் சுரங்கள் திரும்*
*மகத்தான மேல்விக்கம் வாடிப் போகும்*
*எந்தெந்தப் பயித்தியமுஞ் சோகை திரு*
*மிதமான காமாலை இடறிப் போகும்*
*உந்தியுள்ள மகோதரமு பாண்டு திரு*
*முகந்திடவே யின்னம்வெள்ளை யுள்ளி கேளே!* 416

488 மி.கி. செந்தூரத்தைத் தேனில் கலந்து உட்கொள்ள விடபாகம், சுரங்கள், வீக்கம், பித்தம், சோகை, காமாலை, மகோதரம், பாண்டு ஆகிய நோய்கள் தீரும்.

*வெள்ளை யுள்ளித் தயிலமதில்*
*மிகுசெந் தூரம் பணவிடைகொள்*
*உள்ள அருவை பீலிகையு*
*முறுநீ ருளுவை நீராமை*
*மெள்ள சர்த்தி குன்மமுடன்*
*மிகு குன்ம மெரிகுன்மங்*
*கொள்ளும் வியாதி தான் திருங்*
*குறித்து இவைகள் கொள்வீரே!* 417

பூண்டு தயிலத்தில் 488 மி.கி. செந்தூரத்தைக் கலந்து உட்கொள்ள பீலிகை, நீராமை, வாந்தி, குன்மம், எரிகுன்மம் ஆகியவை தீரும்.

## சாரணைவேர்ச் சூரணம்

*சத்திச் சாரணைக் கிழங்கு வெட்டித்*
*தறித்துக் குறுணி பொடியாக்கி*
*மெத்த ஆவின் பாலவித்து*
*மேவு நிழலில் சுக்குப் போல்*
*வைத்தே இடித்துப் பொடிசெய்து*
*மருவும் வெருகடி ரெண்டதுதான்*
*சித்தந் தேனில் குழைத்து நன்றாய்த்*
*தீரும் வியாதி தெகிட்டக் கொள்! 418*

சாரணைக் கிழங்கை வெட்டிச் சூரணமாக்கி 5.3 லி. பசும்பாலில் வேகவைத்து நிழலில் உலர்த்திப் பொடித்துக் கொள்க. அதில் ஐந்து விரலளவு சூரணத்தைத் தேனில் குழைத்து நோய்களுக்குக் கொடுக்க வேண்டும்.

*கொள்ள நாற்பது நாளதுதான்*
*கோலக் காயங் குறித்துநோய்*
*உள்ள வியாதிக் கிதுவாகு*
*முகந்த கைப்பு புளிப்புவிட்ட*
*மெள்ள ஆவின் நெய்யாக*
*மிகுந்த முருங்கை திருக்கை சுறாத்*
*தள்ளாதி தனைக் கொண் டாக்கால்*
*தீரும் நோய்கள் மண்டிடுமே! 419*

நாற்பது நாள் இம்மருந்தைக் கொண்டால் உடலில் தோன்றும் பல நோய்கள் தீரும். கைப்பு, புளிப்பு, நீக்கி பசு நெய்யைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். முருங்கை, திருக்கை, சுறாமீன்கள் இவற்றை உணவில் சேர்த்துக் கொண்டால் நோய்கள் அதிகமாகும்.

## மண்டூரச் செந்தூரச் சுத்தி

*மண்டூ ரத்தைக் கொண்டு வந்து*
*மருக இடித்துப் பொடியாக்கி*
*கொண்ட நொச்சி வெற்றிலையும்*
*கூடுஞ் சாற்றில் மும்மூன்று*
*விண்ட காய்ச்சி ஊறவிட்டு*
*மிகுந்த ஆட்டின் கோமியத்தில்*
*ரெண்டு மூன்று நாளூற*
*நற்கற் றாழஞ் சாறாமே!* 420

மண்டூரத்தைத் தேவையான அளவு எடுத்து இடித்துப் பொடித்துக் கொள்க. அதனை நொச்சி, வெற்றிலை இவற்றின் சாற்றில் ஊறவிட்டு வகைக்கு மூன்றுமுறை காய்ச்சி, பிறகு ஆட்டின் கோமியத்தில் ஊற வைத்துக் கொள்க.

*கற்றாழஞ் சாறொரு சாமம்*
*கடுக வரைத்து மடக்கிவைத்து*
*அத்தை யாலி னிலைமேலே*
*அந்த மருந்தை அயதில்வைத்து*
*உற்ற ஒடு தான்மூடி*
*ஒடுங்கச் சீலை மண்செய்து*
*பத்தை வராகப் புடமாக*
*அறுப தாகு மப்படியே!* 421

பிறகு கற்றாழஞ்சோறு விட்டு மூன்று மணி நேரமரைத்து, அதனை ஆலிலை மேலே வைத்து ஓட்டினால் மூடி சீலை மண் செய்து கொள்க. முழு அளவு வறட்டி அடுக்கி (அறுபது வறட்டி) எரிக்கச் செந்தூரமாகும்.

*அப்பா லெடுத்துப் பரணிதனில்*
*அடைத்து ரெண்டு பணவிடைதான்*
*அப்பாத் தேனில் கொண்டிடவே*
*விழலா மிருமல் மகோதரமும்*

*ஒப்பாம் பாண்டு காமாலை*
*உயர்ந்த சோகை விக்கமுடன்*
*அப்பா லிரைப்பு பெருவயிறு*
*ஆகும் கைகா லசதியும்போம்!* 422

அதனை எடுத்துப் பரணில் பத்திரப்படுத்திக் கொள்க. 1 கி. அளவு எடுத்துத் தேனில் கலந்து கொடுக்க இருமல், மகோதரம், பாண்டு, காமாலை, சோகை, வீக்கம், இரைப்பு, பெருவயிறு, கைகால் அசதி ஆகிய நோய்கள் தீரும்.

*போமே முருங்கைக் காயிலையும்*
*புகழுங் கீரைத் தண்டாகும்*
*மாமே ஆவின் நெய்பாலா*
*மாகு மாறாக் குருகுகொக்கு*
*மாமே பத்திய மிகவிருந்தா*
*லகன்று போகும் நோய்களெல்லாம்*
*தாமே சொன்னா ரகத்தியனார்*
*தனியி ருள்ளி தான்வாங்கே!* 423

முருங்கைக்காய், இலை, கீரைத்தண்டு, பசும்பால், பசுநெய், குருகு, கொக்கு இவை ஆகும் பதார்த்தங்கள். இவற்றைச் சேர்த்து பத்தியத்துடன் இருப்பின் மேற்சொன்ன நோய்கள் நீங்கும் என்று அகத்தியர் கூறுகிறார்.

## அரிதார பற்பம்

*ஈருள்ளியுந் தானறு நாழி*
*இயலும் பிரண்டை தான்துவைத்து*
*மீறுஞ் சார்தா னிருநாழி*
*மிகுந்த பசலிச் சார்சரியாய்*
*வாறே முலையா யிச்சாறும்*
*மருவுங் குறுணி நாநாழி*
*தீர இடித்துத் தான்பிழிந்து*
*செலுத்து வகைகே ளச்சாறே!* 424

ஈருள்ளிச்சாறு 7.8 லி., பிரண்டைச்சாறு 2.6 லி., பசலிச்சாறு 5.2 லி. எடுத்துக் கொள்க. 140 கி. அரிதாரத்தை இச்சாறுகள் ஊற்றி அரைத்து வற்றும் போது மறுபடியும் விட்டு அரைத்துக் கொள்க.

*அச்சா றதனால் நாலுபலம்*
*அரிதா ரத்தைத் தானரைத்து*
*அச்சாறு வற்ற வற்ற*
*மாடி யரைக்க மருந்ததனை*
*அச்ச மில்லாச் சட்டிதனில்*
*அடைபோல் தட்டி யதனில்வைத்து*
*இச்சை யுடனே குழிக்கல்லை*
*இந்தச் சாற்றாற் கழுவியெடே!* 425

இவ்வாறு நன்கு சாறு வற்றும் வரை அரைத்ததைச் சட்டியில் அடையாகத் தட்டிக் கொள்க. மேற்கூறிய சாறுகளை விட்டு குழிக்கல்லைக் கழுவி வைத்துக் கொள்க.

*கழுவுஞ் சாறு மடைமேலே*
*கலந்து சட்டிக் குழம்பாக்கி*
*வழுவில் லாத மறுசட்டி*
*மகிழ்ந்து மூடிச் சீலைசெய்து*
*அழுவா யேழு மண்செய்து*
*அப்பால் புரைக்கு மண்ணப்பி*
*நழுவிப் புகைச்சாரம் போகாமல்*
*நாற்பது நாழிகை யெரித்தெடுத்தே!* 426

அந்தச் சாற்றை சட்டியின் அடைமேல் ஊற்றி மறு சட்டியைக் கவிழ்த்து சீலை மண் செய்து நன்கு மண்ணை அப்பி வைக்க. புகை வெளியே போகாத அளவுக்கு தொடர்ந்து பதினாறு மணி நேரம் எரிக்க வேண்டும்.

*எடுத்துக் கரண்டி தனைக்காய்ச்சி*
*இதிலே பற்பம் பொடிபோட*
*மடுத்து இருந்தால் நல்லபற்பம்*
*மறுகப் புகைந்தால் பற்பமில்லை*

*தொடுத்த சட்டி மண்செய்து*
*துலங்கத் தீரும் அடுப்பேற்றிக்*
*கடுத்த மாக சாமமொன்று*
*கனலாத் திரும்ப எரியிடவே!* 427

பற்பத்தை எடுத்துக் காய்ச்சிய கரண்டியில் போட புகையாமல் இருப்பின் அது சிறந்த பற்பம் என்றும் புகைந்தால் சிறப்பானதில்லை என்றும் அறிந்து கொள்க. மீண்டும் சட்டியில் மண் வைத்து அடுப்பேற்றி மூன்று மணி நேரம் நன்கு எரித்திட வேண்டும்.

*எரித்து அதனை எடுத்துவைத்து*
*இதமாம் பற்பம் பதங்கண்டு*
*தரித்த அனுபானந் திரிகடுகு*
*தந்த பொடிதான் பணவிடையு*
*முரித்த பற்ப மதில்பாதி*
*முழுங்க இருமல் தான்போகும்*
*கரித்த சயரோகந் தான்போகக்*
*கனத்துக் கொள்ளப் பிறநீர்போம்!* 428

எரிந்தடங்கிய பின்னர் பதமாய் பற்பத்தை எடுத்து வைத்துக் கொள்க. திரிகடுகுச் சூரணம் 488 மி.கி. எடுத்து 244 மி.கி. பற்பத்தைக் கலந்து கொடுக்க இருமல், சயநோய் தீரும்.

*பிறநீர்க் கோவை தேனுடனே*
*பெருகும் பற்பம் பணவிடைகொள்*
*அறுநோய் தேசிப் பழச்சாற்றி*
*லரும்படர் தாமரைக் கதுபோகும்*
*வருமே யூது காமாலை*
*மருவுங் கையாந் தகரையிலை*
*திருமே குட்டம் வெண்குட்டம்*
*தெறிக்கும் நிலப்பனைக் கிழங்காகும்!* 429

488 மி.கி. பற்பத்தைத் தேனில் கலந்து கொடுக்க நீர்க்கோவை நீங்கும். எலுமிச்சம்பழச்சாற்றில் பற்பத்தைக் கலந்து கொடுக்க படர் தாமரை குணமாகும். கையாந்தகரைச்

சாற்றில் கொடுக்க ஊதுகாமாலையும், நிலப்பனைக் கிழங்குச் சாற்றில் கலந்து கொடுக்க குட்டம், வெண்குட்டம் நீங்கும்.

*ஆகுங் குட்டஞ் சீரகத்தி*
*லான சன்னி பலவாதம்*
*போகும் அக்கினி மாந்தமுடன்*
*பொருமல் தீருந் தேனிலிடத்*
*தாக முடம்பு சோகையெல்லாந்*
*தவறிப் போகுங் கையான்சார்*
*யேக விக்கம் பொருமலுக்கு*
*யிடுநீ கடுக்காய் கையான்சார்! 430*

சீரகத்திலிட சன்னியும் பல வாதங்களும், தேனில் கொடுக்க அக்கினி மாந்தமும் பொருமலும், கையாந்தகரைச் சாற்றில் கொடுக்க உடல் சோகையும், கடுக்காய், கையாந்தகரைச் சாற்றில் கொடுக்க வீக்கம், பொருமலும் தீரும்.

*சாரும் தெப்பைப் புல்சாறு*
*தளம்பாக கார சாரமுடன்*
*நேருங் கொண்டால் கருங்குட்டம்*
*நெகிழ்ந்து போகு மின்னம் நீ*
*பாருங் குமர கண்டனுக்குப்*
*பண்ணுந் திப்பிலி தேனில்கொள்*
*வேருஞ் சிவந்த செங்குட்டம்*
*விட்டே போகுங் குமரிச்சார்! 431*

தருப்பைப்புல் சாற்றுடன் கார, சாரம் சேர்த்து பற்பத்தைச் சமஅளவு கலந்து கொடுக்க கருங்குட்டமும், திப்பிலி, தேனில் கொள்ள குமரகண்டனும், கற்றாழைச் சாற்றில் கொள்ள செங்குட்டமும் தீரும்.

*குமர னுடம்பு மாப்போலே*
*கொண்ட உதிர்ந்து தானிருந்தால்*
*தமரம் அக்கராக் காரமதைத்*
*தடுத்தே பொடியில் பற்பங்கொள்*

*அமர தாமன் திமிர்வாதம்*
*அடிக்கும் நிலப்பனைக் கிழங்கதனால்*
*ஏமகுங் காய சுவாசத்திற்கு*
*ஏற்குந் திரிபலைச் சூரணமே!* 432

உடல் மாவு போன்று உதிர்ந்தால் அக்கராகாரப் பொடியுடன் இப்பற்பத்தைக் கலந்து கொடுக்க வேண்டும். திமிர் வாதத்திற்கு நிலப்பனைக் கிழங்குச் சாற்றிலும், சுவாசத்திற்கு திரிபலைச் சூரணத்திலும் பற்பத்தைக் கலந்து கொடுக்க வேண்டும்.

*சூரண முடனே அரிதாரந்*
*துலங்கும் பற்பந் தான்கொண்டால்*
*காரண மான புளிப்புகையுங்*
*கத்தரி வெள்ளரி பூசணிக்காய்*
*வாரணங் கோழி பன்றியுடன்*
*வழங்குஞ் செம்பட் டைமொச்சை*
*ஆரணங் கவளு மாகாது*
*அப்பால் தயிர்மோ ரகத்தியதே!* 433

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் சூரணத்துடன் அரிதார பற்பத்தைக் கலந்து உட்கொண்டால் புளி, புகை, கத்தரி, வெள்ளரி, பூசணி, கோழி, பன்றி, வெண்மை கலந்த சிவப்பு நிறமான மொச்சை ஆகிய உணவுப்பொருட்களை நீக்க வேண்டும். தயிர், மோர், அகத்திக்கீரை இவற்றையும் நீக்கவும்.

### வாய்வுக்குச் சாரணைக் குடிநீர்

*அகத்தியமாஞ் சாரணையின் கிழங்கு கொண்டு*
*அதையிடித்து இருகழஞ்சி நாழிப் பாலில்*
*சுகத்துடனே நீர்பாலுஞ் சுண்டக் காய்ச்சி*
*துலங்கவே வடிகொண்டு கொள்ளும் போது*
*சிகத்திலுள்ள வாய்வெல்லாந் தெறித்துப் போகும்*
*திரேகத்தில் குன்மமெல்லாந் தெளிந்து போகும்*

*நிகழ்த்திடவே பழம்புளியு மிஞ்சி சுண்டி*
*நினவான குழிக்கரியும் நேர்ந்து கொள்ளே!* 434

சாரணைக் கிழங்கை எடுத்து 10 கி. சாறு பிழிந்து கொள்க. 1.3 லி. பாலை அதனுடன் சேர்த்துக் கொள்க. நன்கு காய்ச்சி சுண்ட வைத்து உட்கொள்ளும்போது வாய்வுகள், குன்மங்கள் ஒழியும். பழம்புளி, இஞ்சி, சுக்கு உணவில் சேர்த்துக் கொள்ளவும்.

## அரையாப்புக்குப் பூச்சு

*கொள்ளவே அரையாப்புக் கட்டி போக்கக்*
*குடுகழஞ்சி இரதமொன்று ஈயம் ரண்டு*
*தள்ளூரச கற்பூர மொன்று கூட்டித்*
*தாங்காத அண்டத்தோ டதுவும் நாலாய்*
*விள்ளாமல் வெண்கருவா லாட்டிப் பின்னும்*
*மிளகளவாய் வெள்ளையது கூடச் சேர்த்து*
*எள்ளளவு யிடையில்லாக் கட்டி மேலே*
*இதுவாகப் பூசிடவே இழந்து போமே!* 435

இரசம் 5 கி., ஈயம் 10 கி., இரசகற்பூரம் 5 கி., இவற்றைச் சேர்த்துக் கொள்க. முட்டை ஓட்டினையும், வெண்கருவையும் அத்துடன் சேர்த்தாட்டி வெள்ளைப் பாடாணத்தையும் சேர்த்து நன்கு அரைத்து அரையாப்புக்கட்டியின் மேல் பூச குணமாகும்.

## கர்ப்பம் வீழ உருண்டை

*இகழ்ந்துதான் கெற்பம்விழ் இன்னங் கேளு*
*இதமாகச் சூடன்ரண்டு காய மூன்று*
*புகழ்ந்திடவே விராகனிடை நன்றாய்ச் சேர்த்துப்*
*பூண்டுமொரு பலமுரித்துக் கூடப் போட்டுத்*
*தகந்திடா மாவிலிங்கைத் துளிர்பிடிதா னொன்று*
*தறுகாம லிவ்வளவும் யிலையோட்டி*
*உகந்திடவே புன்னைக்கா யளவுமுன்று உண்டை*
*உத்தமியா ளருந்திடவே முத்தி யாமே!* 436

சூடன் 8 கி., பெருங்காயம் 12 கி. சேர்த்துக் கொள்க. 35 கி. பூண்டை உரித்து உடன் சேர்க்க. மாவிலிங்கத்துளிர் ஒரு பிடியையும் சேர்த்து அரைத்துப் புன்னைக் காயளவு உருண்டைகளாகச் செய்து கொள்க. மூன்று உருண்டைகள் கொடுக்க கர்ப்பம் கரையும்.

### சாரணை பற்பம்

*முத்திய சாரணை மூன்றுபலம்*
*முருகும் வெல்லஞ் சரிகொண்டு*
*உற்ற குழிக்கல்லில் தானரைத்து*
*உண்டு ஆவின் நெய்யில்கொள்*
*மெத்த உருட்டி நெல்லிக்காய்*
*மேவும் பிரமாணந் தான்கொண்டு*
*குற்ற மில்லாமல் தான்கொள்ளக்*
*குணமாம் வியாதி குணங்கேளு!* 437

சாரணை, வெல்லம் இவை இரண்டையும் வகைக்கு 105 கி. எடுத்து குழிக்கல்லில் போட்டரைத்து நெல்லிக்காய் அளவாக உருட்டிக் கொள்க. அதனைப் பசுநெய்யில் சேர்த்து சாப்பிட வேண்டும்.

*குன்மந் தீரும் சுரோணிதம்போம்*
*குடலில் வியாதி பலதீரும்*
*வற்ம மில்லை கிருமியுடன்*
*வகுத்துக் கிராணி வருவகையும்*
*துன்னி மலங்குங் காமாலை*
*சொல்லும் பாண்டு சயரோகம்*
*நன்மை யாகும் வாதமெல்லாம்*
*நாட்டுச் சாரணை பற்பம் கெந்தி!* 438

அவ்வாறு உட்கொள்ள குன்மம், சுரோணிதம், குடல் நோய்கள், பல கிருமியுடைய கிராணி, காமாலை, பாண்டு, சயம், வாதம் ஆகிய நோய்கள் தீரும்.

## கெந்தகச் சுத்தி

*கெந்தம் சுத்தி தான்கேளீர்*
*கிளந்த பசுவின் பால்மோராம்*
*வந்த காடி வெள்ளாடு*
*மருவும் நெய்தேன் பூசணிக்காய்*
*விந்தை மாதளை சம்பிராசம்*
*மிகுத்த கருப்பஞ் சார்தன்னில்*
*சந்தேக மில்லாமல் இவ்வகையில்*
*தானே சுத்தி பண்ணுவதே! 439*

பசும்பால், பசுமோர், காடி, வெள்ளாட்டு நெய், தேன், பூசணிக்காய், மாதுளைச்சாறு, எலுமிச்சம்சாறு, கருப்பஞ்சாறு ஆகியவற்றில் கெந்தகத்தைச் சுத்தி செய்து கொள்ளவும்.

## கெந்தகச் சுண்ணம்

*பன்னு மந்திரத் தாமரையும்*
*பகரு கருசாலை நீர்முள்ளி*
*என்னும் பானையி லிதைப்போட்டு*
*ஏகடு வேடு தான்கட்டி*
*துன்னு கெந்த மேல்வைத்துச்*
*சுகமா மூடி யெரியிட்டு*
*நண்ணு நாழிகை தானெரித்து*
*நண்ணய மாக ஆறியெடு! 440*

அந்திரத் தாமரை, கரிசாலை, நீர்முள்ளி ஆகிய மூலிகை களைப் பானையில் போட்டு வேடு கட்டிக் கொள்க. பின் அதன் மேல் சுத்தித்த கெந்தகத்தை வைத்து மூடி சீலை மண் செய்து நன்கு எரிக்க. இவ்வாறு 30 நிமிடம் எரித்து ஆறிய பின் எடுத்துப் பார்க்க சுண்ணமாகும்.

*எடுத்தே பார்க்கச் சுண்ணாம்பாம்*
*ஏக விரியுங் கெந்தகமும்*
*மடித்து வாசனை தானுமில்லை*
*வாசம் பணவிடை தானெய்சர்க்கரை*

*தொடுத்த மருந்து பாகமதாய்*
*துலங்கும் வகுத்துப் பிணி போக*
*வெடித்த வியாதி தான்போக*
*வேரை மறுக்குங் கெந்தகமே! 441*

500 மி.கி. கெந்தகச் சுண்ணத்தை எடுத்து நெய், சர்க்கரை இவற்றுடன் சேர்த்துக் கொடுக்க பிணிகள் குணமாகும்.

*கெந்தகச் சுத்தியின் குணங்கேளாய்*
*கிளந்து அமுர்த வல்லியுமாம்*
*வந்த குன்மம் குட்டமுடன்*
*மருவுங் கிருமிப் பூவுடனே*
*தொந்த மான சுவாசகாசம்*
*துலங்குஞ் சீலை வாய்வுசுரம்*
*விந்தை யான வீரியமும்*
*மிகவுந் தாது வுண்டாமே! 442*

கெந்தகச் சுத்தியின் குணமாவது அமிர்தவல்லியாக இருந்து செயல்படுவது. இப்பற்பத்தால் குன்மம், குட்டம், கிருமி, சுவாசகாசம், வாய்வு, சுரம் ஆகிய நோய்கள் குணமாகும். தாது விருத்தி உண்டாகும்.

*உண்டாந் தண்ணி விப்புருதி*
*ஒடு மூல வியாதிகள்போம்*
*கண்ட தம்பன முண்டாகும்*
*காந்தி சரீரம் புளகிக்கும்*
*மண்டலத் தோர்கள் தானறிய*
*மன்மத னாவார் கண்டீரே*
*பண்டே யுள்ள வியாதியெல்லாம்*
*பற்பங் கண்டு நெகிழ்ந்திடுமே! 443*

விப்புருதி, மூலம் குணமாகும். உடல் ஒளியுடன் பிரகாசிக்கும். வெளி மண்டலத்தையும் தாண்டியுள்ள மன்மதனை ஒத்திருக்கும். உடலில் கண்ட வியாதி எல்லாம் பற்பத்தைக் கண்டவுடன் தீர்ந்திடும்.

*நெகிழ்ந்த நெல்லி கெந்தகத்தை*
*நேரே நாலு பலம்வாங்கி*
*உகந்த வெண்காயச் சாறுவிட்டு*
*ஒருமூன் றுநாள்தா னரைக்கப்*
*புகழ்ந்து முள்ளங்கிச் சாறுவிட்டுப்*
*பின்னு மூன்று நாளரைக்கத்*
*தகர்ந்த பற்பந் தேனில்கொள்ளத்*
*தறுகாக் கிரந்தி சூலையும்போம்!* 444

நெல்லிக்காய்க் கெந்தகத்தை 140 கி. எடுத்து வெங்காயச்சாறு சேர்த்து மூன்று நாள் அரைத்துக் கொள்க. முள்ளங்கிச்சாறு சேர்த்து மேலும் மூன்று நாள் அரைத்துக் கொள்ள பற்பமாகும். அதனைத் தேனில் கலந்து உட்கொள்ள கிரந்தி, சூலை நீங்கும்.

### கண், கை, கால் எரிவுக்கு நாகசெந்தூரம்

*போகும் நாகம் பலமஞ்சு*
*பொருந்து மிலுப்பை எண்ணைதனை*
*வாக இரும்புக் கரண்டிதனில்*
*வளமாத் தடவி நாகமதை*
*ஏக முருக்கி வெள்ளாட்டு*
*ஈயப்பா லிரண்டு பத்து*
*ஆக முடனே தான்சாய்க்க*
*அதுவுஞ் சுத்தி யானதுபின்!* 445

நாகம் 175 கி. எடுத்துக் கொள்க. இரும்புக் கரண்டியில் இலுப்பை எண்ணெயைத் தடவி நாகத்தை வைத்து உருக்க வேண்டும். பின் உலையில் வைத்து வெள்ளாட்டு நெய்யைச் சிறிது சிறிதாக விட்டு இருபது முறை சாய்த்தெடுக்க சுத்தியாகும்.

*பின்தான் குண்டு சட்டிதன்னில்*
*பிலத்த நாக மதைவைத்து*
*வன்தான் சுக்குப் பலமொன்று*
*மருவு மோமம் அரைப்பலமாம்*

*இன்ப மஞ்ச ளொருபலமும்*
*ஏகம் வெடியுப்பு நாலுபலம்*
*முன்போ லிடித்துப் பொடிசெய்து*
*மோத னாக மேல்தூவி!* *446*

சுத்தி செய்த நாகத்தைக் குண்டு சட்டியில் வைத்துக் கொள்க. சுக்கு 35 கி., ஓமம் 18 கி., மஞ்சள் 35 கி., வெடியுப்பு 140 கி. எடுத்து நன்கு சூரணித்து நாகத்தின் மேல் தூவி விடுக.

*தூவித் தூவித் தான்வறுக்கத்*
*துலக்க மாக வெந்துவரில்*
*மேவிச் சிவந்த நாயுருவி*
*மெத்த நறுக்கிப் போட்டுவறு*
*ஆவி யந்தச் சட்டியிட்டு*
*அப்பால் மறுசட்டி யிட்டுவறு*
*கூவிச் செந்தூர மாதளம்பூ*
*குறித்த நிறமாய் வந்தபின்பு!* *447*

தூவிக் கொண்டே வறுக்கும் போது நன்கு வெந்து கொண்டே வரும். அப்போது நாயுருவியை வெட்டி அதில் போட்டு வறுக்க வேண்டும். பின் அதனை மறு சட்டியில் போட்டு வறுக்க மாதுளம்பூ போன்று சிவப்பான பக்குவத்துடன் அமைய இறக்கிக்கொள்ள வேண்டும்.

*வந்தே செந்தூரம் பணவிடைகொள்*
*வறுத்த பொடிசெய் திரிகடுகை*
*செந்தேன் தனில்வெரு கடியுந்*
*திரட்டிக் கொள்ளத் திருநோய்*
*எந்த ஈளை இருமலுடன்*
*ஏகும் மந்தார காசசுவாசம்*
*செந்த சிலேற்பன மரிகுரலும்*
*துலங்கும் நெஞ்சு னோவும்போம்!* *448*

500 மி.கி. செந்தூரத்தைத் திரிகடுகுச் சூரணத்தடன் கலந்து, மூவிரலளவு தேனில் குழைத்துக் கொடுக்க ஈளை, இருமல்,

மந்தார காசம், சுவாசம், நெஞ்சு வலி, ஆகிய நோய்கள் நீங்கும்.

*போகும்போம் உட்டிண ரோகம்*
*போரு சுக்கில பிரமியமும்*
*ஆகு மிந்திரியக் கட்டுக்கு*
*ஆன கல்லு சதையடைப்பு*
*ஏகுங் குன்ம சோகையுடன்*
*எரியும் பவுந்திர முகவெரிவுந்*
*தாகம் கைகா லெரிவுடனே*
*சகல நோய்கள் தீந்திடும்!* 449

உட்டிணநோய், சுக்கிலபிரமியம், இந்திரியக்கட்டு, சதையடைப்பு, கல்லடைப்பு, குன்மம், சோகை, பவுத்திரம், முகஎரிவு, கைகால் எரிவு, ஆகிய நோய்கள் தீரும்.

*விடுமே ஆவிரை வேர்ப்பொடியும்*
*விளங்கும் பணவிடை செந்தூரம்*
*தொடுமே ஆவிரைத் தைலத்தில்*
*துணித்தே கொள்ளச் சலக்கழிச்சல்*
*படுமே இருபது வகையுளதும்*
*பரிந்தே போகுஞ் செந்தூரம்*
*அடவாம் பத்தியம் உப்புபுளி*
*ஆடுகோழி பன்றி தள்ளே!* 450

ஆவிரை வேர்ச் சூரணத்தையும் 500 மி.கி. செந்தூரத்தையும் சேர்த்து ஆவிரைத் தைலத்தில் கலந்து உட்கொள்ள இருபது வகை சலக்கழிச்சலும் நீங்கும். உப்பு, புளி, ஆடு, கோழி, பன்றி இவற்றை நீக்கி பத்தியம் காத்தல் வேண்டும்.

### வெள்ளீயச் செந்தூரம்

*தள்ளாமல் வெள்ளியக் கட்டி வாங்கி*
*தகடாகப் புளியிலைபோல் கத்த ரித்து*
*மெள்ளவே அடப்பங்கொட்டை மஞ்சள் ஓமம்*
*இதமாகச் சமன்கொண்டு தூள தாக்கி*

*கொள்ளவே குமரிப் போட்டு மேலே*
*குறும்பொடியைப் பரப்பி அதின் மேலே ஈய*
*வள்ளலெனுந் தகடதனைப் பரப்பி நன்றாய்*
*மடக்கிநீ சுருட்டிடுவாய் திரணைப் போல!* 451

வெள்ளீயக் கட்டியைத் தகடாகத் தட்டி புளியிலை போல சிறியதாகக் கத்தரித்துக் கொள்க. கொட்டை மஞ்சள், ஓமம் இவற்றைச் சமமாய் எடுத்துச் சூரணம் செய்து கொள்க. மேலே இப்பொடியைத் தூவிப் பரப்பி கற்றாழைச் சோறு போட்டு அதன்மேல் வெள்ளித் தகடினைப் பரப்பி நன்கு சுருட்டி உருண்டையாய்ச் செய்து கொள்க.

*திரணையதைப் புடம்போட பற்ப மாகும்*
*திறமாக அதையெடுத்துப் பரணில் வைத்து*
*வருமேகப் பிரமியமுந் தீர வேண்டி*
*மகத்தான பற்பமதைத் தேனில் கொள்ள*
*அரும்பாவி கிரந்தியுடன் சூலை போகும்*
*அக்கரமும் நீர்க்கடுப்பு முடனே தீரும்*
*பிரளையமா மூத்திரக் கிரிட்சி தீரும்*
*பின்னவெகு ரோகமெல்லாம் பிலத்தா தோடும்!* 452

அதை எடுத்து புடம்போட பற்பமாகும். அதைப் பரணில் வைத்துப் பத்திரப்படுத்திக் கொள்க. இப்பற்பத்தைத் தேனில் கலந்து கொடுக்க மேகம், பிரமியம், கிரந்தி, சூலை, அக்கரம், நீர்க்கடுப்பு, மூத்திரக்கிரிச்சரம் ஆகிய நோய்கள் தீரும்.

## கர்ப்பினிகளுக்கு மருந்து

*பிலமாக முதல்மாதங் கெர்ப்ப மாகிற்*
*பெண்வயிறு நொந்திட்டால் மருந்து கேளு*
*சிலைநுதலே சந்தனமு மிலாமிச் சோடு*
*சேர்த்துநீ சமன்பாலில் கரைத்துக் கொள்ள*
*விலகாமல் அரோகங்கள் வயிறு நொந்தால்*
*வெள்ளோத்திரம் நெய்தல் கிழங்குமஞ் சிட்டி*
*துலையாதே நீயரைத்துப் பாலில் கொள்ளச்*
*சுகமாகு மூன்றான திங்கள் கேளே!* 453

பெண் கர்ப்பமான முதல் மாதத்தில் வயிறு வலித்தால் சந்தனம், இலாமிச்சம் வேரைச் சேர்த்துப் பாலில் கரைத்துக் கொடுக்க குணமாகும். வலி நீங்காது இருப்பின் வெள்ளி லோத்திரம், நெய்தல் கிழங்கு, மஞ்சிட்டி, இவற்றைச் சேர்த்தரைத்துப் பாலில் கொடுக்க குணமாகும்.

*திங்கள்தனில் வயிறுநொந்து சூலை தோன்றிற்*
*சீரகந்தா மரைவளையம் கச்சோ லந்தான்*
*பொங்கிவளர் சந்தனமும் பாலில் கொள்ளப்*
*புகலுவே னின்னமொன்று பொருந்திக் கேளு*
*தங்குநாலாந் திங்கள் வயிறு நோகில்*
*தனிநெருஞ்சி வேருடனே வாழைக் கட்டை*
*அங்குள்ள தாமரையும் நெய்தல் வேரும்*
*ஆவின்பால் சந்தனமு மரைத்து உண்ணே!* 454

மூன்றாம் மாதத்தில் வயிறு வலித்தால் சீரகம், தாமரை வளையம், கச்சோலம், சந்தனம் இவற்றைப் பாலில் அரைத்துக் கொடுக்க குணமாகும். நான்காம் மாதத்தில் வயிறு வலித்தால் நெருஞ்சிவேருடன் வாழைக்கட்டை, தாமரை, நெய்தல்வேர், சந்தனம் இவற்றைப் பசும்பாலில் அரைத்துக் கொடுக்க குணமாகும்.

*உண்ணவஞ்சாந் திங்கிலிலே சூலை தோன்றில்*
*உரைக்கிறேன் சந்தனமும் நெய்தல் வேரும்*
*திண்ணமாய் முன்பாலி லரைத்துக் கொள்ள*
*திரு மாறாந் திங்களிலே நொந்து*

*சூலை தோன்றிக் காட்டி லுள்ள*
*விளாங்காய்ச் சாறு நெய்தல் வேரும்*
*பலங்காண சக்கரையும் பாலில் கொள்ள*
*பாறிப்போ மெட்டான திங்கள் தன்னில்*
*மலங்காமல் காறையிலை சந்த னந்தான்*
*வாசனைவேர் திப்பிலியும் பாலிற் கொள்ள*
*துலங்கிடவே நலமான திங்கள் தன்னில்*
*சூலையறப் பாளையிடித் துண்ண தீரும்!* 455

ஐந்தாம் மாதத்தில் தோன்றும் சூலை வலிக்குச் சந்தனம், நெய்தல் வேர் இவற்றைப் பசும்பாலில் அரைத்துக் கொடுக்க வேண்டும். ஆறாம் மாதத்தில் ஏற்படும் வயிற்று வலிக்குக் காட்டிலுள்ள விளாங்காயின் சாற்றையும் நெய்தல் வேரையும் இடித்துச் சர்க்கரை, பால் கலந்து கொடுக்க குணமாகும். எட்டாம் மாதத்தில் வரும் வலிக்குக் காரையிலை, சந்தனம், வெட்டிவேர், திப்பிலி ஆகிய மூலிகைகளை அரைத்துப் பாலில் கொடுக்க குணமாகும். பாளையை இடித்து 30 நாட்கள் சாப்பிட்டு வர வலி தீரும்.

## குடித்தபா லெடுத்தால் மருந்து

*தீருமடா திங்கள் சேர்ந்து பிள்ளை பெற்றால்*
*ஸ்ரீயளுக்கும் பாலகர்க்கும் மருந்து கேளு*
*சேரடா சிறுதேக்கு மதிமதுரந் தானும்*
*திப்பிலியுங் காடிதனி லரைத்துப் பூசத்*
*தீருமே பால்குடித்து எதிரிட் டாலும்*
*கொட்டாவி விட்டாலுங் கூறக் கேளு*
*பாரமாம் வெள்ளுள்ளி ஓமந் தானும்*
*பாங்காகக் கியாழஞ்செய் பருகத் தீரும்*
*சேறுந் தோஷங்கண்டு முலையுண் ணாட்டால்*
*சேரடா அதிமதுரம் பொடித்துக் கொள்ளே!* *456*

குழந்தை பிறந்த பெண்களுக்கும், பாலகர்க்கும் மருந்து ஒன்றினைக் கூறக் கேளுங்கள். சிறுதேக்கு, அதிமதுரம், திப்பிலி இவற்றைக் காடியில் அரைத்து மார்பகங்களின் மீது பூச மகளிர்க்குப் பால் சுரக்கும். குழந்தை குடித்த பால் வாந்தியெடுத்தாலும் கொட்டாவி விட்டாலும் வெள்ளுள்ளி, ஓமம் இவற்றைச் சேர்த்து குடிநீரிட்டுக் கொடுக்க குணமாகும்.

## தாய்ப்பாலுண்ணாட்டால் மருந்து

*பொடியையமுலைப் பாலிலரைத்து முலையிற் பூசி*
*பிள்ளைக்கு முலைகொடுக்கப் போகும் நோய்கள்*
*துடியாகக் குழந்தைவாய் நொந்து தானால்*
*துலங்கு புன்னை கோட்டங் கொண்டு*

*வடித்ததயிர்த் தண்ணீரி லரைத்துக் காய்ச்சி*
*வாய்தனிற் தடவிடவே நோவு தீரும்*
*அடிவயிறு நொந்துமலங் கட்டு மாகில்*
*அதிமதுரம் வேப்பந்துளிர் சர்க்கரை அரைத்தே!* 457

குழந்தையைத் தோடம் பிடித்து அதனால் பால் குடிக்காமல் இருப்பின் அதிமதுரத்தை இடித்துத் தாய்ப்பாலில் அரைத்து மார்பகங்களின் மீது பூசி பால் கொடுக்க, குழந்தை பால் குடிக்கும். குழந்தையின் வாய் வெந்து வலித்தால் புன்னை, கோட்டம், இவற்றைத் தயிர்த் தண்ணீரில் அரைத்துக் காய்ச்சி வாயில் தடவ வலி தீரும்.

## மலசலம் அடைத்தால் மருந்து

*அரைத்துநெய்யில் புகட்டிடு வலமி றங்கும்*
*அதுவல்லால் நீரிறங்க எலிப்பு ழுக்கை*
*அரைத்திடுவாய் வெள்ளரிக்காய் விரையுங் கூட்டி*
*அதையரைத்து அடிவயிற்றில் பூசத் தீரும்*
*நிறைத்திடவே நீரிறங்கும் பாலு முண்ணும்*
*நினவாக மஞ்சதுத்தி வேருங் கொண்டு*
*பறமாக மங்களநாள் குளிசங் கட்டி*
*பறக்குமடா தோஷமுடன் மதலை நோவே!* 458

குழந்தையின் அடிவயிறு வலித்து மலசலம் கட்டினால் அதிமதுரம், வேப்பந்துளிர், சர்க்கரை இவற்றைச் சேர்த்தரைத்து நெய்யில் கலந்து கொடுக்க வேண்டும்; மலம் இறங்கும். எலிப்புழுக்கையையும், வெள்ளரிக்காய் விதையையும் சேர்த்தரைத்து அடிவயிற்றில் பூச வலி நீங்கி நீரிறங்கும். பால் குடிக்கும். நன்னாளில் மஞ்சள் துத்தி வேரினாலான குளிசத்தைக் கட்ட தோடமுடன் குழந்தையின் வலியும் தீரும்.

## குளிதோட குணம்

*மதலையின் மேனி வாடி*
*வயிற்றினில் பாலுந் தங்கா*
*மதலை தலையில் குழியுண்டாம்*
*வாந்திநீராய் விழுந்து கொள்ளும்*
*நுதலே னுறையுஞ் சிலத்தை யன்றி*
*நோக்கு விழியுந் தான்கெட்டு*
*குதலை வாய்கிரி சித்தொன்றும்*
*குளித்தவ ளெடுத்தாக் காலே!* 459

மாதவிடாய் முடிந்து குளித்தபெண், வேறு குழந்தையைத் தூக்கினால் உடல்வாடல், வயிற்றில் பால் தங்காமை, தலையில் குழியுண்டாதல், வாய்நீர் ஒழுகுதல், கண் ஒளி இழத்தல் ஆகிய குறி குணங்கள் குழந்தைக்கு உண்டாகும்.

## பெண் தோட குணம்

*தாயார் முலையில் வாயை வைத்துச்*
*சற்றே உண்ணும் திகைத்திருக்கும்*
*தேவாய்த் தேய்க்கும் மெய்வெளிருஞ்*
*சிறுக வெதுப்பும் வயறொழுகும்*
*சாய்வா யிறங்கு மெழுந்திருக்கும்*
*சற்றே கண்டால் விரோசிக்கும்*
*பேனோய் கொண்டு அவள்குளித்த*
*பெண்ணோய் கொண்ட தோஷமிதே!* 460

தாயாரின் மார்பகங்களில் வாய் வைத்துப் பால் குடித்தல், பின் குடிக்காமை, ஓரிடத்தில் பார்த்தல், உடல் வெளிறுதல், வெதும்புதல், கழிச்சலாதல், தாடைதாழல் எழுந்திருத்தல் ஆகியவை குளித்த பெண்ணின் தோடமாகும்.

*தேயு முடம்பு செயலாலும்*
*சொல்லு முலைப்பால் தானருந்த*
*காயு முடம்பு கண்குழியும்*
*கண்டால் தேறைத் தொளுவிற்*

*தேயும் பிறையாள் தன்னாணைத்*
*தீராத் தோஷ மென்று செப்பு*
*யாயும் வேதத் தளவு கண்டா*
*லகத்தீ சர்தர னருளியதே!* 461

கண்ணில் குழி விழுதல், உடல் மெலிதல், சோர்வடைதல் ஆகிய குறி குணங்கள் பெண் தோடத்தால் பாதிக்கப்பட்ட குழந்தையை வந்தடையும்.

## தோடத்திற்குக் குளிசம்

*அருளியதோ ரின்னமொரு கிரிகை சொல்வேன்*
*அப்பனே பாலருடல் மெலிந்து வாடிச்*
*சிதறுமடா தோஷவகை மார்க்க மெல்லாம்*
*சிதறியே போவதற்குச் சேதி கேளு*
*விரிவான தூதுவளை குப்பை மேனி*
*விளங்குகின்ற குருவிஞ்சி தும்பை தானும்*
*கருதியெடு இவ்வேறு வகையொன் றுக்குக்*
*கனமாகக் குளிசமதாய்க் கருதிக் கூட்டே!* 462

குழந்தையின் உடல் மெலிந்திருப்பதற்கான தோஷத்தை நீக்குவதற்கான கிரிகையைக் கூறக் கேளுங்கள். தூதுவளை, குப்பைமேனி, குருவிஞ்சி, தும்பை இவற்றின் வேர்களைச் சேர்த்து, குளிசமாகச் செய்து கட்டிவிடவேண்டும்.

*கட்டுவாய் திருகுகள்ளி வடக்கு வேரில்*
*காப்பணிந்து ஞாயிறுநாள் பிடுங்கி வந்து*
*திட்டமாய்க் குளிசமுடன் நீர்சொ ரிந்து*
*திறமாகக் கட்டிடவே நோய்கள் தீரும்*
*மட்டாக மூன்றுநாள் நீர்சொ ரிந்து*
*மதலைக்கு அளித்திடவே மயக்க மில்லை*
*தொட்டிருந்த தோஷமெல்லாந் துலைந்தே யோடும்*
*சொன்னபடி குளிசம்நீ சொரிந்தி டாயே!* 463

திருகு கள்ளியின் வடக்கே போகின்ற வேரினை ஞாயிற்றுக்கிழமை எடுத்து குளிசமாகக் கட்டி அதன் மீது

தண்ணீரை விடவேண்டும். இவ்வாறு செய்ய பல நோய்கள் தீர்ந்துவிடும். மூன்று நாட்கள் இவ்வாறே செய்ய குழந்தைக்கு மயக்கமில்லை. தோஷம் நீங்கிவிடும்.

## குளிதோடத்திற்கு நெய்

*சொரிந்திடுவாய் நெய்யுரி நல்லெண்ணை பாதி*
*சுகமான நன்னாரி தண்ணி மிட்டான்*
*பரிந்துபொன் னாங்காணி வகைகழஞ்ச தொன்று*
*பாலகனே ஏலஞ்சி ரகமுங் கூட்டிப்*
*பொருந்தவே ஆவின்பால் வார்த்த ரைத்துப்*
*புகழ்ந்தடுப்பி லேற்றியிதைக் காய்ச்சி வாங்கி*
*திருந்தவே குளிதோஷம் போவ தற்குச்*
*சிறுகரண்டி புகன்றிடவே தெளியுங் கேளே!* 464

நெய் 670 மி.லி., நல்லெண்ணெய் 335 மி.லி. எடுக்க. நன்னாரி, தண்ணீர்விட்டான், பொன்னாங்காணி வகைக்கு 5 கி. எடுக்க. ஏலம், சீரகத்தையும் சேர்த்துப் பசும்பால் விட்டரைத்து மேற்சொன்ன கலவையில் கலந்து காய்ச்சிக் கொள்க. இந்நெய்யை ஒரு கரண்டியளவாகக் கொடுக்க குளிதோடம் நீங்கும்.

## தோடத்திற்குத் திலகம்

*கேளப்பா கெருடனுட கூட்டுக் குள்ளே*
*கிடந்ததொரு முட்டைதோ டெடுத்து வந்து*
*ஆளவே சுட்டதனைச் சாம்ப லாக்கி*
*அப்பனே குழந்தைகட்குத் திலதம் போடு*
*வாழ்கின்ற முளக்கூட்டைச் சுட்ட சாம்பல்*
*மைந்தருக்குத் திலதமிட மயக்கந் தீரும்*
*நாளுமே குளிதோஷம் பட்சி தோஷம்*
*தான்திருந் தப்பாது தயவாய்ச் செய்யே!* 465

கெருடப் பறவையினுடைய கூட்டைப் பார்த்து அதனுள்ளிருக்கும் முட்டையின் தோலை யெடுத்துச் சுட்டு சாம்பலாக்கிக் கொள்க. அதனைக் குழந்தைகட்குத்

திலகமிட்டால் குழந்தைகட்கு வரும் மயக்கம், குளிதோடம், பட்சிதோடம் ஆகிய நோய்கள் தீரும்.

## சாதிலிங்கக் குளிகை

*செய்யவே இன்னமொரு குளிகை கேளு*
*திறமான சாதிலிங்கம் பலந்தா னொன்று*
*அய்யமற்ற வெண்காரம் பலந்தா னொன்று*
*அப்பனே சுத்திசெய்த வாளம் ரெண்டு*
*நைய்யவே பழச்சாற்றில் கல்வத் திட்டு*
*நாற்சாம மரைத்தபின்பு குன்றி போலே*
*எய்யாம லுருட்டியே நிழலு லர்த்தி*
*எந்தெந்த வியாதிக்கும் எடுக்க லாமே!* 466

சாதிலிங்கம், வெண்காரம் வகைக்கு 35 கி., முறையாகச் சுத்தி செய்த நேர்வாளம் 70 கி., எடுத்துக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு ஊற்றி பனிரெண்டு மணிநேரமரைத்து 130 மி.கி. அளவுள்ள உருண்டைகளாய்ச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்க. அதனை நோய்க்குத் தகுந்த அனுபானங்களில் கொடுக்க நலமாகும்.

## சாதிலிங்கக் குழம்பு

*எடுத்திடவே இன்னமொரு சேதி கேளு*
*இயல்பாக மேல்மருந்து னிறைபோல் வாங்கி*
*கொடுத்திடவே குழிக்கல்லி லரைப்புக் கேளு*
*கொம்புத்தேன் விட்டாட்டக் குழம்ப தாக*
*மடுத்திடவே பதங்கண்டு குழம்பு போல*
*வரும்நேரம் நியறிந்து எடுத்துக் கொண்டு*
*வெடிப்பில்லாத் தண்ணீர் கலக்கிக் கொள்ள*
*விதமாகக் குழம்புசுண்டைக் காய்போ லாமே!* 467

சாதிலிங்கம், வெண்காரம் வகைக்கு 35 கி., முறையாகச் சுத்திசெய்த நேர்வாளம் 70 கி. எடுத்துக் குழிக்கல்லில் போட்டு கொம்புத்தேன் ஊற்றி நன்கு அரைக்கக் குழம்பாகும். அதில்

குளிர்ந்த தண்ணீரை ஊற்றிக் கலந்து குழம்பைச் சுண்டைக் காயளவில் உருட்டிக் கொள்ளவும்.

*ஆகுமே சாதிலிங்கக் குழம்பு முண்டை*
*அப்பனே பலபலவாம் வியாதிக் கெல்லாம்*
*போகுமடா சன்னிவகை தோஷ மூர்ச்சை*
*பொருந்திநின்ற நெஞ்சடைப்பு வாய்வு காந்தல்*
*ஏகுமே வயிறெரிவு வயறுதா னூத*
*இயல்பாக இஞ்சிச்சார் தன்னி லுண்ண*
*வேகமுள்ள விஷபாகம் பித்த பாண்டு*
*விட்டோடும் கொடிவேலி வேரி லுண்ணே!* 468

இக்குழம்பினால் செய்யப்பட்ட உருண்டையை இஞ்சிச் சாற்றில் உரைத்துக் கொடுக்க சன்னி வகைகள், தோடம், மூர்ச்சை, நெஞ்சடைப்பு, வாய்வு, காந்தல், வயிறெரிவு, வயிறூதல் ஆகிய நோய்கள் நீங்கும். கொடிவேலி வேரில் இழைத்துக் கொடுக்க விடபாகம், பித்தபாண்டு ஆகியன தீரும்.

### சகல சன்னி, சுரதோஷத்துக்குக் குளிகை

*உண்ணவே இன்னமொரு குளிகை சொல்வேன்*
*உடன்சங்கு சுட்டநீர் பலந்தா னாலு*
*நன்னான சாதிலிங்கம் விராக னாலு*
*நாபிரெண்டு விராகனிடை ஆவின் பாலால்*
*எண்ணியே சாமமது மூன்று ஆட்டி*
*இயல்பாக உளுந்ததுபோ லுண்டை செய்து*
*திண்ணமதாய்ச் சகலநீர்க் கட்டு தோஷம்*
*தீருமடா சுரசன்னி சிதறும் பாரே!* 469

சங்குசுட்ட சாம்பல் 140 கி., சாதிலிங்கம் 16 கி., நாபி 8 கி. எடுத்து பசும்பால் விட்டு ஒன்பது மணி நேரம் அரைத்து 65 மி.கி. அளவு உருண்டைகளாய்ச் செய்து கொள்க. தக்க அனுபானத்தில் கொடுக்க நீர்க்கட்டு வகைகள், தோடம், சுரசன்னி தீரும்.

*பாரப்பா சுரமெல்லாம் போவ தற்கு*
*பச்சையிஞ்சிச் சார்துளசி புட்ட வித்து*
*வாருநீ கையான்சார் தேனில் கொள்ள*
*மறுபடியுந் திப்பிலியு மிளகு வங்கம்*
*சேருவாய் இவ்வகையில் சுரங்கள் போகும்*
*தீர்ந்துபோம் வெகுநோய்க ளின்னந் தானும்*
*மாறில்லாச் சிறுபீளை நீறு முள்ளி*
*வழுதலையுஞ் சுராக்கொடியும் கசாயம் வையே! 470*

இஞ்சிச்சாறு, பிட்டவித்த துளசிச்சாறு, கையாந்தகரைச் சாறு, தேன் இவற்றைச் சேர்த்து அதில் திப்பிலி, மிளகு, வங்கத்தைப் பொடித்துக் கலந்து மேற்சொன்ன குளிகையை இழைத்துக் கொடுக்க சுரங்கள் தீரும். சிறுபீளை, நீர்முள்ளி, வழுதலை, சுராக்கொடி இவற்றைச் சேர்த்து முறைப்படி குடிநீராய்க் காய்ச்சவும்.

*கசாயத்தில் மருந்திதனைக் கொள்ளும் போது*
*கழன்றுவிடும் சயரோகம் நீர டைப்பும்*
*அசையாத தலைநோவு நீர்ச்சு ருக்கு*
*அப்பனே உப்பிசமும் வாய்வுந் தீரும்*
*வசையான தொந்திப்பு மாறிப் போகும்*
*மகத்தான குளிர்சுரங்கள் மன்றுண் டேபோம்*
*நசையாக இந்தமுறை செய்தா யானால்*
*நிசமாக வியாதியெல்லாம் நெகிழும் பாரே! 471*

குடிநீரில் குளிகையை உரைத்துக் கொடுக்க சயம், நீரடைப்பு, தலைவலி, நீர்ச்சுருக்கு, உப்பிசம், வாய்வு, தொந்திப்பு, குளிர் சுரங்கள் ஆகிய நோய்கள் குணமாகும். விருப்பமுடன் இம்மருந்தை உட்கொண்டால் நோய்கள் நீங்கும் என்பதாம்.

## சாதிலிங்கக் கட்டு

*சாதிலிங்கக் கட்டதனைச் சாற்றக் கேளு*
*சாம்பிராணி பலம்ரெண்டு சூடன் ரெண்டும்*
*பேதியா தரைத்திடவே குழம்ப தாகும்*
*பிசகாம லிழைச்சிலை யதனி லூட்டி*

*கோதிலிங்கம் பலமொன்றில் சீலை சுற்றிக்*
*கொளுத்திவிடத் தீயாறச் சீலை வேகும்*
*நீதியாம் லிங்கமது இறுகிக் கட்டும்*
*நிறையவே சீலைசுற்றி எரித்தி டாயே!* 472

சாம்பிராணி, கற்பூரம் இவை இரண்டையும் வகைக்கு 70 கி. எடுத்து ஒன்றாய்ச் சேர்த்து விடாது அரைக்க குழம்பு போலாகும். அதனை மெல்லிய துணியில் போட்டுக் கொள்க. 35 கி. லிங்கத்தை எடுத்து அச்சீலையை அதன்மீது சுற்றிவிட்டு கட்டுக. பின் அதனை தீயிட்டுக் கொளுத்த சீலை வெந்து லிங்கமானது இறுகிப் பின் கட்டாகும்.

*எரித்திடுவாய் சீலைதனை ஊட்டிக் கொண்டு*
*இயல்பாகக் குழம்பதுதா னிருக்க மட்டு*
*முறித்திட்டுப் போகாமல் பிரட்டி வைத்து*
*முக்கியமாய் எரிந்தபின்பு எடுத்துக் கொண்டு*
*தரித்திடவே நெல்லிக்காய்க் கெந்தி தன்னை*
*சாதிக்காய் பலம்ரெண்டும் கரண்டி தன்னில்*
*பொரித்திட்டுப் போகாமல் அனலில் வைத்துப்*
*போட்டெடுக்க லிங்கக்கட்டுப் புதுமை யாமே!* 473

இவ்வாறு பலமுறை சீலையின் மீது குழம்பினை ஊற்றி எரித்துக்கொள்க. பின்பு நெல்லிக்காய்க் கெந்தகத்தையும், சாதிக்காயையும் வகைக்கு 70 கி. சேர்த்துக் கரண்டியில் போடுக. தீயில் வைத்துப் பொரிவதற்கு முன்னரே மேற்சொன்ன லிங்கத்தை அதில் போட்டெடுக்க இலிங்கக் கட்டாகும்.

*புதுமையிதிற் குளிர்சுரங்கள் தோஷம் போகும்*
*பொறுக்காத சன்னிவகை எல்லாந் தீரும்*
*சதிராக வயிற்றிலுள்ள வியாதி தீரும்*
*தரியாது சோகைகா மாலை பாண்டு*
*பதறியே இருக்கின்ற பித்த தோஷம்*
*பாரிலுள்ள மேகமெல்லாம் பறந்தே போகும்*
*பதுமையாய் சூலைகொடு வேலிக் கிசாயம்*
*பாரிஞ்சித் தேனதனில் பருக லாமே!* 474

குளிர்சுரங்கள், தோடங்கள், சன்னிவகைகள், வயிற்று நோய்கள், சோகை, காமாலை, பாண்டு, பித்ததோடம், மேகம் ஆகிய நோய்கள் தீரும். சூலைக்குக் கொடிவேலிக்குடிநீர், இஞ்சி, தேன் இவற்றில் உரைத்துக் கொடுக்கலாம்.

## மேக எரிப்புக்கு மருந்து

*பருத்தியைப் போலி ருக்குந்*
*துத்தியைப் பிடுங்கி வேரை*
*உரித்ததின் தோலை வாங்கி*
*ஒள்ளிய பசுவின் பாலில்*
*கருத்துற வரைத்து நீயும்*
*கருதியே கொள்வீ ராகில்*
*எரிப்பது விட்டுப் பின்னும்*
*மீறும் நோயறுஞ் சுக்காமே!* 475

பருத்தியைப் போலுள்ள துத்தியின் வேரை எடுத்து மேற்றோலைப் போக்கிப் பசுவின் பாலில் அரைத்துக் கொடுக்க மேக எரிவு தீரும்.

## உஷ்ணத்துக்கு அருகு நெய்

*அருகஞ் சாறு நாநாழி*
*ஆன மதுர மெண்கழஞ்சு*
*நறுநெய் நாழி பால்நாழி*
*நன்றா யரைத்துச் சேர்த்தொன்றாய்*
*குறுக வந்த நெய்நக்கக்*
*கோடி கோடி உஷ்ணங்கள்*
*வெறுமை யான வேசையள்போல்*
*விட்டேன் ஒடுஞ் சுகமாமே!* 476

அருகம்புல் சாறு 5.2 லி., நெய், பால் வகைக்கு 1.3 லி. எடுக்க. அதிமதுரத்தை 40 கி. எடுத்துப் பாலில் அரைத்துக் கலந்து கொள்க, அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி கலக்கி அளவறிந்து உள்ளங்கையில் ஊற்றிக் கொடுக்க உஷ்ணங்கள் நீங்கும்.

## சிவனார் வேம்பிலைத் தைலம்

*சுக்கு மஞ்சள் வசம்புள்ளி*
*துய்ய மிளகு குங்கிலியம்*
*ஒக்க வகைக்குச் சரிசமனாய்*
*உரலி லிடித்துச் சமைந்தபொடி*
*அய்க்கக் குன்னி யோனிசூலை*
*ஒழியுமே யோனிமேல் பூசிடவே! 477*

சிவனார் வேம்பு இலை, சுக்கு, மஞ்சள், வசம்பு, உள்ளி, மிளகு, குங்கிலியம் இவற்றை வகைக்குச் சமமாய் எடுத்து உரலில் இடித்துப் பொடித்துக் கொள்க. அதனைத் தேவையான அளவு நெய்சேர்த்துத் தைலம் காய்ச்சி பெண் உறுப்பின் மீது பூச யோனி சூலை குணமாகும்.

*வட்ட முலையாள் வசமாவாள்*
*மாவின் துளிர்போல் நிறமாகும்*
*பட்ட புண்ணுங் கடிவிஷமும்*
*பாசும் பிளப்பு மிவைத் தீரும்*
*குட்ட வகைகள் பதினெட்டும்*
*குன்மந் தீரும் விஷந்தீரும்*
*சிட்டா கேளீர் சிறுகாலே*
*சிவனார் வேம்பு தின்றாலே! 478*

பெண்ணானவள் நினைத்தவர் வசமாவாள். அவர் சொற்படி நடப்பாள். மாந்துளிர்போல் உடல் வண்ணமடையும். சிவனார் வேம்பிலை தைலம் தடவி சிவனார் வேம்பிலையையும் உடன் சேர்த்து உட்கொள்ள புண், விடக்கடி, பதினெட்டு வகை குட்டம், குன்மம், விட வகைகள் ஆகியவை தீரும்.

## மண்டை நோய்க்கு நசியம்

*தின்னுஞ் சுக்கு மரமஞ்மள்*
*சேர்ந்த மிளகு கறிமஞ்சள்*
*மண்ணு திப்பிலி கடலினுரை*
*மகிழ்வெண் கார மிலுப்பைவிரைக்*

*கண்ணித் துவைத்து நல்லெண்ணை*
*காய்ச்சி நாசி தன்னில்விட*
*எண்ணு முள்ள மண்டைநோய்*
*ஏகு முருங்கை வேர்வாங்கே!* 479

சுக்கு, மரமஞ்சள், மிளகு, கறிமஞ்சள், திப்பிலி, கடல்நுரை, வெண்காரம், இலுப்பை விதை ஆகிய மருந்துப் பொருட்களை நன்கு இடித்து ஒன்றிரண்டாகச் செய்து கொள்க. நல்லெண்ணெயில் இதனைப் போட்டுக் காய்ச்சி பக்குவத்தில் வடித்து வைத்துக் கொள்க. வடிகட்டிய எண்ணெயை மூக்கில் ஓரிரு துளிகள் விட மண்டை வலி தீரும்.

## சூலைக்குச் சூரணம்

*முருங்கைக் கிழங்கு கொடிக்கழலை*
*முதிர்சா ரட்டை வேருள்ளி*
*நெருங்கத் துவைத்து வசம்புடனே*
*நெருப்பைப் பொருவுங் கொடிவேலி*
*யொருங்கத் தேய்த்த பெருங்காய*
*முதிரவச் சனவே தான்கொள்ள*
*மருங்கை சூழ்ந்த தினமடவீர்*
*வைத்துச் சூலை இகழ்ந்திடுமே!* 480

முருங்கைவேர், கொடிக்கழற்சி, முதிர்ந்த சாரட்டைவேர், உள்ளி ஆகியவற்றை நைய இடித்துக் கொள்க. வசம்பு, கொடிவேலி, பெருங்காயம் இவற்றையும் உடன் பொடித்துச் சேர்த்து உட்கொள்ள சூலை நீங்கும்.

## பத்திய வர்க்கம்

*கிள்ளுங் கீரை சிறுகீரை*
*கிளர்ந்த முருங்கைக் காயரும்பாம்*
*புள்ளிப் பட்டை விளாவாரை*
*பொன்னாங் கண்ணி முள்ளியுமாம்*
*வள்ளி யான சுரைக்கொழுந்து*
*வளருங் குறிஞ்சா விலையாகும்*

*வள்ளைத் துளிரும் சுண்டையுமாம்*
*மருந்து தின்னும் போதுமக்கே!* 481

கிள்ளுங்கீரை எனப்படும் அரைக்கீரை, சிறுகீரை, முருங்கைக்காய், புள்ளிப்பட்டை, விளா, ஆவாரை, பொன்னாங்காணி, முள்ளி, சுரையின் கொழுந்து, குறிஞ்சா இலை, வாழைக்கச்சல், சுண்டைக்காய் ஆகிய உணவுப் பொருட்கள் மருந்துண்ணும் போது கொள்ளும் பத்தியப் பொருட்களாகும்.

## குடல் வாதத்துக்கு மருந்து

*பெருக்க விங்கி வயிர்வலித்தால்*
*பின்னு மருந்த மருந்ததுகேள்*
*நெருக்கத் தட்டித் தழுதாழை*
*நேரே யுழக்குச் சாறதனில்*
*அரித்துக் குடிக்க எண்ணெயுடன்*
*அகலுங் காணும் குடல்வாதம்*
*சுருக்குக் காணு மிந்தமுறைத்*
*துரித மாகச் சுக்கெடுமே!* 482

தழுதாழையை அரைத்துச் சாறெடுத்துக் கொள்க. நல்லெண்ணெயை, வடிகட்டிய 325 மி.லி. சாற்றுடன் கலந்து குடிக்க வயிறு பெருத்தல், வீங்கி வலித்தல், குடல்வாதம் ஆகிய நோய்கள் தீரும்.

## சுக்குக் குடிநீர்

*சுக்கு காய்ச்சி யுண்பிரால்*
*சூலை வாதஞ் சுரதோஷம்*
*நிக்கும் நெஞ்சில் கரிப்பதுவும்*
*நெரித்த பித்தம் ஏப்பம்போம்*
*தக்க தலையில் நீரிரத்தம்*
*தலையில் நோவும் வாய்வும்போம்*
*மிக்க இவையே காய்ச்சியுண்ண*
*விரும்புங் காது வலிதீரும்!* 483

சுக்கினை இடித்து நீர்விட்டு காய்ச்சிக் கொடுக்க சூலை, வாதம், சுரதோடம், நெஞ்சு கரிப்பு, அதிகமான பித்தம், ஏப்பம், தலையில் நீர் அதிகமாய் இருத்தல், தலைவலி, வாய்வு, காதுவலி ஆகியவை தீரும்.

## கர்ப்ப விப்புருதிக்கு மருந்து

*திருமடா கெர்ப்பவிப் புருதி தீர*
*செகத்திலுள்ள பலகரையைச் சுட்ட பற்பம்*
*விறுடைய சாதிக்காய் பாதி கூட்டி*
*விளைந்ததொரு பழச்சாற்றா லரைத்துக் கொண்டு*
*தூரமாய்ப் போனதொரு மூன்று நாளும்*
*சுகமாக அருந்திடவே ரோகந் திரும்*
*மாறாமல் மூன்றுநாள் புளியு முப்பும்*
*மங்கையர்க்குப் பத்தியமாய் வைத்தி டாயே!* 484

பலகரை சுட்டசாம்பல், பாதிசாதிக்காய் எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து மாதவிடாயான மூன்று நாட்களும் குடிக்க கர்ப்ப விப்புருதி தீரும். அந்த மூன்று நாட்களுக்கும் உப்பு, புளியை நீக்க வேண்டும்.

## தேங்காய் நெய் விவரம்

*வைத்திடவே யின்னமொரு மருந்து கேளு*
*வளர்கின்ற கோவைக்காய் நாலு வாங்கி*
*முற்றியதோர் காயதனைத் துருவி வைத்து*
*முள்சதிரக் கள்ளிமடல் கொண்டு வந்து*
*கத்தியினால் கண்டகண்ட மாய்த ரித்துக்*
*கவியநீர்ப் பானைவிட்டு வேடு கட்டி*
*சுத்திசெய்வாய் நேர்வாளம் நஞ்சு தள்ளி*
*தூக்குபல மொன்றுபஞ்ச திரவியங் கூட்டே!* 485

கோவைக்காய் நான்கெடுத்துத் துருவிக் கொள்க. சதுரக்கள்ளி மடலைத் துண்டுகளாய் வெட்டிக் கொள்க. இவை யிரண்டையும் தண்ணீர் பானைக்குள் போட்டு வேடுகட்டி எடுத்துக் கொள்க. நேர்வாளத்தைச் சுத்தி செய்து 35 கி.

எடுத்துக் கொள்க. பால், தயிர், நெய், கோமயம், சாணம் ஆகியவற்றை வகைக்கு 5 கி. எடுக்க.

*கூட்டிடுவா யிவ்வகைகள் கழஞ்ச தாகக்*
*கொட்டையுடன் கலந்துருவு தேங்காய்க்குள்ளே*
*நாட்டமாய் வைத்துமேல் சட்டி கொண்டு*
*நன்றாக மூடியே தீயெ ரித்து*
*வாட்டமற வெந்தபின்பு எடுத்துக் கொண்டு*
*வகையுடனே மருந்ததனைத் துண்டு பண்ணி*
*ஆட்டுதற்குத் தேங்காய்ப்பால் பிழிந்து கொண்டு*
*அரைத்துவைத்துத் தண்ணியுடன் கூடச் சேரே!* 486

அனைத்தையும் தேங்காய்க்குள் வைத்து சட்டியில் அமைக்க. மறு சட்டியினால் மூடி தீ எரித்துக் கொள்க. நன்கு வெந்த பிறகு எடுத்து அம்மருந்தினைத் தூளாய்ச் செய்து தண்ணீர் சேர்த்து அரைத்துக் கொள்க. தேங்காய்ப் பாலைப் பிழிந்து வைத்துக் கொள்க.

*சேருநீ மருந்து முற்றுஞ்சேர்த்த ரைத்துத்*
*தேங்காய்ப்பா லுடன்கலந்து புங்கம் பாலும்*
*வாருழக்குப் பாலதனைக் கூடச் சேர்த்து*
*வைத்தடுப்பி லேற்றிதனை வடித்து நெய்யை*
*மீறாமற் காசிடைநெய் உள்ளே கொள்ள*
*வெந்திறக்குங் கடுகதனைக் கழஞ்சு வீதம்*
*தீரமுடன் மாலையுண்ணத் தீரும் நோய்கேள்*
*செப்புறேன் புளியுப்புப் புகையுந் தள்ளே!* 487

அரைத்த மருந்தையும் தேங்காய்ப் பாலையும், 325 மி.லி. புங்கம் பாலையும் சேர்த்துக் காய்ச்சி, பக்குவத்தில் வடித்துக் கொள்க. அந்த நெய்யை 4 கி. வீதம் உட்கொள்ள வேண்டும். அடியில் உள்ள கடுகை 5 கி. வீதம் மாலையில் மட்டும் சாப்பிடவும். புளி, உப்பு, புகையிலை நீக்கவும்.

*தள்ளுமே பக்கசூலை யோனி சூலை*
*தாங்காத பேராமை சோகை பாண்டு*
*கொள்ளுகின்ற நீராமை மூல வாய்வும்*
*கூசியே இம்மருந்தால் குலைந்து போகும்*

*வள்ளலே விப்புருதி கூட்டு தீர*
*வகையாக இன்னமொரு மருந்து கேளு*
*எள்ளெண்ணை படியரையா மருந்து கேளு*
*இயல்வான மாவிலங்கு வகைமூன் றாமே!* 488

பக்கசூலை, யோனிசூலை, பேராமை, சோகை, பாண்டு, நீராமை, மூல வாய்வு ஆகிய நோய்கள் தீரும். புளி, உப்பு, புகை இவற்றை நீக்க வேண்டும்.

## விப்புருதி, அரையாப்பு, பிளவை வீக்கத்துக்கு

*மூன்றதுகேள் வேர்க்கொழுந்து பட்டை கூட்டு*
*மூக்குறச் சாரணைவேரும் எட்டி வித்துந்*
*தோன்றிடவே குன்றிமணிக் கழல் பருப்பு*
*துலங்குந் தைவேளைவேர் குப்பை மேனி*
*வேண்டிடுமே கொடிவேலி வசம்பு சுக்கு*
*வெள்ளையுள்ளி மிளகுடனே கழஞ்சு வீதம்*
*போன்றிடவே இதையரைத்து எண்ணைக் குள்ளே*
*பிசகாமல் போட்டிதனை வடித்தி டாயே!* 489

நல்லெண்ணெய் 675 மி.லி., மூன்று வகைகளையுடைய மாவிலிங்கத்தின் வேர், கொழுந்துபட்டை, மூக்கரட்டைச் சாரணைவேர், எட்டிவித்து, குன்றிமணி, கழற்சிப் பருப்பு, தைவேளைவேர், குப்பைமேனி, கொடிவேலி, வசம்பு, சுக்கு, வெள்ளைஉள்ளி, மிளகு இவற்றை வகைக்கு 5 கி. எடுத்து நன்கு அரைத்துக் கொள்க. எண்ணெயில் போட்டுக் காய்ச்சி பதத்துடன் வடித்துக் கொள்க.

*வடித்துவைத்த எண்ணெய்தனைக் கரண்டி கொள்ள*
*மயமாக உள்ளருந்தி விக்கந் தன்னில்*
*எடுத்திதனைப் பூசிடவே கண்டிப் பெல்லா*
*மிருந்திடம்விட் டப்பாலே ஏகிப் போகும்*
*தொடுத்ததொரு அரையாப்பு பிளவை விக்கம்*
*தொடைவாழை சிரங்கு செவ் வாப்பு சிலந்தி*
*மடுத்திட்டுப் போவதற்கு மேலும் பூசி*
*மறக்காம லுள்ளருந்த மறுகிப் போமே!* 490

இவ்வெண்ணெயை ஒரு கரண்டி அளவு உட்கொண்டு, வீக்கத்தின் மேல் பூசிவர அரையாப்பு, பிளவை, வீக்கம், துடைவாழை, சிரங்கு, செவ்வாப்பு, சிலந்தி ஆகிய நோய்கள் தீரும்.

### கழல்வாதம், அண்டவாதத்துக்கு எண்ணெய்

*வேலிப் பருத்தி முடக்கொற்றான்*
*மிகுந்த நொச்சி கொடிக்கள்ளி*
*கோலக் கொழுந்து வொருபடிச்சார்*
*கூறவெங் காரங் காயமுள்ளி*
*வாலச் சிற்றா மணக்கெண்ணை*
*வைத்தே உண்ணக் குடல்குன்மம்*
*சாலப் பழகுங் கழல்வாதந்*
*தரியா தேகுங் கண்டாயே!* 491

வேலிப்பருத்தி, முடக்கொத்தான், நொச்சி, கொடிக்கள்ளி இவற்றின் சாறுகளை வகைக்கு 1.3 லி., எடுக்க. வெங்காரம், பெருங்காயம், உள்ளி இவற்றையும் சேர்க்க. சிற்றாமணக் கெண்ணெயை தேவையான அளவுடன் கலந்து காய்ச்சி வடித்து அளவறிந்து கொடுக்க குடல் குன்மம், கழல்வாதம் தீரும்.

*கண்டவட்டத் துத்திவே ரிலவங் கத்தோல்*
*கற்கண்டு கொத்துமல்லி சரியாய் வாங்கி*
*துண்டாக வேயிடித்துத் தூள தாக்கிச்*
*சுத்தசில மிருநாழி அதிலே விட்டு*
*விண்டாம லெட்டொன்றாய்க் காய்ச்சிக் கொண்டு*
*வேடுகட்டி இடித்தநீர் கொள்வி ராகில்*
*மண்டிடவே சயகாச மிரைப்புத் தீரும்*
*வறட்சியினால் புகைச்சலது மாறிப் போமே!* 492

வட்டத்துத்திவேர், இலவங்கப்பட்டை, கற்கண்டு, கொத்துமல்லி இவற்றைச் சமன் எடுத்துத் துண்டுகளாக வெட்டி இடித்துத் தூளாக்கிக் கொள்க. அதில் 2.6 லி. தண்ணீர் விட்டு எட்டில் ஒரு பங்காய்க் காய்ச்சி வடிகட்டிக் கொள்க.

இக்குடிநீரைக் கொடுக்க சயம், காசம், இரைப்பு, வறட்சியினால் வரும் புகைச்சல் தீரும்.

## கிருமிக்கு எண்ணெய்

*மாறிப்போந் திரிகடுகு திரிப லாதி*
*மகத்தான வாய்விளங்கம் முத்தக் காசு*
*கூறுபடச் சமனாகப் பொடியாய்ப் பண்ணி*
*கூட்டியே அரிசிவகை சுத்தி செய்து*
*விறுடனே முன்பொடிக்கு ரெண்டு பங்கு*
*விதமாகப் பொடித்தெடுத்து கூடச் சேர்த்து*
*பேறுபட வடிகொண்டு எண்ணை கொள்ளப்*
*பின்பாரா தோடுமடா கிருமி போமே!* 493

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், வாய்விடங்கம்,கோரைக்கிழங்கு ஆகியவற்றைச் சமனாக எடுத்துச் சூரணித்துக் கொள்க. அரிசி வகையைச் சுத்தி செய்து முன் சூரணித்ததற்கு இரண்டு பங்கு இதனையும் எடுத்து அனைத்தும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி, சாப்பிட்ட பின்னர் விளக்கெண்ணெய் சாப்பிட கிருமி ஒழியும்.

## சர்த்தி விக்கலுக்கு மருந்து

*போகவே சர்த்திக்குப் பருத்தி வித்துப்*
*புகலேலம் நெற்பொரி திப்பிலியுங் கூட்டு*
*ஏகமுடன் சமனாகத் தூள தாக்கி*
*ஏற்கவே சர்க்கரையும் சரியாய்ச் சேர்த்து*
*வேகமுடன் வெருகடிதான் தேனில் கொள்ள*
*விட்டேகுஞ் சர்த்திவிக்கல் குடல்பி ரட்ட*
*ஆகனுடன் நெஞ்செரிப்பு யிவைகட் கெல்லாம்*
*அப்பனே தீர்ந்துபோ மதற்குச் செய்யே!* 494

பருத்தி விதை, ஏலம், நெற்பொரி, திப்பிலி, இவற்றைச் சமமாக எடுத்துச் சூரணம் செய்து கொள்க. இச்சூரணத் திற்குச் சமமாய் சர்க்கரை சேர்த்துக் கொள்க. ஐந்துவிரலளவு

சூரணத்தைத் தேனில் கலந்து உட்கொள்ள விக்கல், குடல் பிரட்டல், நெஞ்செரிவு ஆகியவை தீரும்.

## காமாலையில் வரும் மலக்கட்டு போக

*செய்யவே தேங்காயைத் திருகிப் பாலைத்*
*திரளவே காய்ச்சிவிளக் கெண்ணை சேர்த்து*
*மெய்யாகச் சமன்கொண்டு கொள்வீ ராகில்*
*விட்டுவிடும் மலக்கட்டுக் கிருமி யெல்லாம்*
*வைய்யவே கடுக்காயுங் கரிப்பான் சேர்த்து*
*மல்லிடித்துப் பிட்டவியல் பிழிந்து கொண்டு*
*தைய்யலே கோமியமுஞ் சரியாய்க் கொண்டால்*
*தவறுங் காமாலை மலக்கட்டு போமே!* 495

தேங்காயைத் துருவி பால் எடுத்துக் காய்ச்சிக் கொள்க. அதற்குச் சமமாய் விளக்கெண்ணெய் சேர்த்துக் கொடுக்க மலக்கட்டு நீங்கி மலக்கிருமி விழும். கடுக்காய், கையாந்தகரை சாறு சேர்த்துப் பிட்டவித்துப் பிழிந்து அதற்குச் சமமாக கோமியமுஞ் சேர்த்துக் கொடுக்க காமாலையில் வரும் மலக்கட்டு தீரும்.

## வல்லாதி அரையாப்புக்கு எண்ணெய்

*போகுமடா வாதம்வல் லாதி கண்டால்*
*புகழ்பரங்கிப் பட்டைஎள்ளு கருப்புக் கட்டி*
*வாகாகச் சேங்கொட்டை ஒக்கச் சேர்த்து*
*வகைவகைக்குப் பலம்நாலாய் வாங்கிக் கொண்டு*
*சோகமாந் திப்பிலிசா திக்காய் ஏலம்*
*சுகமான பத்திரியுங் கிராம்பு கோட்டம்*
*ஏகமுட னிம்மருந்து ரெண்டுஞ் சேர்த்து*
*இத்தனையு மொன்றாக இடித்துச் சேரே!* 496

பரங்கிப்பட்டை, எள், கருப்புக்கட்டி, சேங்கொட்டை இவற்றை வகைக்கு 140 கி. எடுத்துக் கொள்க. திப்பிலி, சாதிக்காய், ஏலம், பத்திரி, கிராம்பு, கோட்டம் இவற்றைச் சம அளவெடுத்து அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொள்ளவும்.

*சேர்த்திடித்து வைத்ததனைக் கொட்டப் பாக்காய்*
*செலுத்துவா யிருநேரம் தின்னத் தீரும்*
*கூற்றுவன்போல் வந்ததொரு அண்ட வாதம்*
*குதித்தோடும் மேகமெல்லாம் கூடப் போகும்*
*விற்றிருந்த அரையாப்புக் கெண்ணை கேளு*
*வெள்ளைச்சிப் பாலொன்று எண்ணெய் ரெண்டு*
*பாத்துமா விலிங்குவே ரிலையுங் கூட்டுப்*
*பதறாமல் தைவேளை துருசுங் கூட்டே!* 497

சூரணம் செய்து 2.2 கி. அளவு காலை, மாலை இரு நேரமும் உட்கொள்ள அண்டவாதம், மேகம் இவை தீரும். தாய்ப்பால் ஒரு பங்கு, நல்லெண்ணெய் இரண்டு பங்கு எடுத்துக் கலந்துகொள்க. மாவிலங்கு வேர், இலை, தைவேளை, துருசு எடுக்கவும்.

*கூட்டிடுவாய் வசம்புசுக்கு சித்திர மூலம்*
*குறையாமல் வெள்ளுள்ளி சமனாய்ச் சேர்த்து*
*வாட்டமறப் பெருங்காயம் விராக னொன்று*
*மறக்காமல் இவையெல்லாம் நறுக்கிச் சேர்த்து*
*தாட்டிகமாய் முன்னெண்ணெய் பாலுஞ் சேர்த்து*
*தயவாக அடுப்பேற்றி எரித்துக் காய்ச்சி*
*மூட்டிடுவா யிருநேர மஞ்சு நாளு*
*முக்கியமாய்ப் புளிபுகையு முழுதுந் தள்ளே!* 498

வசம்பு, சுக்கு, சித்திரமூலம், வெள்ளுள்ளி இவற்றை நறுக்கிச் சமமாய்ச் சேர்த்துக் கொள்க. 4 கி. பெருங்காயத்தையும் சேர்த்து மேற்சொன்ன கலவையில் கலந்து காய்ச்சிக் கொள்க. அதனைக் காலை, மாலை இரண்டு நேரமுமாக ஐந்து நாட்களுக்குக் கொடுக்க அரையாப்புத் தீரும். புளி, புகையை நீக்குக.

## விரணத்திற்குக் குழம்பு

*தள்ளாதே சாதிலிங்கந் துரிசு துத்தந்*
*தானிரத கற்பூரம் ரசமுங் கூட்டி*
*வெள்ளையுள்ளி கடுக்காயுங் காசுக் கட்டி*
*மேலான களிப்பாக்குஞ் சமனாய்ச் சேர்த்து*

*உள்ளதெல்லாம் நெய்விட்டு அரைத்து நன்றாய்*
*உடன்தண்ணீர் கூடவிட்டு அலசிப் போட்டுத்*
*துள்ளவே சேர்த்தரைத்துச் சிமிளில் வைத்துத்*
*துலங்கவே புண்ணிலிடத் துஞ்சிப் போமே! 499*

சாதிலிங்கம், துருசு, துத்தம், கற்பூரம், இரசம், வெள்ளை உள்ளி, கடுக்காய், காசுக்கட்டி, களிப்பாக்கு இவற்றைச் சமமாய் எடுத்துக் கொள்க. தேவையான அளவு நெய் சேர்த்தரைத்து தண்ணீரையும் உடன் சேர்த்து அலசிக் கொள்க. நன்கு அரைத்துச் சிமிளில் வைத்து வேண்டியபோது புண்ணில் இட குணமாகும்.

## பித்தத்திற்கு லேகியம்

*துஞ்சாத திப்பிலியுஞ் செவிய மேலஞ்*
*சிறுதேக்கு லவங்கத்தோல் லவங்கப் பத்திரி*
*மிஞ்சாத தாளீச பத்திரியுஞ் சுக்கு*
*மிளகுடனே வாய்விளங்கம் நறுக்கு மூலம்*
*மஞ்சாத தக்கோல மக்கிரா காரம்*
*அதிமதுரங் கண்டங்கத் திரியுங் கோஷ்ட்டம்*
*வஞ்சமிலாச் சீரகமுஞ் சிற்ற ரத்தை*
*வகைக்கஞ்சு விராகனிடை சேர்த்தி டாயே! 500*

திப்பிலி, செவியம், ஏலம், சிறுதேக்கு, இலவங்கப் பட்டை, இலவங்கப் பத்திரி, தாளிசபத்திரி, சுக்கு, மிளகு, வாய்விடங்கம், நறுக்கு மூலம், தக்கோலம், அக்கிராகாரம், அதிமதுரம், கண்டங்கத்திரி, கோட்டம், சீரகம், சிற்றரத்தை இவற்றை வகைக்கு 20 கி. எடுத்துக் கொள்க.

*சேர்த்திடுவாய் சக்கரையும் பலம தஞ்சு*
*சேர்த்திடுவாய் ஆவின்நெய் படிதா னொன்று*
*வார்த்திடுவாய் தேனுமரைப் படிய தாக*
*மகத்தான லேகியம்போல் கிண்டிக் காய்ச்சி*
*வீற்றிருந்த பதங்கண்டு இறக்கி வைத்து*
*விருப்பமுடன் புன்னைக்கா யளவு கொள்ள*

*மாற்றாத கிறுகிறுப்பு பித்தந் தீரும்*
*வளமான பித்தமெல்லா மஞ்சிப் போமே!* 501

சர்க்கரை 175 கி., பசுநெய் 1.3 லி., தேன் 675 மி.லி. எடுத்துக் கலந்து அதில் மேற்சொன்ன மருந்துச் சரக்குகளை இடித்துச் சூரணித்து ஒன்று சேர்த்து லேகியமாய்க் கிளறி பதத்துடன் இறக்கிக் கொள்க. அதனைப் புன்னைக் காயளவு உட்கொள்ள கிறுகிறுப்பு, பித்தம் தீரும்.

## விஷத்துக்குக் குழம்பு

*அஞ்சவே வகைகேளு சுரையி னோடு*
*அடுத்தபுடல் கொம்மட்டி திமட்டி கூட*
*பிஞ்சுக்காய் சமூலமுடன் நறுக்கிக் கொண்டு*
*பின்னையுமோ நிம்பெண்ணை தன்னைச் சேர்த்து*
*மிஞ்சாமற் சூதமொரு கழஞ்சு விட்டு*
*வேடுகட்டிப் பத்துநாள் புதைத்து வைத்து*
*துஞ்சாம லெடுத்தரைத்து லோகச் செம்பில்*
*சூட்டியே வைத்துநீ விஷத்தைத் தீரே!* 502

சுரை, புடல், கொம்மட்டி இவற்றின் சமூலத்தை எடுத்து நறுக்கிக் கொள்க. வேப்பெண்ணெய், சூதம் 5 கி. சேர்த்து துணியினால் வேடுகட்டி பத்து நாட்கள் குழியில் புதைத்துக் கொள்க. பின் எடுத்து அரைத்து, செம்புப் பாத்திரத்தில் வைத்துக் கொள்க.

*திருமே நாகமெட்டும் விரிய னாறுஞ்*
*சேர்ந்ததொரு சில்விஷங்கள் மாற்று விக்கும்*
*நீரிலே யானதுவெற் றிலையில் வைத்து*
*நினவாகச் சிறுபயிற்றி னளவாய்க் கொள்ளு*
*பாருநீ கடிகண்டு கொடுத்தா யானால்*
*பறந்துவிடும் விஷங்களெல்லாங் கடலிற் புக்கும்*
*சேருநீ இம்மருந்து ஒன்றே போதும்*
*செத்தவர்கள் பிழைப்பார்கள் திண்ணந்தானே!* 503

தண்ணீரில் அல்லது வெற்றிலையில் 32 மி.கி. அளவு குழம்பைச் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க எட்டுவகை நாகங்கள் ஆறுவகை விரியன்களின் விடங்கள், கடிவிடங்கள் தீரும். இம்மருந்தினால் இறந்தவர்கள் பிழைப்பார்கள் என்பது உறுதி.

## சகல வாய்வுக்கும் அசனத்தின் மேல் மருந்து

*திண்ணமாங் கறியுப்பு வளைய லுப்பு*
*சிறந்ததொரு கல்லுப்பு சத்திச் சாரம்*
*வண்ணமுள்ள நவச்சார மெவச்சா ரந்தான்*
*வாய்விளங்கம் பெருங்காயஞ் சித்திர மூலம்*
*நண்ணிடுவாய் திரிகடுகு சாதிக் காயும்*
*நலமான மரமஞ்சள் செவ்வியங் கூட்டி*
*பண்ணுகருஞ் சீரகமும் வசம்பு ஓமம்*
*படருந் திப்பிலிமூலம் மருள்கி ழங்கே! 504*

கறியுப்பு, வளையலுப்பு, கல்லுப்பு, சத்திச்சாரம், நவச்சாரம், எவச்சாரம், வாய்விடங்கம், பெருங்காயம், சித்திரமூலம், சுக்கு, மிளகு, திப்பிலி, சாதிக்காய், மரமஞ்சள், செவ்வியம், கருஞ்சீரகம், வசம்பு, ஓமம், திப்பிலிமூலம், மருள்கிழங்கு எடுக்க.

*கிழங்குவெள்ளைச் சாரணையு முக்கா வேளைக்*
*கிருபையுட னொருநிறையாய் நிம்பச் சாற்றில்*
*விளங்கவே தானரைத்துக் கழஞ்சு விதம்*
*விருப்பமுட னச்சாற்றில் மேல ருந்த*
*களங்கற வாய்வெல்லாம் காணா தோடும்*
*கட்டிநின்ற மலங்களெல் லாம்கெட் டேகும்*
*புளங்கவே குளிகைதனை வைத்துக் கொண்டு*
*போசனத்தின் மேலருந்தப் போகும் வாய்வே! 505*

வெள்ளைச் சாரணை, முட்காவேளை, ஆகிய மருந்துப் பொருட்களை வகைக்குச் சம அளவெடுத்து வேப்பஞ்சாற்றில் அரைத்துக் கொள்க. 5 கி. அளவெடுத்துக் குளிகைகளாய்ச் செய்து கொள்க. ஒரு குளிகையை எடுத்து வேப்பஞ்சாற்றில் கொடுக்க வாய்வு நீங்கும். மலங்களும் கசடும் தீரும்.

## சூலைக்கட்டு, இடுப்பு நோய்க்குக் கோதும்பை மருந்து

*வாயுவினால் வாதத்தின் பிடிப்புக் கெல்லாம்*
*மாவாகக் கோதும்பை படியிற் பாதித்*
*தோயவே பரங்கியப்பா யிடித்துத் தூளாய்*
*சேரவே அந்திடைக்குச் சமனாய்ச் சேர்ந்து*
*காயான திருகுகள்ளி நறுக்கிப் பானை*
*கனத்ததொரு மிடாவிலிட்டுத் தண்ணீர் விட்டு*
*ஓயாமல் தீயெரித்து அடுப்பி லேற்றி*
*உத்தமனே வேடுகட்டி மாவை வைய்யே!* 506

கோதுமை 675 கி. எடுத்துத் தூளாய்ச் செய்து கொள்க. பரங்கிப்பட்டையை இடித்து அதே அளவு சூரணத்தை எடுத்துக் கொள்க. திருகுகள்ளியை நறுக்கி கனமான பாத்திரத்திலிட்டு தண்ணீர் ஊற்றிக் கொள்க. மாவைத் துணியில் வேடுகட்டி வைத்து அடுப்பெரித்து வேக வைத்துக் கொள்க.

*வைத்திட்ட மாவதனை வெந்தெ டுத்து*
*மகிமையாய் வெருகடிதான் மென்று தின்றால்*
*ஏய்த்திட்ட பிடிப்பெல்லா மெங்கே போச்சு*
*இப்படியே மூன்றுநா ளருந்தும் போது*
*நைத்திட்ட சூலைமுதல் கீலுச் சூலை*
*நடுக்கியதோர் பிடிப்புடனே இடுப்பு நோவு*
*மெய்த்திட்ட உடம்பெல்லாம் வச்சிர மாகும்*
*மீறாகத் திருமிது நுணுக்கந் தானே!* 507

மாவு நன்கு வெந்த பிறகு எடுத்து, மூவிரலளவு மூன்று நாட்கள் உட்கொண்டால் பிடிப்புகள், சூலைக்கட்டு, கீல் சூலை, இடுப்பு வலி ஆகியவை தீரும். உடல் பலப்படும்.

## திப்பிலாதிச் சூரணம்

*நுணுக்கியதோர் திப்பிலியும் பலந்தா னெட்டு*
*நுவலுங்கோ தும்பைரெண்டு யரத்தை யஞ்சு*
*இணக்கமுடன் மிளகுசுக்கு செவியம் நெல்லி*
*இனிப்பான அதிமதுரம் திப்பிலி மூலம்*

*மணக்குஞ்சி ரகமிரண்டு ஏலங் கூட்டி*
*வாய்த்தசிறு தேக்குடனே நறுக்கு மூலம்*
*இணக்கமுடன் குராசானி அமுக்கு ராவும்*
*ஏற்கையுள்ள வால்மிளகு கூகை நீரே!* 508

திப்பிலி 280 கி., கோதுமை 70 கி., அரத்தை 175 கி., மிளகு, சுக்கு, செவியம், நெல்லி, அதிமதுரம், திப்பிலி மூலம், நற்சீரகம், கருஞ்சீரகம், ஏலம், சிறுதேக்கு, நறுக்குமூலம், குரோசாணி ஓமம், அமுக்கிரா, வால்மிளகு, கூகைநீர் எடுக்க.

*மிளகுடனே கடுக்காய் தாளிச பத்திரி*
*மீறாமல் வகைக்கெட்டு விராகன் வாங்கி*
*அழகியதோ ரிலவங்கப் பட்டை பத்திரி*
*அதினுடைய பூவுடனே சாதிக் காயும்*
*பழகாத சாதிபத்திரி விராக னஞ்சு*
*பாகயிவை வகைக்குப் பரித்தெ டுத்து*
*இளவறுப்பாய் வறுத்திதனைப் பொடிய தாக்கி*
*இனமுடன் வடிகொண்டு வைத்துக் கொள்ளே!* 509

கடுக்காய், தாளிசபத்திரி இவற்றை வகைக்கு 32 கி. எடுத்துக் கொள்க. இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, இலவங்கப்பூ (கிராம்பு), சாதிக்காய், சாதிபத்திரி, பாகலிலை இவற்றை வகைக்கு 20 கி. எடுத்து இளவறுப்பாய் வறுத்துப் பொடித்து வடிகட்டி முறைப்படி சூரணம் செய்து கொள்க.

*வைத்திட்ட பொடியுடனே கரிசலாங் கண்ணி*
*வாடாத தூதுவளை கண்டங் கத்திரி*
*மெய்த்திடவே நிழலுலர்த்திச் சூர ணித்து*
*விளங்கவே வகைக்குக்கால் படியுங் கூட்டு*
*பொய்த்திடவே போகாம லெல்லாங் கூட்டிப்*
*பொருந்தவே கலந்துகொண்டு புனித மாக*
*அத்திட்ட மாகவே வெருகடியுந் தேனில்*
*கலந்துண்ணச் சயமிளை கழன்று போமே!* 510

கரிசலாங்கண்ணி, தூதுவளை, கண்டங்கத்திரி இவற்றை நிழலில் உலர்த்தி இடித்துச் சூரணம் செய்து வகைக்கு 325 கி.

எடுத்து மேற்குறிப்பிட்ட சூரணத்துடன் சேர்த்துக் கொள்க. மூவிரலளவு சூரணத்தைத் தேனில் கலந்து உட்கொள்ள சயம், ஈளை ஆகிய நோய் தீரும்.

## தலைக்கு மிளகெண்ணெய்

*கழன்றிடவே மிளகுபலம் பத்து வாங்கு*
*கஸ்தூரி மஞ்சளுடன் கிராம்பு யேலம்*
*சலந்திருஞ் சிற்றரத்தை மதுரங் கோட்டம்*
*தனிலவங்கஞ் சதகுப்பை தேவ தாரம்*
*புனுகு மரமஞ்சள் சந்தனமுஞ் சுக்கு*
*பொருந்துமஞ்சள் திப்பிலியும் சிறுநா கப்பூ*
*அழகுகார் கோலப்பூடு பலமு மஞ்சு*
*அவினியுடன் பேய்ப்புடலும் யோம மாமே!* 511

மிளகு 350 கி., கத்தூரி மஞ்சள், கிராம்பு, ஏலம், சிற்றரத்தை, அதிமதுரம், கோட்டம், இலவங்கம், சதகுப்பை, தேவதாரம், புனுகு, மரமஞ்சள், சந்தனம், சுக்கு, மஞ்சள், திப்பிலி, சிறுநாகப்பூ, கார்கோலவரிசி ஆகியவற்றை வகைக்கு 175 கி. எடுத்துக் கொள்க.

*ஓமமொடு கருஞ்சீரங் கொத்து மல்லி*
*உடமூலக் கிழங்குடனே அமுக்கு ராவும்*
*நேமமுடன் கருங்குருவாய் இலாமிச் சம்வேர்*
*நேரான நன்னாரி வெட்டி வேரும்*
*நாமமுடன் பலமரையாய் வகைக்குச் சேர்த்து*
*நலமான குங்குமப்பூ செந்து ருக்க*
*மாமடா கோரோசினை செண்ப கப்பூ*
*வரியசா திக்காயும் பீத ரோணி!* 512

அபினி, பேய்ப்புடல், ஓமம், கருஞ்சீரகம், கொத்துமல்லி, கருணைக்கிழக்கு, அமுக்கிரா, கருங்குறுவை அரிசி, இலாமிச்சம் வேர், நன்னாரி, வெட்டிவேர், இவற்றை வகைக்கு 18 கி. எடுத்துக் கொள்க. குங்குமப்பூ, மஞ்சள், கோரோசினை, செண்பகப்பூ, சாதிக்காய், பீதரோகணி ஆகியவற்றை வகைக்கு 10 கி. எடுத்துக் கொள்க.

*பீதரோ கணியுடனே மருந்தி தெல்லாம்*
*பிசகாமல் வகைக்குயிரு கழஞ்சு சேர்த்து*
*சூதங்கார்த் தொட்டிகற் பூர வள்ளி*
*துய்யகரி சாலைதிரு நீற்றுப் பச்சை*
*பேதமில்லா மொசுமொசுக்கை பொன்னாங் காணி*
*பிசகாமல் பொடுதலை வெற்றிலை நொச்சி*
*நீதமுடன் கருநொச்சி கரந்தைச் சாறும்*
*நிம்பழச்சா றிளநீரும் படியிற் பாதி!* 513

சூதம், காத்தொட்டி, கற்பூரவள்ளி, கரிசாலை, திருநீறுப் பச்சை, முசுமுசுக்கை, பொன்னாங்காணி, பொடுதலை, வெற்றிலை, நொச்சி, கருநொச்சி, கரந்தை ஆகியவற்றின் சாறு, எலுமிச்சம்பழச்சாறு, இளநீர் இவற்றை வகைக்கு 675 மி.லி. எடுக்க.

*படியான குறுத்தொட்டி அறுகு வேரும்*
*பருத்ததொரு வில்வவேர் கொம்ப ரக்கு*
*துடியாக வகைக்கு ரெண்டு பலங்கி ஷாயம்*
*துஞ்சவே காய்ச்சிவகை உரியுஞ் சேரு*
*வடிவாக எள்ளெண்ணை படியும் ரெண்டு*
*மருந்தெல்லாங் கிசாயத்தா லாட்டி வாங்கிப்*
*புடமாக அடுப்பேற்றிச் சட்டி தன்னில்*
*புழுகுடனே பூரமது பொடித்துப் போடே!* 514

குறுந்தொட்டி, அறுகுவேர், வில்வவேர், கொம்பரக்கு இவற்றை வகைக்கு 70 கி. எடுத்துக் காய்ச்சி 675 மி.லி. சேர்த்துக் கொள்க. நல்லெண்ணெய் 2.6 லிட்டர் எடுக்க. மேற்குறிப்பிட்ட மருந்துகளைக் குடிநீர்விட்டு அரைத்து அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. புழுகு, பூரம் இவற்றைப் பொடித்துச் சேர்த்து பக்குவத்துடன் இறக்கி வடித்துக் கொள்க.

*போட்டேனே முழுகிவர பித்த மெல்லாம்*
*போகுமல்லால் கிறுகிறுப்பு நேத்திர வாய்வு*
*தாட்டிகமா யுட்சுரங்கள் பிரமே கங்கள்*
*தாங்காத மேல்கனப்புக் கைகால் காந்தல்*

*மூட்டுகின்ற மூட்டெல்லாம் கடுப்புத் திரும்*
*முக்கியமாய்த் தீபனமும் பசியு முண்டாம்*
*வாட்டமறச் சனிபுதனு முழுகி வந்தால்*
*மகத்தான சரீரமெல்லாம் வச்சிர மாமே!* 515

இவ்வெண்ணெயைத் தலையில் தேய்த்து முழுக பித்தம் அனைத்தும் நீங்கும். கிறுகிறுப்பு, நேத்திரவாய்வு, உள்சுரங்கள், பிரமேகங்கள், உடல்கனத்தல், கைகால் காந்தல், மூட்டுக் கடுப்பு ஆகிய நோய்கள் நீங்கும். பசியுண்டாகும். சனி, புதன் ஆகிய இரண்டு நாட்கள் தலைமுழுகிவர உடல் பலமாகும்.

### சீனப் பதங்கம்

*வச்சிடவே பலம்பத்துப் பரங்கிப் பட்டை*
*வகையாக வில்லையாய் நறுக்கிக் கொண்டு*
*மெச்சமென்ற குப்பிச்சார் தன்னி லூற்றி*
*மெதுவாக நிழலுலர்த்தி வைத்துக் கொண்டு*
*உச்சிதமாய்ச் சூதமொடு லிங்கங் கெந்தி*
*உயர்ந்தகா ரீயமுடன் நாகங் கூட்டி*
*இச்சையுடன் சூடனொடு சுக்கும் சேர்த்து*
*இயல்பாக வகைக்குயரைப் பலமுஞ் சேரே!* 516

பரங்கிப்பட்டை 350 கி. எடுத்துச் சிறுசிறுதுண்டுகளாய் நறுக்கி, எலுமிச்சம் பழச்சாற்றில் ஊறவைத்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க. சூதம், இலிங்கம், கெந்தகம், காரீயம் நாகம், சூடன், சுக்கு ஆகியவற்றை வகைக்கு 18 கி. சேர்த்துக் கொள்க.

*சேர்த்திதனைப் பானைக்குள் ளிட்டு நன்றாய்*
*திறமான பானைவாய் தனக்குக் கேளு*
*பாத்துபழஞ் சில்லாடை அதனைக் கட்டிப்*
*பரப்பியதன் மேல்பரங்கிப் பட்டை வைத்து*
*ஏற்றிடுவா யடுப்பேற்றிச் சட்டி மூடி*
*ஏற்கவே சிலைமண் இயல்பாய்ச் செய்து*
*நீற்றிடவே அனல்மெதுவாய் புகைதா னொன்று*
*நீசமாக இருசாமம் எரித்தி றக்கே!* 517

பானைக்குள் மேற்கூறப்பட்ட மருந்து பொருட்களைச் சுத்தி செய்து போட்டுக் கொள்க. பழைய மெல்லிய ஆடையைப் பானையின் வாய்க்குக் கட்டி அதன் மீது மேற்குறிப்பிட்ட பரங்கிப்பட்டையை வைக்க. மேல்சட்டியால் மூடி சீலை மண் செய்து மெதுவாக ஆறுமணி நேரம் எரித்துப் பின் இறக்கிக் கொள்க.

*இறக்கியதோர் பட்டைதனை இடித்துத் தூளாய்*
*இட்டமுடன் வடிகொண்டு வைத்த பிண்பு*
*குறையாமல் வெருகடித்தூள் தேனிற் கொண்டால்*
*குட்டமுதல் பரங்கிவெடி சூலை தீரும்*
*நிறைத்திட்ட பிடிப்பு வகை சூலைக் கட்டு*
*நெகிழ்ந்தோடு மொட்டியபுண் லிங்கப் புற்று*
*மறுத்திட்டுப் போகாம லந்தி சந்தி*
*மைந்தனே கொண்டுவிடில் ரோகம் போமே!* 518

ஆறியபின் பரங்கிப்பட்டையை இடித்துச் சூரணம் செய்து கொள்க. அதில் மூவிரலளவு எடுத்துக் காலை, மாலை இரு நேரமும் தேனில் கலந்து கொடுக்க குட்டம், பரங்கி, வெடிசூலை, பிடிப்பு வகைகள், சூலைக்கட்டு, புண், இலிங்கப்புற்று ஆகிய நோய்கள் தீரும்.

### பரங்கிப்பட்டைச் சூரணம்

*போகவே தான் ஐந்துபலம் பரங்கிப் பட்டைப்*
*புகழான மாவிலிங்குச் சாறு நாழி*
*வாகுடனே பட்டைதனைச் சீவிப் போட்டு*
*மயமாகச் சாறுவற்ற நனைய வைத்து*
*ஏகமுடன் நிழலுலர்த்தி வைத்துக் கொண்டு*
*ஏற்கவெள்ளைக் குங்கிலியஞ் சாம்பி ராணி*
*வேகமுள்ள கருத்தகுங் கிலியங் குக்கில்*
*விதமாகப் பானைக்குள் மிகச்செ லுத்தே!* 519

175 கி. பரங்கிப்பட்டையை எடுத்துச் சீவி 1.3 லி. மாவிலிங்குச் சாற்றில் ஊறவைத்துக் கொள்க. சாறு வற்றிய பிறகு பட்டையை எடுத்து நிழலில் உலர்த்திக் கொள்க.

வெள்ளைக் குங்கிலியம், சாம்பிராணி, கருப்பு குங்கிலியம், குக்கில் ஆகிய மருந்துச் சரக்குகளைச் சுத்தி செய்து பானைக்குள் போட்டுக் கொள்க.

*செலுத்திடுவாய் பானைவாய்ச் சில்லாடை கட்டிச்*
*சேர்த்திடுவாய்ப் பட்டைதனைச் சிலை மேலே*
*வலுத்திட்ட சட்டிதனை மூடிச் சிலை*
*மண்செய்து அடுப்பேற்றி அனலை மூட்டி*
*பிலத்திடவே தீயெரித்துப் புகையைக் கட்டிப்*
*பின்பெடுத்துக் கலசத்தில் தூளைத் தாக்கிப்*
*பலித்திடவே வெருகடிதான் தேனிற் கொள்ளப்*
*பறந்துபோஞ் சூலையெல்லாம் பஞ்சு போலே!* 520

பானையின் வாய்க்கு மெல்லிய துணியால் வேடு கட்டி அதன்மீது பட்டையை வைத்து, கனமான சட்டியால் மூடி சீலைமண் செய்து கொள்க. அதிகமான அனலினால் எரித்துக் கொள்க. பின்பு அதனை எடுத்துக் கலசத்தில் போட்டுத் தூளாக்கிக் கொள்க. ஐந்து விரலளவு சூரணத்தைத்தேனில் கலந்து கொடுக்க சூலை நோய் நீங்கும்.

## லேகியம்

*பஞ்சாகும் செம்பருத்தி இலையின் சாறு*
*பருத்தவெள்ளை நொச்சிச்சா றிஞ்சிச் சாறு*
*மிஞ்சாமற் கொம்மட்டிக் காயின் சாறு*
*மேலான வெள்ளுள்ளிச் சாறுங் கூட*
*வஞ்சமில்லா திதுவகைக்கு நாழி நாழி*
*மறவாமல் சாறுபடி அஞ்சுங் கூட்டி*
*துஞ்சவே அடுப்பேற்றிக் காய்ச்சிப் பாலில்*
*துலங்கவே இடுமருந்தைச் சொல்லக் கேளே!* 521

செம்பருத்தி இலை, வெள்ளை நொச்சி, இஞ்சி, கொம்மட்டிக்காய், வெள்ளுள்ளி ஆகியவற்றின் சாறு வகைக்கு 1.3 லி. எடுத்து கலந்து காய்ச்சிக் கொள்க.

*கேளீர்தஞ் சாதிலிங்க மகரந்த மிந்து*
*கிளர்ந்தெழுந்த நேர்வாளம் மிளகு மஞ்சள்*
*தாழ்வில்லா வெந்தயமு மத்தன் வித்தும்*
*சடாமாஞ்சிக் காயமொடு சரக்கி தெல்லாம்*
*சூழவே வகைக்குவி ராகன் மூன்று*
*துலங்கவே வறுத்திதனைப் பொடித்துக் கொண்டு*
*கூழ்போலே முன்வைத்த பாகுக் குள்ளே*
*கூட்டியதோர் தூளிட்டு கிண்டிக் காய்ச்சே!* 522

சாதிலிங்கம், மகரந்தம், இந்து, நேர்வாளம், மிளகு, மஞ்சள், வெந்தயம், ஊமத்தன்விதை, சடாமாஞ்சில், பெருங்காயம் இவற்றை வகைக்கு 12 கி. எடுத்துப் பொடித்து மேற்குறிப்பிட்ட கூழ்போன்றுள்ள காய்ச்சிய பாகுக்குள் போட்டுக் கிளறிக் கொள்க.

*காய்ச்சியே பாகு லேகியம்போல் கிண்டி*
*கலசத்தில் அடைத்திதனைப் பதனம் பண்ணி*
*வாச்சிந்த லேகியந்தான் சுண்டைக் காய்போல்*
*மறுகாமல் வகையறிந்து மருந்து கொள்ள*
*போச்சுதே குன்மமெட்டும் கவிசை வாய்வும்*
*பொல்லாத நீராம்பல் சோகை பாண்டு*
*நீச்சான பெருவயிறு கெண்டை போகும்*
*நிலையற்றுக் கவுசிதிசை வாய்வும் போமே!* 523

நன்கு காய்ச்சி லேகியம் போல் கிளறி கலசத்தில் அடைத்துப் பத்திரப்படுத்திக் கொள்க. அதனைச் சுண்டைக் காயளவாக உட்கொள்ள குன்மம் எட்டு வகை, கவிசைவாய்வு, நீராம்பல், சோகை, பாண்டு, பெருவயிறு, கெண்டைவலி, தசவாய்வு, உதிரவாய்வு, வயிற்று நோய்கள் ஆகியவை நீங்கும்.

*வாயுவென்றா லுதிரத்தின் வாய்வு தீரும்*
*வயிறிலுள்ள வியாதியெல்லா மாண்டு போகும்*
*ஒயாமல் மண்டலந்தா னரையே கொண்டால்*
*உள்ளிருந்த வியாதியெல்லா மோடிப் போகும்*

*தாய்முகத்தைக் கண்டதொரு சிசுவைப் போல*
*சாந்தமாய் குளிர்ச்சியுண்டாம் தணியும் ரோகம்*
*நேயமுடன் புளிபுகையும் நிறுத்து வைத்து*
*நேர்மையுடன் கொண்டுவிடு நெகிழ்ந்து போமே!* 524

இருபது நாட்கள் உட்கொண்டால் உள் நோய்கள் அனைத்தும் தீரும். தாய் முகத்தைப் பார்த்துக் குழந்தைக் குண்டாகும் மகிழ்ச்சியைப் போன்று சாந்தம், குளிர்ச்சி ஏற்படும், புளி, புகையை நீக்கவேண்டும்.

### நவச்சாரக் கட்டு

*நெகிழாமல் நவச்சாரக் கட்டுக் கேளு*
*நிசமான பூநீறு சீனக் காரம்*
*மகிழவே வெண்காரம் கறியுப் பாகும்*
*மாசில்லா வெடியுப்பு வகைப லந்தான்*
*புகழாகப் பழச்சாற்றா லாட்டி மைந்தா*
*புளிதமாய்க் கரண்டிதனில் வழித்தெ ரித்தால்*
*அகலாத சுண்ணாம்பாந் தேனி லாட்டி*
*ஏற்கவே நவச்சாரந் தன்னி லாட்டே!* 525

பூநீறு, சீனிக்காரம், வெண்காரம், கறியுப்பு, வெடியுப்பு இவற்றை வகைக்கு 35 கி. எடுத்துக் கொள்க. இவற்றை எலுமிச்சம்பழச்சாற்றில் அரைத்துக் கரண்டியில் வழித்தெடுத்து எரித்துக் கொள்க.

*கட்டுவாய்ச் சுண்ணாம்பைத் தேனி லாட்டிக்*
*கலசமாய்க் கட்டியபின் ரவியு லர்த்தித்*
*திட்டமாய் இரும்புமணல் சட்டிக் குள்ளே*
*திறமாக அரைச்சட்டி மட்டுங் கொட்டி*
*மட்டாக நவச்சாரக் கட்டி தன்னை*
*மத்தியிலே வைத்துப்பின் மணலைக் கொட்டி*
*இட்டமுடன் மேல்சட்டி மூடிச் சீலை*
*இதமாகச் செய்தடுப்பி லேற்றி டாயே!* 526

சுண்ணாம்பைத் தேனில் அரைத்துக் கலசமாய்ச் செய்து வெயிலில் வைத்து உலர்த்திக் கொள்க. ஒரு சட்டியில் இரும்பு மணலை அரைச்சட்டியளவு போட்டு அதன் மத்தியில் நவச்சாரக் கட்டியை வைத்து அதன் மேல் மணலைக்கொட்டுக. மேலே சட்டியை மூடி அடுப்பில் வைத்து எரித்துக் கொள்க.

*ஏற்றியே எரித்திடுவாய் இரண்டு சாமம்*
*இயல்பாக ஆறியபின் கவசச் சுண்ணம்*
*போற்றியே எடுத்துவைத்துக் குன்மந் தீரப்*
*பூரணமாய்ப் பணவிடைதான் தேனில் கொள்ள*
*நீற்றிட்ட நவச்சாரக் கட்டி தன்னை*
*நீலவரிக் கற்றாழைச் சாற்றில் கொள்ள*
*பாத்துநீ பணவிடைதான் சேர்த்துக் கொண்டு*
*பாண்டுகா மாலையது போங்கண் டாயே!* 527

ஆறுமணிநேரம் எரித்து ஆறிய பிறகு சுண்ணத்தை எடுத்து வைத்துக் கொள்ளவும். அக்கவசச் சுண்ணத்தை எடுத்து அதில் 488 மி.கி. அளவு தேனில் கலந்து கொடுக்க குன்மம் குணமாகும். நவச்சாரக் கட்டியை 488 மி.கி. அளவெடுத்து நீலவரியுடைய கற்றாழைச் சாற்றில் இழைத்துக் கொடுக்க பாண்டு, காமாலை குணமாகும்.

## கண்டங்காரி லேகியம்

*கண்டங் காரி தூதுவளை*
*கையாந் தகரை நீர்முள்ளி*
*விண்ட பருத்திக் காய்கொடுப்பை*
*மிகுந்த பிரமி பொடுதலையும்*
*பண்டே முளைத்த முசுமுசுக்கை*
*பசுவின் பாலு மதின்நெய்யும்*
*கண்டது கைதான் வகைக்குழக்கு*
*கடையில் மருந்து சொல்வோமே!* 528

கண்டங்கத்தரி, தூதுவளை, கையாந்தகரை, நீர்முள்ளி, பருத்திக்காய், கொடுப்பை, பிரமி, பொடுதலை, முசுமுசுக்கை,

இவற்றின் சாறு வகைகள், பசும்பால், பசுநெய் ஆகியவற்றை வகைக்கு 325 மி.லி. எடுத்துக்கொள்க.

*சொல்வோங் கோஷ்டஞ் சிற்றரத்தை*
*சுக்கோமந் திப்பிலி மிளகு*
*வெல்லுங் கடுக்கா யதிவிடையம்*
*மிகுந்த காயம் பொரிகாரம்*
*வல்ல யிருப்பின் மண்டூரம்*
*வளர்திப் பிலியின் மூலமுடன்*
*எல்லா மருந்து மிருகழஞ்சு*
*இதமா யரைத்துக் கொள்விரே!* 529

கோட்டம், சிற்றரத்தை, சுக்கு, ஓமம், திப்பிலி, மிளகு, கடுக்காய், அதிவிடையம், பெருங்காயம், பொரிகாரம், மண்டூரம், திப்பிலிமூலம், இவற்றை வகைக்கு 10 கி. எடுத்து நன்கு அரைத்துக் கொள்க.

*அரைத்த மருந்து அவ்வளவு*
*அளவாய்க் கரைத்து அடுப்பேற்றி*
*இரைத்துக் கொதித்து வற்றியபின்*
*இருகிக் களிபோல் வரும்போது*
*உரத்த சீனி இருசேர்தான்*
*உயர்ந்த தேனுங் கால்படியாய்க்*
*கரைத்துச் சுண்டி லேகியமாய்*
*கழற்சிக் காய்போல் கொள்வாயே!* 530

அரைத்த மருந்தினை மேற்சொன்ன கலவையில் கரைத்து அடுப்பில் வைத்துக் காய்ச்சிக் கொள்க. நன்கு கொதித்து நீர் சுண்டி களிபோல் இறுகும்போது சர்க்கரை 560 கி., தேன் 325 மி.லி. சேர்த்துக் கிண்டி இலேகிய பக்குவத்துடன் இறக்கிக் கொள்க.

*கொள்ளும் போது காமாலைக்*
*குமிறு மிளை யறும்*
*விள்ளுங் காய்ச்சல் நாவறட்சி*
*மிகுந்த தாகம் மேலிளைப்பு*

*தெள்ளுஞ் சோகை சயரோகம்*
*தீராச் சுவாசந் திகைப்புடனே*
*துள்ளுங் கபாலப் பயித்தியமுஞ்*
*சுகமே ஆகுஞ் சொன்னோமே!* 531

அதனைக் கழற்சிக்காய் அளவு உட்கொள்ள காமாலை, ஈளை, காய்ச்சல், நாவறட்சி, அதிகதாகம், மேல்மூச்சு, சோகை, சயம், தீராத இரைப்பு, மூச்சு வாங்குதல், கபால பித்தம் ஆகிய நோய் தீரும்.

## பறவை தோஷத்துக்கு நெய்

*சொல்லக்கேள் குழந்தைக்குப் பறவை தோஷம்*
*சுகமான மருந்தொன்று சொல்லக் கேளு*
*நல்லசி ரகமேலம் மதுரங் கோஷ்டம்*
*நலமான செண்பகப்பூ காட்டுச் சீரம்*
*செல்லுகின்ற கொத்துமல்லி அக்கிரா காரம்*
*சிவந்ததொரு சந்தனமும் கிராம்பு திப்பிலி*
*கல்லதனி லிடித்து நன்றாய்த் தூள தாக்கி*
*காய்ச்சுவாய் நெய்தனிலே கரண்டி கொள்ளே!* 532

குழந்தைகளுக்கு வரும் பறவைத் தோடத்திற்கான மருந்தினைக் கூறக்கேளுங்கள். நற்சீரகம், ஏலம், அதிமதுரம், கோட்டம், செண்பகப்பூ, காட்டுச்சீரகம், கொத்துமல்லி, அக்கிராகாரம், சந்தனம், கிராம்பு, திப்பிலி ஆகிய மருந்துச் சரக்குகளைக் கல்லில் போட்டிடித்துச் சூரணமாய்ச் செய்து கொள்க. தேவையான அளவு நெய்யிலிட்டு காய்ச்சி இறுத்துக் கொள்க. அதில் ஒரு கரண்டியளவு உட்கொள்ள வேண்டும்.

*கொள்ளுவாய் கழுத்தார முச்சி நெஞ்சில்*
*குமிரவே தடவியப்பா இருநே ரங்கொள்*
*விள்ளுவேன் திரிகடுகு திரிப லாதி*
*மேலான கானத்தூள் வசம்பு உள்ளி*
*மெல்லவே சமனாகத் தூள தாக்கி*
*மேவியதோ ராவின்நெய் உரியிலிட்டு*

*உள்ளபொடு தலைசங்கு தூத ளங்காய்*
*உத்தாமணி நிம்பிலைச்சார் வகைக்கு ழக்கே!* 533

அதனை கழுத்து, மார்பு, உச்சி, நெஞ்சு ஆகியவற்றில் இரண்டு நேரமும் தடவ பறவைத் தோடம் குணமாகும். சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், துளசி, வசம்பு, உள்ளி இவற்றைச் சமமாக எடுத்துச் சூரணித்து 675 மிலி. நெய்யில் போட்டுக் கொள்க. பொடுதலை, சங்கு, தூதுளங்காய், உத்தாமணி, வேப்பிலை இவற்றின் சாறுகளை வகைக்கு 325 மி.லி. எடுக்க.

*உழக்காகச் சாறுவகை நெய்யிற் சேர்த்து*
*உத்தமனே வெந்திறக்கி உள்ளுக் கீந்தால்*
*பழக்கமுள்ள மாந்தமொடு பறவை தோஷம்*
*பாலருட இருமல்விக்கல் வாந்தி போகும்*
*முளைக்குமுள்ளி வெங்காயஞ் சிறுபுள் காலு*
*முதிர்ந்ததொரு வசம்புநீர் வார்த்த ரைத்துப்*
*புழக்கமாய்ச் சறுவாங்கந் துவாலை யிட்டால்*
*போகுமடா தோடமெல்லாம் பொருந்தி டாதே!* 534

அனைத்தையும் சேர்த்துக் காய்ச்சி வெந்தவுடன் இறக்கிக் கொள்க. அதனை உள்ளுக்குக் கொடுக்க மாந்தம், பறவை தோடம் நீங்கும். குழந்தைகளின் இருமல், விக்கல், வாந்தி தீரும்.

உள்ளி, வெங்காயம், சிறுபுள்ளடி எடுத்து வசம்பரைத்த தண்ணீர் விட்டரைத்து அச்சாற்றினை உடல் முழுவதும் துவாலையிட தோடம் அனைத்தும் நீங்கும்.

## மேகப் பிடிப்புக்கு ஆமணக்கெண்ணெய்

*பொருந்தாத கிரந்திதனக் கெண்ணெய் கேளு*
*புகழ்சிற்றா மணக்கெண்ணெய் உழக்குக் குள்ளே*
*வருந்தியே எருக்கம்பா லாழாக்கு விட்டு*
*வளர்நொச்சி முசுமுசுக்கை கரிப்பான் குப்பி*
*அருந்தியிடச் சுடுதுரத்திப் புளியி லைச்சார்*
*அப்பனே வகைக்குஆ ழாக்கு விட்டு*

*திருந்தவே மிளகுசுக்கு வசம்பு பூடு*
*சித்திரமூலங் கடுக்காய்சேர்த் திடித்துச் சேரே!* 535

கிரந்தி நோய்க்கான எண்ணெயைக் கூறக் கேட்பீர். சிற்றாமணக்கெண்ணெய் 335 மி.லி., எருக்கம்பால் 165 மி.லி., நொச்சி, முசுமுசுக்கை, கரிப்பான், எலுமிச்சை, சுடுதுரத்தி, புளியிலை ஆகியவற்றின் சாறுகளை வகைக்கு 165 மி.லி. எடுக்க. மிளகு, சுக்கு, வசம்பு, சித்திரமூலம், கடுக்காய் ஆகிய வற்றைச் சமமெடுத்து இடித்துச் சூரணித்துக் கொள்ளவும்.

*சேரவே எண்ணெயுட னெல்லாஞ் சேர்த்துத்*
*திரளவே கொதிப்பித்து இறக்கும் போது*
*கூறவே கற்பூரங் கழஞ்சு சேர்த்து*
*குறிப்பறிந்து கொடுத்துவர மூன்று நாளும்*
*பாரமாங் கிரந்தியொடு புண்க ளாறி*
*பறக்குமடா பிடிப்பெல்லாம் பஞ்சு போலே*
*மீறாம லாறு நாள் புளிப்புங் கைப்பும்*
*விட்டுவிடு பத்தியமே சித்தி யாமே!* 536

மேற்சொன்ன எண்ணெய்க் கலவையில் சேர்த்துக், காய்ச்சி, கொதித்து அடங்கியவுடன் இறக்கி 5 கி. கற்பூரத்தை அதில் சேர்த்துப் பக்குவத்துடன் வடித்து இறக்கிக் கொள்க. அளவறிந்து மூன்று நாட்கள் கொடுத்துவர கிரந்தி, புண்கள் குணமாகி பிடிப்பெல்லாம் பஞ்சுபோல் பறந்துவிடும். நோய் குணமாகாது இருப்பின் ஆறு நாட்கள் புளிப்பு, கைப்புச் சுவைப் பொருட்களை நீக்கி பத்தியம் காத்தல் நல்லது.

## தீபனத்துக்குச் சூரணம்

*சித்திர மூல மிந்து*
*திரிகடு கோமங் கூட்டி*
*முற்று சிரக மிரண்டு*
*முறைப்படி சரிய தாகப்*
*பத்தியாய்ப் பொடித்துக் கொண்டு*
*பாங்குடன் தேனிற் கொள்ள*

*அத்தனா ரருளி னாலே*
*யதிக தீபன முண்டாமே!* 537

சித்திரமூலம், இந்துப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், நற்சீரகம், கருஞ்சீரகம், இவற்றைச் சமமெடுத்துச் சூரணம் செய்து கொள்க. அதனை அளவறிந்து தேனில் உட்கொள்ள அதிகமாய்ப் பசியுண்டாகும்.

## குன்மத்திற்கு மருந்து

*நாலு சூதஞ் சிலைரண்டு*
*நல்ல கெந்தி நாலிரண்டு*
*வாழுங் காந்தம் பதினாறு*
*அதனில் ரெட்டி யரப்பொடியாம்*
*ஏலங் குழலா ளம்மிதன்னில்*
*இளக்கக் குமரிச் சாற்றாலே*
*தாளந் தன்னி லதுதப்பில்*
*தனலா யெரியுங் கண்டீரே!* 538

இரசம் நான்கு பங்கு, மனோசிலை இரண்டு பங்கு, கெந்தகம் எட்டுபங்கு, காந்தம் பதினாறு பங்கு, அரப்பொடி முப்பத்திரெண்டு பங்கு எடுத்துச் சுத்தி செய்து அம்மியில் வைத்தரைத்துக் கற்றாழைச் சாற்றில் கலந்தெரித்து பதத்துடன் வடித்து வைத்துக் கொள்க.

*கண்டாய் குன்மம் பிலிகையும்*
*கனத்த பித்த பாண்டுவுடன்*
*உண்டால் மறுக்கும் புளித்தேப்ப*
*மோடுங் குளிரு முள்சுரமும்*
*பண்டே யிஞ்சிச் சாறுடனே*
*பருக சன்னி பதிமூன்றும்*
*கண்டால் திரு மிம்மருந்தைக்*
*கருதிச் செய்து பாரீரே!* 539

அதனை உள்ளுக்குக் கொடுக்க குன்மம், பீலிகை, பித்தபாண்டு, புளித்தேப்பம், குளிரையுடைய உள்சுரம் ஆகிய

நோய்கள் தீரும். இஞ்சிச்சாற்றுடன் கலந்து கொடுக்க பதிமூன்று வகைச் சன்னி நீங்கும்.

### வண்டுகடிக்குச் சூரணம்

*பாராய் வண்டு கடிவிஷம்போம்*
*பருத்த அழிஞ்சில் தலைச்சுருளி*
*சேரு விரியன் கரணையொடு*
*சிறந்த கொல்லன் கோவையப்பை*
*வாராய் எட்டி சேங்கொட்டை*
*வகையாய்ப் பட்டை மாவிலிங்கு*
*கூறாய் சிவனார் வேம்பெருக்கு*
*கொழுஞ்சி சித்திர மூலமுமே!* 540

அழிஞ்சில், தலைச்சுருளி, பிடிகரணை, கொல்லன்கோவை, அப்பைக்கோவைக் கிழங்கு, எட்டி, சேங்கொட்டை, ஆகியவற்றின் பட்டைகள், மாவிலிங்கு, சிவனார்வேம்பு, எருக்கு, கொழுஞ்சி, சித்திரமூலம் இவற்றைச் சேகரிக்கவும்.

*மூலஞ் சமுத்திராப் பழமோமம்*
*உயர்ந்த குறிஞ்சா குளப்பாலை*
*சீலம் பரங்கிப் பட்டைக்கு*
*குக்கில் செந்தொட்டி கத்தூரிமஞ்சள்*
*கோலங் கடுக்காய் கார்போகங்*
*கூட்டு கரிய சீரகமும்*
*சோல சமனா யிடைகொண்டு*
*தருசூ ரணத்தை யருந்திடவே!* 541

சமுத்திராப்பழம், குறிஞ்சா, குடசப்பாலை, பரங்கி ஆகியவற்றின் பட்டைகளை எடுத்துக் கொள்க. குக்கில், செந்தொட்டி, கத்தூரி மஞ்சள், கடுக்காய், கார்போகி, கருஞ்சீரகம் ஆகிய அனைத்துச் சரக்குகளையும் சமமாக எடுத்து முறைப்படி சூரணம் செய்து கொள்க. இதைத் தேனில் கலந்து உட்கொள்ள வண்டுகடி நீங்கும்.

## வெள்ளைக்குப் பச்சை வெட்டு

*அருந்துவெள்ளை கண்டவர்க்கு மருந்து கேளு*
*அரியவெள்ளைக் குங்கிலியம் பலந்தா னஞ்சு*
*திருந்தவே பொடிசெய்து வைத்துக் கொண்டு*
*திறமாக எண்ணெய்சட்டி அடுப்பி லேற்றி*
*பொருந்துநல் லெண்ணைஉழக் கதிலே விட்டு*
*புகையாமல் கொதித்துவரில் பொடியைத் தூவி*
*வருந்தியே கிண்டிடவே பாகு சேரில்*
*மறுசட்டிக் குள்நாழி தண்ணீர் வையே!* 542

வெள்ளை நோய் பாதித்தவர்க்கு உகந்த மருந்து ஒன்றினைக் கூறக் கேட்பீர். வெள்ளைக் குங்கிலியம் 175 கி. எடுத்துப் பொடித்துக் கொள்க. 325 மி.லி. நல்லெண்ணெய் ஊற்றிய சட்டியை அடுப்பில் வைத்து எரித்துக் கொள்க. புகை விடாது, கொதிக்கும்போதுமேற்சொன்ன பொடியைத் தூவிக் கிளறிக் கொள்க. பாகாய் மாறும்.

*வைத்திட்ட தண்ணீரில் பாகை யூற்றி*
*மைந்தனே பிசைந்திடுவாய் மைபோல் நன்றாய்*
*பற்றிடவே திரட்டியதை எடுத்துக் கொண்டு*
*பதங்கான இளநீர்விட் டலசிப் போடு*
*துய்த்திடவே கையதனால் பிசையும் போது*
*துய்யதொரு வெண்ணெயதாய்த் துலங்கும் நன்றாய்*
*மெய்த்திட்ட வெண்ணெய்தனை எடுத்துக் கொண்டு*
*மேலாக மேலரிசி பொடித்துப் போடே!* 543

மறு சட்டியில் 1.3 லி. தண்ணீர் ஊற்றி, அதில் மேற்குறிப்பிட்ட பாகைப் போட்டு நன்கு மைபோல் பிசைந்து திரட்சியாய் எடுத்துக் கொள்க. பின் இளநீரை ஊற்றி அலசி எடுத்து மறுபடியும் பிசைந்து கொள்ள வெண்ணெய் போலாகும். அதனுடன் அரிசியைப் பொடித்துப் போட்டுக் கலந்துகொள்க.

*போட்டுநீ ஒன்றாக ரேகித் தப்பாப்*
*பொருந்தவே புன்னைக்கா யளவு கொண்டால்*

*வாட்டமில்லா மேகவகை நீர்க்க டுப்பு*
*மகத்தான உள்காய்ச்சல் வயி றெரிவு*
*மூட்டியதோர் முகமெரிவு கைகால் காந்தல்*
*முறிந்தோடு மிந்தமுறை முயற்சி செய்தால்*
*தாட்டிகமாய் இன்னமொரு கிஷாயஞ் சொல்வேன்*
*தாரணியில் முளைத்தெழுந்த தானு மாமே!* 544

அதில் புன்னைக்காயளவு எடுத்து உட்கொள்ள மேக நோயின் வகைகள், நீர்க்கடுப்பு, உட்காய்ச்சல், வயிறெரிவு, முகஎரிவு, கை, கால் எரிச்சல் ஆகிய நோய்கள் தீரும்.

### சகல எரிவுகளுக்கும் குடிநீர்

*ஆலரசு மாதளை கூவிளமு மாவு*
*மதின்புறணி மிளகுசுக்கு கிராம்பு கோட்டம்*
*கோலச் சந்தனம் விடையமிலா மிச்சம் வேர்*
*குறுசாதிக் காய்பத்திரி அக்கிரா காரம்*
*மாலையுடன் காலைமுக் கழஞ்சு சேர்த்து*
*வகையாகக் கிசாயத்தை மறுகக் காய்ச்சி*
*சிலமுடன் கிஷாயத்தில் கிழியைக் கட்ட*
*செலுத்துகின்ற மருந்ததனைச் செப்பக் கேளு!* 545

ஆல், அரசு, மாதுளை, கூவிளம், மா, இவற்றின் பட்டைகள், மிளகு, சுக்கு, கிராம்பு, கோட்டம், சந்தனம், அதிவிடையம், இலாமிச்சம்வேர், சாதிக்காய், சாதிபத்திரி, அக்கிராகாரம் ஆகிய மருந்துப்பொருட்களை வகைக்கு 15 கி. எடுத்து முறைப்படி குடிநீர் காய்ச்சிக் கொள்க.

*கேளாய் கிராம்பு பத்திரிசாதி*
*கிழியாக் கழஞ்சு அரையாக*
*ஆள யவித்துக் கிஷாயத்தி*
*லரைத்துக் கலக்கி உடன்கொள்ள*
*வாழுந் தாக பேதிசுரம்*
*வறட்சி காந்த லுழலை யெல்லாம்*
*தாழும் பேதகு மென்றுசொன்னேன்*
*தரணி யோரே நிச்சயமே!* 546

கிராம்பு, சாதிபத்திரி இவை இரண்டையும் வகைக்கு 2½ கி. எடுத்து ஒரு துணியில் முடிந்து குடிநீரில் போட்டு வேக வைத்தெடுத்துக் கொள்க. பின் அதை அதே குடிநீர் விட்டரைத்துக் கலந்து உட்கொள்ள கழிச்சல், காய்ச்சல், வறட்சி, காந்தல் ஆகிய நோய்கள் நீங்கும்.

## மேக வெள்ளைக்குத் துருசுபற்பம்

*நிச்சயமாய்த் துருசுபல மொன்று வாங்கி*
*நிசமாகக் கவசத்து மருந்து கேளு*
*பச்சைக்கல் பூரமுடன் வீரங் கூட்டி*
*பாய்வினையாய் விராகனொன்று பாலா லாட்டி*
*மெச்சவே துரிசுகட்டி தன்னில் பூசி*
*வெயிலிலே வைத்துப்பின் எடுத்துக் கொண்டு*
*வச்சிடவே பூநீறு பலந்தான் நான்கு*
*வாங்கியே துரிசுக்கு கீழ்மேல் பூசே!* 547

துருசு 35 கி. எடுத்துக் கொள்க. பச்சைக்கல், பூரம், வீரம் இவற்றை வகைக்கு 4 கி. எடுத்துப் பசும்பால் விட்டாட்டி துருசுகட்டியின் மேல்பூசி வெயிலில் வைத்து உலர்த்தி எடுக்க. பின் பூநீற்றை 140 கி. எடுத்துத் துருசு கட்டியின் மேலும் கீழும் நன்கு பூசிக் கொள்க.

*கீழ்மேலும் பூசிநன்றாய்ச் சட்டி தன்னில்*
*கிளறாமல் திமெதுவாய்க் கடிகை கொண்டு*
*மீளவே எரியிட்டு எடுத்துப் பாரு*
*வெண்மையாஞ் சுண்ணாம்பு வேக மெத்த*
*தூளாக்கி எடுத்திதனை வைத்துக் கொண்டு*
*துலங்குபற்பம் பணவிடையாய் ஆவின் வெண்ணெய்*
*தாளாமல் கொண்டிடவே நீர்செ ரிப்புச்*
*சதையடைப்பு மேகவெள்ளை தவறிப் போமே!* 548

இதனைச் சட்டியில் போட்டு 24 நிமிடங்கள் அனலை மெதுவாய் எரித்துக் கிளறாது எடுத்து வெளியில் பார்க்க வெண்மையாய் நீறிப் போயிருக்கும். இப்பற்பத்தை 488 மி.கி.

அளவெடுத்து பசுநெய்யில் கலந்து கொடுக்க நீர்க்கட்டு. சதையடைப்பு, மேக வெள்ளை தீரும்.

**சாம்பிராணிப் பதங்கம்**

*தவறிப்போம் நீரேற்றந் தலைப்பா ரங்கள்*
*சாம்பிராணிப் பளிங்கதுபோல் கட்டி வாங்கிக்*
*கவறாக இடித்திடுவாய் தூள தாக*
*கனத்தகுண்டுச் சட்டிதனி லிட்டு மேலே*
*தவறாமல் மேல்சட்டி கவிழ்த்தி மூடித்*
*தயவாகச் சீலைமண்ணுஞ் செய்து நன்றாய்*
*சுவறிடவே அடுப்பேற்றி அகலு தன்னிற்*
*துலங்கநல் லெண்ணெயிட்டுத் திரியி ரண்டே! 549*

சாம்பிராணிக் கட்டியைப் பெரியதாக எடுத்து இடித்துப் பொடித்துக் கொள்க. அதைச் சட்டியில் போட்டு, அகலில் நல்லெண்ணெய் ஊற்றி இரண்டு திரிகளைப் போட்டுக் கொள்ளவும்.

*இரண்டுதிரி ஏற்றியே அடுப்புக் குள்ளே*
*நலமாக வைத்ததனை எரிக்கும் போது*
*மண்டியே புகையெல்லாங் கவிழ்த்திச் சட்டி*
*மாசுபோல் படர்ந்து நன்றாய் மடித்தே யோட்டும்*
*கண்டுபத மறிந்தெடுத்து ஆற வைத்து*
*கவசத்து மண்பிரித்துக் கவித்துஞ் சட்டி*
*துண்டுபட எடுத்திதனை வழித்துக் கொண்டு*
*தூளாக நாசிதன்னில் துலங்க வாங்கே! 550*

பின் மேல் சட்டியை மூடி சீலை மண் செய்து அடுப்பில் வைத்து எரித்துக் கொள்க. புகையானது கவிழ்ந்த சட்டியின் மேல் படர்ந்திருக்கும். ஆறிய பிறகு எடுத்துச் சீலை மண்ணைப் பிரித்து படர்ந்துள்ள பதங்கத்தை வழித்து வைத்து மூக்கில் நசியமாகப் பயன்படுத்த நீரேற்றம். தலைப்பாரங்கள் தீரும்.

## சாம்பிராணித் தைலம்

*துலங்குகின்ற சாம்பிராணித் தைலங் கேளு*
*சுத்தனிறப் பளிங்கதுபோற் கட்டி வாங்கி*
*இலங்குகின்ற பாக்குப்போல் நறுக்கிக் கொண்டு*
*இதமான குண்டுசட்டி அடுப்பி லேற்றிக்*
*கலங்காமல் சட்டியிற்தண் ணீரை விட்டுக்*
*கசகாமல் குண்டுசட்டிக் குள்ளே வைத்து*
*மலங்காமல் சாம்பிராணிப் பொடியை நன்றாய்*
*மைந்தனே அகல்சட்டி சுற்றி வைய்யே!* 551

பளிங்கு போன்று வெண்மையாகயுள்ள சாம்பிராணிக் கட்டியை எடுத்து பாக்கு போல் சிறு சிறு துண்டுகளாய் வெட்டிக் கொள்க. அகலமாயுள்ள சட்டியில் தண்ணீர் ஊற்றி, பொடித்த சாம்பிராணியைச் சிறிய சட்டியில் போட்டுக் கொள்க. அந்தச் சிறிய சட்டியை உள்ளே வைத்து அகலினை வைத்து மேல் சட்டியை மூடுக.

*வைத்திடவே மேல்சட்டி மலத்தி வைத்து*
*வாய்மட்டும் நீர்விட்டுச் சீலைமண் செய்து*
*மெய்த்திடவே மெதுவாகத் தீயெ ரித்து*
*மேல்சட்டி தனிலதனைத் துளவிக் கம்பால்*
*எத்திட்டுப் போகாமல் கிண்டிக் கிண்டி*
*இதமாகக் கடிகையொன்று எரித்துப் பின்னும்*
*கைத்திட்ட மாகவே தானிறக்கி வைத்துக்*
*கருகிவிழுந் தயிலமதைக் கண்டு கொள்ளே!* 552

மேலே மூடும் சட்டியை மல்லாக்க மூடி, அதில் சாம்பிராணித் தூள் போட்டு பானையில் உள்ள நீரை மெல்ல எரித்துக்கொள்ள வேண்டும். சாம்பிராணி அடிப்பிடிக்காமல் கிண்டி, கொதிக்கும்போது வரும் தைலத்தை வழித்தெடுத்துக் கொள்ளவும்.

## சிலாசத்துப் பற்பம்

*கண்டிடனே சிலாசத்துப் பற்பங் கேளு*
*கருதியே பலம்வாங்கிக் கல்லுச் சுண்ணம்*
*விண்டிடவே கவசஞ்செ யதின்மேல் சீலை*
*மீறாமல் சுற்றியே மேதைச் சாணி*
*விண்டுவிடா மல்பொதிந்து குக்கு டத்தில்*
*வெந்தவுட னெடுத்துப்பின் பொடித்துக் கொண்டு*
*பண்டுள்ள சர்த்திகுன்மம் பறந்து போகப்*
*பாகமுட னாவின்பால் பருகப் போமே!* 553

சிலாசத்தினை 35 கி. எடுத்துக் கொள்க. கல்சுண்ணத்தைச் சிலாசத்தின் மீது கவசமாகச் செய்து சீலை சுற்றிக் கொள்க. அதனை எருமை சாணியில் பொதிந்து வைத்துக் கொள்க. பத்து வறட்டியில் புடம் போடவும். வெந்தபிறகு இறக்கி ஆறியபின் எடுத்துப் பசும்பாலில் கலந்து கொடுக்க சர்த்தி குன்மம் தீரும்.

## இரச கற்பூரம்

*பருகுரச கற்பூரம் பலந்தான் வாங்கிப்*
*பாவையர்பா லூறவைத்து மற்ற னாளு*
*மறுகவே நீர்தனி லலசிப் போடு*
*உத்தமனே காய்ந்தபின்பு பொடிய தாக்கி*
*பெரிதான கொப்பரைக்காய் கொத்து மல்லி*
*பின்புசிறு நாகப்பூ வோம வெண்ணை*
*வருகிறதோ ரதுவாகும் பனையும் வெல்லம்*
*மைந்தனே பணவிடைதான் வைத்துக் கொள்ளே!* 554

இரசகற்பூரம் 35 கி. எடுத்துத் தாய்ப்பாலில் ஊற வைத்து அடுத்த நாள் தண்ணீரில் அலசிக் கொள்க. பின்பு எடுத்து உலர வைத்துப் பொடித்துக் கொள்க. கொப்பரைத் தேங்காய், கொத்துமல்லி, சிறுநாகப்பூ, ஓமம், வெண்ணெய் இவற்றை பனைவெல்லத்துடன் சேர்த்துச் சாப்பிடவும்.

*கொண்டிடவே பரங்கிகுஷ்டம் கிரந்தி சூலை*
*கொடிதான அரையாப்பு யோனிச் சூலை*

*ஒன்றினின்ற வாதமுடம் பிடிப்புப் புண்கள்*
*ஓடிப்போம் பவுந்திரமும் நொடியிற் தீரும்*
*கண்டதொரு மேகரணச் சூலைக் கட்டு*
*கதறியே போய்விடுங்காண் கருதிப் பாரு*
*தென்றிசையில் வைத்தி யத்துக் கொன்றே போதுமச்*
*சிதறவே புளிபுகையைத் தீரத் தள்ளே! 555*

இப்பொடியை 488 மி.கி. அளவு உட்கொள்ள பரங்கி, குட்டம், கிரந்தி, சூலை, அரையாப்பு, யோனிச்சூலை, வாதம், உடல்பிடிப்பு, புண்கள் தீரும். பவுந்திரம், மேகவிரணம், சூலைக்கட்டு நீங்கும். புளி புகையை நீக்கிக் கொள்க.

## கருங்குழம்பு

*தீராத விஷங்களெல்லாந் தீரு தற்குத்*
*தெளிவாகக் கருங்குழம்பைச் செப்பக் கேளு*
*நேரான கருநாபி ரசம்வெண் காரம்*
*நெறிவிஷமிந் துப்புக்கருஞ் சீரகங் கூட்டி*
*சீரான கெந்திமனோ சிலையும் வாளம்*
*திறமாகச் சுத்திசெய்து சமன தாகப்*
*பேரான குழிக்கல்லி லாட்டித் தூளாய்ப்*
*பின்னுமோ வேலியிலைச் சாற்றா லாட்டே! 556*

கருநாபி, இரசம், வெண்காரம், விஷமற்ற நாபிக் கிழங்கு, இந்துப்பு, கருஞ்சீரகம், கெந்தகம், மனோசிலை, வாளம் இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்துச் சுத்தி செய்து கொள்க. இச்சரக்குகளைக் குழிக்கல்லில் போட்டாட்டிக் கொள்க. பிறகு ஒன்பது மணி நேரம் வேலியிலைச் சாற்றில் அரைத்துக் கொள்க.

*ஆட்டவே சாம மூன்று*
*அதுக்கப்பால் தேங்காய்ப் பாலுங்*
*கூட்டுவாய் கருப்புக் கட்டி*
*கொட்டாச்சிக் கரியுஞ் சேர்த்து*
*மாட்டுவாய் தேங்காய்ப் பாலும்*
*மகிழவிட் டரைத்து நன்றாய்*

*மூட்டுவாய் விஷங்கட் கெல்லாம்*
*முயற்சியாய்க் குன்றி கொள்ளே!* 557

கருப்புக் கட்டியையும், கொட்டாங்குச்சியின் கரியையும் சேர்த்துத் தேங்காய்ப்பாலை விட்டாட்டி மேற்சொன்ன அரைத்த விழுதுடன் கலந்து கொள்க. அதனை 130 மி.கி. அளவு கொடுக்க தீராத விடங்கள் அனைத்தும் தீரும்.

## விஷக்குழம்பு

*குன்றிபோல் குள்ளாக்கை சத்தி யாகக்*
*கூட்டுரசந் துரிசுபூ வந்தி வாளம்*
*வென்றிடவே சமன்தேங்காய்ப் பாலி லாட்டி*
*மெழுகதுபோல் வரும்போது மேனிப் பின்னும்*
*திண்டாடத் தேங்காய்நெய்யை விட்டு ஆட்டிச்*
*சிறுகவே குறுக்கிடுவாய் கரண்டி தன்னில்*
*நன்றான விஷங்கண்டு குன்றி போல*
*நாட்டுவாய் வெற்றிலையில் சிமிழில் வைத்தே!* 558

இரசம், துருசு, பூவந்திக் கொட்டை, நேர்வாளம் ஆகிய வற்றைச் சமனெடுத்துத் தேங்காய்ப் பால் விட்டு மெழுகு பதமாக அரைத்துக் கொள்க. பின் தேங்காய் நெய்யை அதில் விட்டு மேலும் அரைத்துக் கொள்க. அதனைக் கொதிக்க வைத்துக் குறுக்கிச் சிமிழில் வைத்து பத்திரப்படுத்திக் கொள்க. அதனை வெற்றிலையில் 130 மி.லி. அளவு வைத்து உட்கொள்ள விஷங்கள் நீங்கும்.

## பேதி ஆவதற்கு மருந்து

*வைத்திடுவாய் பேதிக்கு வாளஞ் சுத்தி*
*மண்முன்னைச் சாறதனால் மகிழ்ந்த ரைத்துக்*
*கைத்திட்ட மாகவேதான் சுண்டைக் காய்போல்*
*கடுகவே உருட்டியுண்ணப் பேதி யாகும்*
*மெய்த்திடவே பேதியது மிகுந்து காணும்*
*வெதுப்பில்லை தகையில்லை மெய்யாய்ச் சொன்னேன்*

*நைத்திடவே மிகுந்துகண்டா லாவின் பாலும்*
*நலமான கற்றாழஞ் சாறு முண்ணே!* 559

நேர்வாளத்தை எடுத்து, சுத்தி செய்து கொள்க. முன்னைச் சாறு விட்டரைத்து சுண்டைக்காயளவுள்ள உருண்டைகளாய்ச் செய்து கொள்க. அதனை அளவறிந்து கொடுக்க கழிச்சல் ஆகும். அதிகமானால் பசும்பால், கற்றாழைச் சாறு இவற்றைக் குடிக்க வேண்டும்.

## தாளிச பத்திரி லேகியம்

*உண்ணவே இளைப்பிருமல் காங்கை போக*
*உயர்ந்ததா ளிசபத்திரி பலம தொன்று*
*நண்ணுந்திப் பிலிசெவியம் மிளகு ஏலம்*
*நல்லபெறுந் திப்பிலியும் நறுக்கு மூலம்*
*கன்றான அரத்தைசிறு நாகப் பூவும்*
*கிராம்புடனே இலவங்கப் பட்டை கூட்டித்*
*திண்ணமாய் வகைக்குக்கால் பலம தாகச்*
*சேர்த்திடித்து வடிகொண்டு சேர்க்கை கொள்ளே!* 560

தாளிசபத்திரி 35 கி., அரிசித் திப்பிலி, செவியம், மிளகு, ஏலம், காட்டுத் திப்பிலி, திப்பிலி மூலம், அரத்தை, சிறுநாகப்பூ, கிராம்பு, இலவங்கப்பட்டை ஆகியவற்றை வகைக்கு 9 கி. எடுத்துச் சேர்த்துச் சூரணம் செய்து கொள்க.

*சேர்க்கவே பலம்நாலு பஞ்ச தாரை*
*சிலங்கரைத்து அடுப்பேற்றிப் பாகாய்க் காச்சி*
*ஏற்கவே நெய்தேனு மிளகு கூட்டி*
*இடித்துவைத்த சூரணத்தை மேலே தூவி*
*காக்கவே லேகியமாய்க் கிண்டிக் கிண்டி*
*கலசத்தி லடைத்துவைத்துக் கழற்சிக் காய்போல்*
*ஊறுகின்ற இளைப்பிரும லோடிப் போகும்*
*உயர்ந்ததொரு லேகியந்தா னுறுதி யாமே!* 561

140 கி. பஞ்சதாரை எனும் சர்க்கரையில் தண்ணீர் ஊற்றி கலந்து பாகாய்க் காய்ச்சிக் கொள்க. நெய்யையும், தேனையும்

மிளகுத் தூளையும் சேர்த்துக் கிளறி பக்குவத்துடன் எடுத்துக் கலசத்தில் அடைத்து வைத்துக் கொள்க. அதனைக் கழற்சிக்காய் அளவு கொள்ள இளைப்பிருமல் நீங்கும்.

## தலைக்கெண்ணெய்

*உறுதியா மின்னமொரு தைலங் கேளு*
*ஓமமல்லி திரிகடுகு விலாமிச் சம்வேர்*
*பிறுதியாஞ் சதகுப்பை வெட்டி வேரும்*
*பெருமருந்து சந்தனமும் தேவ தாரம்*
*கரியசி ரகமிரண்டு லவங்கப் பட்டை*
*கத்தூரி மஞ்சளுட னக்கிரா காரம்*
*சிறுதேக்கு ரோகணியும் அரத்தை கோஷ்டம்*
*சேர்த்திடுவாய் பேய்ப்புடலும் லவங்கப் பத்திரி!* 562

ஓமம், கொத்துமல்லி, சுக்கு, மிளகு, திப்பிலி, இலாமிச்சம் வேர், சதகுப்பை, வெட்டிவேர், ஈசுரமூலி, சந்தனம், தேவதாரம், கருஞ்சீரகம். நற்சீரகம், இலவங்கப்பட்டை, கத்தூரிமஞ்சள், அக்கிராகாரம், சிறுதேக்கு, கடுகுரோகணி, அரத்தை, கோட்டம், பேய்ப்புடல், இலவங்கப்பத்திரி இவற்றை எடுத்துக் கொள்ளவும்.

*பத்திரி நன்னாரி மஞ்சிட்டி மாஞ்சி*
*பகர்காட்டுச் சீரகமும் அமுக்கி ராவும்*
*முற்றுநில வேம்புவகைக் கரைப்ப லந்தான்*
*மெழுகுபோ லரைத்திடுவா யின்னுங் கேளு*
*சுத்திவெரு கங்கிழங்கு பலமும் பத்துச்*
*சுகமாக அரைத்தெண்ணை படியும் நாழிச்*
*சித்திபெறப் பதமாகக் காய்ச்சி மூழ்கத்*
*தீருமே சகலசுர நோவும் போமே!* 563

நன்னாரி, மஞ்சிட்டி, சடாமாஞ்சில், காட்டுச் சீரகம், அமுக்கிரா, நிலவேம்பு, இவற்றை வகைக்கு 18 கி. எடுத்து அரைத்து மெழுகு பதமாய் வரும்போது 350 கி. மெருகங்கிழங்கை அரைத்துச் சேர்த்துக் கொள்க. 1.3 லி. நல்லெண்ணெயைக்

கலந்து காய்ச்சிப் பதமாய் இறக்கிக் கொள்க. இவ்வெண்ணெ யினால் தலை மூழ்கிவர அனைத்துக் காய்ச்சலும் தீரும்.

## மலம் சுத்தியாக மருந்து

*நோயெல்லாம் போகவே மலங்க ளற்று*
*நுணுக்கமா யின்னமொரு சூர ணங்கேள்*
*ஆவலுட னிலவாகை இந்துப் புத்தான்*
*அப்பனே திரிகடுகுஞ் சமன தாகப்*
*பாவகமாய் வெதுப்பியே சூர ணித்து*
*பண்பாக வெருகடிபோ சனத்து மேலே*
*மேவியே மண்டலந்தான் கொண்டா யானால்*
*விடியுமுன்னே மலங்களற்று சுத்தி யாமே! 564*

நிலவாகை, இந்துப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து இளஞ்சூட்டில் வறுத்துச் சூரண மாக்கிக் கொள்க. அதில் ஐந்து விரலளவு எடுத்துத் தேனில் கலந்து இரவு உணவு உண்ட பிறகு கொடுக்க மலசுத்தி யாகும். இவ்வாறு நாற்பது நாட்கள் சாப்பிடவும்.

## சூத வாய்வுக்கு மருந்து

*சுத்திசெய்த வாளமது பலமுங் கால்தான்*
*துலங்குகொல்லங் கோவையிந்து பலமு மொன்று*
*பத்தியாய்க் குளிர்ந்ததண் ணீரி லாட்டிப்*
*பாங்காகச் சூதகமோ மூன்று நாளும்*
*முற்றநீச்சுத் தண்ணீரில் கலக்கிக் கொண்டால்*
*உடன்சூத வாய்வும்போம் கெர்ப்ப மாமே! 565*

நேர்வாளம் 9 கி., கொல்லங்கோவை, இந்துப்பு வகைக்கு 35 கி. எடுத்துக் குளிர்ந்த தண்ணீரில் அரைத்துக் கலந்து கொள்க. அதனைச் சூதகமான மூன்று நாட்களும் உட்கொண்டால் சூதவாய்வு, கர்ப்பவாயு தீரும்.

## மூலத்துக்கு அவிழ்தம்

*ஆமடா மூலத்துக் கவிழ்தங் கேளு*
*அப்பனே வேப்பீக்கின் காயின் கூட்டை*
*ஓமடா சூரணித்து ஆவின் பாலில்*
*உடனருந்த முளைமூல மோடிப் போகும்*
*நேமமுடன் கருணைவகை ரெண்டுங் கூட்டி*
*நிசமாக ஆவின்பா லரைத் தருந்தில்*
*போமடா முளைமூல ரத்த மூலம்*
*பொய்யல்ல பறந்துபோம் புகையைக் கேளே! 566*

மூலத்துக்கான மருந்தினைக் கூறக் கேட்பீராக. வேப்பீர்க்கு, வேப்பங்காய் ஓடு இவற்றைச் சூரணித்துப் பசும்பாலில் கலந்து குடிக்க முளைமூலம் குணமாகும். கருணை, பிடி கருணை இரண்டையும் சேர்த்து, பசும்பாலில் அரைத்துக் குடிக்க முளை மூலம், இரத்த மூலம், ஆகியவை தீரும்.

## மூலத்துக்குப் புகை

*கேளப்பா தாளகமுந் துரிசு வாங்கி*
*கிருபையுடன் பொடித்துப்பின் தூள தாக்கி*
*தாழ்வான மூங்கிலிலை படிதான் ரெண்டு*
*தழுவான புளிப்புரணி அனல தாக்கி*
*நீளவே பொடியிலையுந் தணலி லிட்டு*
*நிசமாகப் பவனப்பாய் புகையைக் காட்டு*
*மீளுமே குதிரைநிற்குங் குளம்பு தன்னை*
*மெத்தனவே தனலிட்டுப் புகையைக் காட்டு! 567*

தாளகம், துருசு இவற்றை எடுத்துச் சுத்தி செய்து பொடித்துக் கொள்க. மூங்கிலிலை 2.6 கி., புளியம்புரணி, புளியிலை இவற்றைப் பொடித்துக் கொள்க. இவை அனைத்தையும் குதிரைக் குளம்பையும் தணலில் போட்டு அந்தப் புகையை மூலத்துக்குக் காட்ட மூலம் குணமாகும்.

## கூழ்பாண்ட லேகியம்

*கட்டினேன் கரிமுகவன் பாதந் தன்னை*
*கனத்ததிரி கடுகுதிரி பலையுங் கூட்டி*
*திட்டமுடன் சீரகமுஞ் சித்திர மூலஞ்*
*சேத்திடுநா கேசுரமு மேலந் தானு*
*முட்டுந்தா ளிசபத்திரி சிறுனா கப்பூ*
*மோதுமிந்து நிலவாகை சிவதை மாவே*
*மட்டில்லா நன்னாரி லவங்கப் பூவும்*
*மகத்தான லவங்கத்தோல் முத்தக் காசே!* 568

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சீரகம், சித்திரமூலம், நாகேசுரம், ஏலம், தாளிசபத்திரி, சிறுநாகப்பூ, இந்துப்பு, நிலவாகை, சிவதை, மா, நன்னாரி, இலவங்கப்பூ, இலவங்கத் தோல், முத்தக்காசு இவற்றை வகைக்கு 18 கி. எடுத்துக் கொள்ளவும்.

*காசுடனே வகைக்குமரைப் பலமுங் கூட்டி*
*காயவைத்து இடித்துச்சூ ரணமே செய்து*
*கூசாமல் பூசணிக்காய் பழந்தான் ரெண்டு*
*குடைந்துனி சாறதனை வாங்கிக் கொண்டு*
*பேசாமல் திப்பிலியை உலர்த்தி நெய்யில்*
*பலமாக வறுத்திடித்து துணியில் சேர்த்து*
*வாசனையாய் முன்சாற்றில் பால்தா னாழி*
*வாகாகக் கூட்டிச் சர்க்கரையுஞ் சேரே!* 569

இவற்றை வகைக்கு 18 கி. எடுத்து இடித்துச் சூரணம் செய்து கொள்க. இரண்டு பூசணிப்பழத்தை எடுத்துச் சாறெடுத்துக் கொள்க. திப்பிலியைக் காயவைத்து நெய்யில் வறுத்துச் சேர்க்க. பால் 1.3 லி. எடுத்து அதில் சர்க்கரையைக் கலந்து பாகுபோல் காய்ச்சிக் கொள்க.

*சேர்த்திடவே ராயபுரிச் சர்க்கரையும் வீசை*
*திரமான பால்சாற்றில் கரைத்துக் கொண்டு*
*வார்த்திட்டு சட்டிதனை அடுப்பி லேற்றி*
*மயமாகக் காய்ச்சிடுவாய் பாகு போலே*

*விற்றான பதங்கண்டு இறக்கி வைத்து*
*விதமான சூரணத்தை மேலே தூவி*
*பார்த்திட்டு துளாவிநெய் உழக்கு விட்டுப்*
*பண்பாக லேகியத்தைக் கழஞ்சு கொள்ளே!* 570

பாகு பக்குவமானவுடன் மேற்கூறப்பட்ட சூரணத்தை தூவி 325 மி.லி. நெய்யை ஊற்றிக் கிண்டி இளக பதத்துடன் இறக்கிக் கொள்க.

*கொள்ளவே அந்திசந்தி தீரும் நோய்கேள்*
*குணமாகும் பேதியறு மேக மெல்லாம்*
*தள்ளுகின்ற பித்தமுடன் சோகை பாண்டு*
*தவறிவிழும் பிரமியமுட னிருமல் தீரும்*
*மெல்லவே சுவாசமுடன் காசந் தேமல்*
*மிகுந்ததொரு திமிர்த்தினவு குட்ட மெல்லாம்*
*வள்ளலே மாறாமல் லேகியத்தைக் கொண்டால்*
*வளமாகப் பத்தியத்தை மருவிக் கேளே!* 571

காலை, மாலை உட்கொள்ள பேதி, மேகம், பித்தம், சோகை, பாண்டு, பிரமியம், இருமல், சுவாசம், காசம், தேமல், தினவு, குட்டம், ஆகிய நோய்கள் தீரும். பொதுவான பத்தியத்தைக் கடைபிடிக்க வேண்டும்.

*மருவாதே நல்லெண்ணை அகத்திக் கீரை*
*மைந்தனே கொள்ளவரை கோழி பன்றி*
*உருவாரை பாவற்காய் தேங்காய் சுண்டை*
*உளுந்துதட்டை மொச்சையுடன் கொம்மட் டிக்காய்*
*பெருகியதோர் சுரைக்காயும் மிவைகள் தள்ளிப்*
*பெண்மயக்க மில்லாமல் கொண்டா யானால்*
*வருகிறதோர் வியாதியெல்லா மாண்டு போகும்*
*மகத்தான கூழ்பாண்டக் கிருதங் கொள்ளே!* 572

நல்லெண்ணெய், அகத்திக்கீரை, கொள், அவரை, கோழி, பன்றி, ஆரைமீன், பாகற்காய், தேங்காய், சுண்டை, உளுந்து, தட்டை, மொச்சை, கொம்மட்டிக்காய், சுரைக்காய் ஆகிய உணவுப் பொருட்களை நீக்கி பெண்போகம் தள்ள வேண்டும். இவ்வாறிருக்க பல நோய்கள் தீரும்.

## தாளிசபத்திரி சூரணம்

*கொள்ளுதற்குத் தாளிசபத் திரியைக் கேளு*
*கோஷ்டமிலா மிச்சமேல மக்கிரா காரம்*
*தள்ளாதே யதிமதுரஞ் சாதிக் காயும்*
*தக்கோலஞ் சிவதைநா கணமும் மல்லி*
*விள்ளாத கிராம்புசிறு தேக்குத் தான்றி*
*மிகுந்ததொரு கடுக்காயும் கூகை நீறும்*
*துள்ளுகின்ற நெற்பொரியு மிளகு முத்தந்*
*தொல்லைநெல்லிக் காய்லவங்கப் பத்திரியு மாமே!* 573

கோட்டம், இலாமிச்சம், ஏலம், அக்கிராகாரம், அதிமதுரம், சாதிக்காய், தக்கோலம், சிவதை, நாகணம், மல்லி, கிராம்பு, சிறுதேக்கு, தான்றி, கடுக்காய், கூகைநீறு, நெற்பொரி, மிளகு, கோரைக்கிழங்கு, நெல்லிக்காய், இலவங்கப் பத்திரி எடுக்க.

*பத்திரியுந் திப்பிலிநன் னாரி வேரும்*
*பருத்திவிரைப் பருப்புடன் சீரகமுஞ் சேர்த்து*
*சுத்தமாய் வகைக்குரெண்டு விராகன் வாங்கி*
*துலங்குதா ளிசபத்திரி விராக னாலு*
*மெத்தவே இளவறுப்பாய் வறுத்துக் கொண்டு*
*மிறாமற் சூரணித்து வடித்துக் கொண்டு*
*குற்றமிலாச் சீனிபலம் நாலு சேர்த்துக்*
*கொடுத்துவர வெருகடியிற் குணங்க ளாமே!* 574

திப்பிலி, நன்னாரிவேர், பருத்தி விதைப் பருப்பு, சீரகம், இவற்றை வகைக்கு 8 கி. எடுத்துக் கொள்க. தாளிசபத்திரி 20 கி. எடுத்து இளவறுப்பாய் வறுத்துச் சூரணம் செய்து கொள்க. 140 கி. சர்க்கரையைச் சேர்த்துக் கொள்க.

*ஆகுமே நோய்தீரும் வகையைக் கேளு*
*அடர்ந்தவிஷ பாகங்கா மாலை சோகை*
*போகுமே வயிற்றுவலி அரோசி யங்கள்*
*பொல்லாத குன்மமெட்டுங் கிராணி யாறும்*
*தாகமே கிறுப்புபெரும் பாடு பித்தந்*
*தவறாநெஞ் செரிப்புவுளை மாந்தை ஈளை*

*மேகமா யிருந்ததொரு வியாதி யெல்லாம்*
*ஏகுமே பத்தியந்தா னிச்சை மாமே!* 575

அதில் ஐந்து விரலளவு கொடுக்க அடர்ந்த விட பாகங்கள், காமாலை, சோகை, வயிற்றுவலி, அரோசிகங்கள், எட்டுவகைக் குன்மம், ஆறுவகைக் கிராணி, தாகம், கிறுகிறுப்பு, பெரும்பாடு, பித்தம், நெஞ்செரிவு, உளைமாந்தை, ஈளை, மேகநோய்கள் ஆகிய நோய்கள் தீரும். இச்சாபத்தியத்தைக் கைக்கொள்ள வேண்டும்.

## குளிர்சுர மருந்து

*இச்சையாங் குளிர்சுரம்போந் தும்பை வேம்பு*
*இதமான முருங்கையுடன் பூவுங் கூட்டி*
*கொச்சிமாரி சமூலமுடன் வசம்பு பூடு*
*குறையாமற் சமன்கொண்டு கூடச் சேர்த்து*
*மெச்சியதோர் சிறுநீரி லரைத்துப் பின்னும்*
*மீறாமல் கரைத்துநீ யுண்பி ராகில்*
*அச்சமில்லாச் சுரந்திருங் குளிரும் போகும்*
*அப்பனே யுண்மை காலத்திற் கொள்ளே!* 576

தும்பை, வேம்பு, முருங்கைப்பூ, மஞ்சள் சமூலத்துடன் வசம்பு இவற்றைச் சமன் சேர்த்துச் சிறுநீரில் அரைத்துக் கலந்து உட்கொள்ள காய்ச்சல், குளிர்தீரும்.

## மூலம் தீர

*கால மறித லிடமறிதல்*
*கல்னூல் கற்ற பண்டிதரே*
*ஏல மதுரஞ் சீரகமு*
*மிலாமிச் சீன மிளகோமம்*
*மூல நெல்லி திரிகடுகு*
*முத்தக் காசு நிலவாகை*
*ஆலம் போன்ற விழிமட்வீர்*
*அமுத்தா ரண்டி னாரிடையே!* 577

ஏலம், அதிமதுரம், சீரகம், இலாமிச்சம், சீனாக்காரம், மிளகு, ஓமம், நெல்லி, திரிகடுகு எனும் சுக்கு, மிளகு, திப்பிலி,

கோரைக்கிழங்கு, நிலவாகை, ஆலம் ஆகியவற்றை வகைக்குச் சமஎடை எடுத்துக் கொள்க.

*எடைதான் சேரு சிவதையுடன்*
*ஓம மூன்று ஈராறு*
*வடிதூ ளாக்கி வெருகடிதான்*
*மதுதேன் தன்னில் கொள்வீரால்*
*விடுமே உந்தி மலக்கட்டு*
*மீண்டுஞ் சீத கிருமியுடன்*
*தொடுமே மேக நீரடைப்பு*
*துன்மாங் கிஷமுந் துலைந்திடுமே!* 578

சிவதை, ஓமம் இவற்றையும் அதே அளவெடுத்து சூரணித்துக்கொள்க. அதனை ஐந்து விரலளவு எடுத்துத் தேனில் கலந்து உட்கொள்ள மலக்கட்டு, சீதம், கிருமி, மேகம், நீரடைப்பு, துன்மாங்கிஷம் தீரும்.

*துலையு மூலஞ் சொறிகுட்டம்*
*சுவாச காசம் நெஞ்சுவலி*
*அலையுஞ் சோகை நீர்கனப்பு*
*அண்ட வாய்வு அழல்வாதம்*
*மலைபோல் கனத்த உடம்புவற்றும்*
*வச்சிர காய மாக்கிவைக்கும்*
*கலைநூ லாய்ந்த பொதிகைமுனி*
*கைக்கண் டறிந்த முறைகொள்ளே!* 579

மூலம், சொறி, குட்டம், சுவாசகாசம், நெஞ்சுவலி, சோகை, நீர் கனப்பு, அண்டவாய்வு, அழல்வாதம் ஆகிய நோய்கள் நீங்கும். உடலைக் கச்சிதமாக்கும்; வச்சிரம் போல பலமுள்ள தாகச் செய்யும் என்று நூலாய்ந்த வல்லோர் கூறியுள்ளனர்.

**பரங்கிப்பட்டைப் பதங்கம்**

*கொள்ளவே இன்னமொரு பதங்கங் கேளு*
*கூட்டுப் பரங்கிப்பட்டை பிறப்பின் மூலந்*
*தள்ளாத சிவன்வேம்பு சித்திர மூலஞ்*
*சங்கம்வேர் சமனாக வேக வைத்து*

*வில்ளாமல் பானைவாய் வேடு கட்டி*
*மேலான குருவைநெல் கோதும்பை மாவுந்*
*துள்ளவே மாவிடித்துச் சமனாய்ச் சேர்த்து*
*துடியாகப் பரங்கிமாச் சமனாய்ச் சேரே!* 580

பரங்கிப்பட்டை வேர், பிரப்பன் கிழங்கு, சிவனார் வேம்பு, சித்திரமூலம், சங்கம்வேர் இவற்றைச் சமனாய் எடுத்துப் பானையில் போட்டுக் கொள்க. வேடுகட்டி வேகவைத்துக் கொள்க. வெந்த சூரணத்தை எடுத்து வைத்துக் கொள்க. குருவை நெல், கோதுமை இடித்து மாவாக்கிச் சேர்த்துக் கொள்க.

*சேர்த்தந்த மாவுடனே பனையின் வெல்லம்*
*சேர்த்திடுவாய் சாதிலிங்கம் ரசச் செந்தூரம்*
*மாற்றுப்பழச் சாற்றில்முலைப் பாலில் சுற்றி*
*வைத்தெடுத்து மாவுக்குள் நடுவே வைத்து*
*நீட்டிடுவாய் புட்டுபோ லவித்துக் கொண்டு*
*நிசமாக வெருகடிதான் மொண்டு கொண்டு*
*வாத்திட்டுக் குடித்திடுவாய் கிஷாயந் தன்னில்*
*மார்புமேல் பிடிப்பெல்லாம் வாங்கிக் கொள்ளு!* 581

மாவுடன் பனை வெல்லத்தைச் சேர்த்துக் கொள்க. சாதிலிங்கம் ரசச் செந்தூரத்தைப் பழச்சாற்றில், தாய்ப்பாலில் அரைத்தெடுத்து மாவுக்குள் நடுவில் வைத்து புட்டுப் போல் வேக வைத்துக் கொள்க. வெந்த பிறகு மூவிரலளவு எடுத்துக் குடிநீரில் கலந்து கொடுக்க மார்பு பிடிப்பு தீரும்.

## மலக்கட்டுக்குக் குடிநீர்

*கொன்னப் பட்டை கொத்துமல்லி*
*குமரி சங்கு கடுக்காயும்*
*முன்னுங் கடுகு ரோகணியு*
*மொக்கக் கிஷாயங் கொள்வீரால்*
*கன்னி கிடந்த மலங்களெல்லாங்*
*கழன்று போக வகைசொன்னோம்*
*விண்ணில் கோடி வெந்தறுரு*
*வெப்புங் குளிருந்தான்போச்சே!* 582

கொன்றைப் பட்டை, கொத்துமல்லி, குமரி, சங்கு, கடுக்காய், கடுகுரோகணி இவற்றை வகைக்குச் சம அளவெடுத்துக் குடிநீராக்கி அளவறிந்து உட்கொள்ள பழைய மலங்கள் நீங்கும். காய்ச்சல் குளிர் தீரும்.

### கர்ப்பத்துக்கு வீழியெண்ணெய்

*போச்சப்பா விழியெண்ணெய் தன்னைக் கேளு*
*புகழான விளக்கெண்ணெய் படிதா னொன்று*
*வாச்சப்பா நறுநெய்யும் படிதா னொன்று*
*வாசமாய் விழிச்சார் படியி ரண்டு*
*கூச்சமற இவையெல்லா மொன்றாய்ச் சேர்த்து*
*கூட்டிடுவாய் மஞ்சணாத்தி வேரு தானும்*
*பாச்சிடுவாய் திரிகடுகு திரிப லாதி*
*பலங்காலாய் சேர்த்தெண்ணெய் வடித்துக் கொள்ளே! 583*

விளக்கெண்ணெய், நெய் இவற்றை வகைக்கு 1.3 லி., வீழிச்சாறு 2.6 லி. எடுத்து அனைத்தையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கலந்து கொள்க. நுணா வேர், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவை அனைத்தையும் வகைக்கு 9 கி. எடுத்துப் பொடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சிக் கொள்க.

*கொள்ளவே கெர்ப்பவா யகலும் னாடி*
*கொடிசுற்றில் கிருமியோடு குளிர்ச்சி சூடு*
*கள்ளமுற்ற சதைமூடல் திருட்டிப் பேய்கள்*
*காணாதே ஒடிப்போம் கருவே தங்கும்*
*பள்ளமாய் குழிவிழுந்த கிடங்கும் நேராய்*
*பங்கயமாம் மலர்பூத்து யமுர்தம் விசும்*
*உள்ளத்தில் குறிகோணல் நிமிரும் பாரு*
*உயர்பிள்ளை யுறும்வயசு அறுநூறு முற்றே! 584*

பதமாகக் காய்ச்சி பக்குவத்தில் வடித்துக் கொள்க. அதனை அளவறிந்து கொடுக்க கர்ப்பவாய் பெரிதாகும். கிருமி, குளிர்ச்சி, வெப்பம், சதை அதிகமாய் மூடுதல், திருஷ்டி, பேய்கள் இவை யாவும் நீங்கும். கருப்பையின் நோய் தீரும். உள்ளத்தின் மாசு நீங்கும். பிறக்கும் குழந்தையின் ஆயுள் அதிகமாகும்.

ஞூ

## இந்திய மருத்துவம் ஓமியோபதித் துறை நூலகங்களில் விற்பனையாகும் நூல்களின் விலை விவரப்பட்டியல்

| வ. எண். | நூல்களின் பெயர் | எடை (கிராமில்) | விலை ரூ. பை. |
|---|---|---|---|
| 1. | குணபாடம் - மூலிகை | 800 | 300.00 |
| 2. | குணபாடம் - தாது சீவ வகுப்பு | 800 | 250.00 |
| 3. | நோய்களுக்குச் சித்த பரிகாரம் - பாகம் 1 | 700 | 200.00 |
| 4. | நோய்களுக்குச் சித்த பரிகாரம் - பாகம் 2 | 200 | 25.00 |
| 5. | நோய் நாடல் நோய் முதனாடல் திரட்டு - பாகம் 1 | 500 | 200.00 |
| 6. | நோய் நாடல் நோய் முதனாடல் திரட்டு - பாகம் 2 | 800 | 250.00 |
| 7. | சிறப்பு மருத்துவம் | 500 | 220.00 |
| 8. | மகளிர் மருத்துவம் | 450 | 160.00 |
| 9. | நோயில்லா நெறி | 500 | 67.20 |
| 10. | சட்டம் சார்ந்த மருத்துவமும் நஞ்சு நூலும் | 800 | 250.00 |
| 11. | சித்த வைத்தியத் திரட்டு | 500 | 150.00 |
| 12. | சூல் மருத்துவம் | 450 | 150.00 |
| 13. | அறுவை மருத்துவம் | 500 | 150.00 |
| 14. | குழந்தை மருத்துவம் | 800 | 210.00 |
| 15. | உடற்கூறு | 1000 | 400.00 |
| 16. | நஞ்சு முறிவு நூல் | 300 | 100.00 |
| 17. | உடல் தத்துவம் | 450 | 75.15 |
| 18. | சித்த மருத்துவம் - பொது | 800 | 250.00 |
| 19. | யூகி வைத்திய சிந்தாமணி | 500 | 150.00 |
| 20. | தேரையர் யமக வெண்பா - பாகம் 1 | 300 | 80.00 |
| 21. | கடுக்காய் வல்லாரையின் தனி மாண்பு | 500 | 29.00 |
| 22. | நல்வாழ்விற்கு ஓர் நல் மருத்துவம் | 50 | 3.00 |
| 23. | பிணி உடல் தேர்வக ஆய்வு முறைகள் | 50 | 30.30 |

| வ. எண். | நூல்களின் பெயர் | எடை (கிராமில்) | விலை ரூ. பை. |
|---|---|---|---|
| 24. | தோற்றக் கிராம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும் | 500 | |
| 25. | சித்த மருத்துவாங்கச் சுருக்கம் | 800 | 300.00 |
| | **Siddha Medical Books in English** | | |
| 1. | A Compendium of Siddha Doctrine | 500 | 200.00 |
| 2. | Introduction to Siddha Medicine | 50 | 11.35 |
| 3. | Simple Home Remedies | 50 | 2.70 |
| 4. | Hospital Siddha Pharmacopoeia in Indian Medicine | 250 | 39.00 |
| 5. | History of Siddha Medicine | 800 | 159.00 |
| 6. | Siddha Science of Longevity and Kalpa Medicine | 250 | 25.00 |
| 7. | Siddha Toxicology | 500 | 44.00 |
| 8. | Siddha Principles of Social & Preventive Medicine | 500 | 66.00 |
| 9. | Siddha Materia Medica Mineral & Animal Kingdom | | 250.00 |
| 10. | Speciality Medicines and Treatment in Siddha | | அச்சில் |
| 11. | Therayar Maha Karisal | | அச்சில் |
| 12. | Treatment of Diseases in Siddha Part - I | | அச்சில் |
| 13. | Anuboga Vaidya Navaneetham | | அச்சில் |
| | **Siddha Medical Dictionary** | | |
| 1. | T.V. Sambasivam Pillai - Vol. I | 2500 | 623.00 |
| 2. | T.V. Sambasivam Pillai - Vol. II - Part I | 500 | 300.00 |
| 3. | T.V. Sambasivam Pillai - Vol. II - Part II | 450 | 200.00 |
| 4. | T.V. Sambasivam Pillai - Vol. III | 650 | 81.00 |
| 5. | T.V. Sambasivam Pillai - Vol. IV - Part I | 800 | 156.00 |

| வ. எண். | நூல்களின் பெயர் | எடை (கிராமில்) | விலை ரூ. பை. |
|---|---|---|---|
| 6. | T.V. Sambasivam Pillai - Vol. IV - Part II | 800 | 151.50 |
| 7. | T.V. Sambasivam Pillai - Vol. V | 1200 | 480.00 |
| | **ஆயுர்வேத நூல்கள் (தமிழில்)** | | |
| 1. | சரக சம்ஹிதை பாகம் - 1 | - | - |
| 2. | சரக சம்ஹிதை பாகம் - 2 | 1400 | 253.65 |
| 3. | சரக சம்ஹிதை பாகம் - 3 | 1700 | 380.00 |
| 4. | சுசுருத சம்ஹிதை - பாகம் - 1 | 1500 | 390.00 |
| 5. | சுசுருத சம்ஹிதை - பாகம் - 2 | 1400 | 272.00 |
| | **தமிழ் மருத்துவ நூல் வெளியீட்டு வரிசை** | | |
| 1. | கைமுறை வைத்தியம் | - | - |
| 2. | அகத்தியர் ஒடிவு முறிவு சாரி நிகண்டகராதி | 400 | 80.00 |
| 3. | பிள்ளைப்பிணி மருத்துவம் - பாகம் 1 | 500 | 78.25 |
| 4. | சித்த மருத்துவ அகராதி - பாகம் 1 | - | - |
| 5. | பிள்ளைப்பிணி மருத்துவம் - பாகம் 2 | 800 | 250.00 |
| 6. | வர்மத் தொகுப்பு | 700 | 150.00 |
| 7. | பதார்த்த குண சிந்தாமணி | 700 | 150.00 |
| 8. | சரக்கு - சுத்தி செய்முறைகள் | | 60.00 |
| 9. | மருந்து செய்முறைகள் | | அச்சில் |
| 10. | புலிப்பாணி வைத்தியம் | | 30.00 |
| 11. | நோயும் மருந்தும் | | 35.00 |
| 12. | சித்த மருத்துவ சிந்தாமணி | | அச்சில் |
| 13. | அரிய சித்த மருத்துவ முறைகள் | | 60.00 |
| 14. | மூலிகை விளக்கம் | | 60.00 |
| 15. | அகத்தியர் மருத்துவம் | | அச்சில் |
| 16. | அகத்தியர் வைத்திய சிந்தாமணி | | 80.00 |
| 17. | சித்த மருத்துவ அகராதி-பாகம் 2 (க-கௌ) | | 65.00 |
| 18. | சித்த மருத்துவ அகராதி-பாகம் 3 (ச-சௌ) | | 65.00 |

மேற்குறிப்பிடப்பட்ட நூல்களை நேரிலோ அல்லது பதிவுத் தபாலிலோ பெற்றுக் கொள்ளலாம். பதிவுத் தபாலில் புத்தகங்கள் வேண்டுவோர் புத்தகங்களின் விலையோடு தபால் கட்டணத்தையும் சேர்த்து பண விடை (எம்.ஓ.) அல்லது டி.டி. மூலம் அனுப்ப வேண்டும். வி.பி.பி.யில் அனுப்ப இயலாது. 2 கிலோவுக்கு மேல் எடையுள்ள புத்தகங்கள் தபாலில் அனுப்ப இயலாது.

**தபால் கட்டணம்**

| | | |
|---|---|---|
| முதல் 500 கிராமுக்குள் | - | ரூ. 36.00 |
| 500 கிராமுக்கு மேல் ஒவ்வொரு 50 கிராமுக்கும் | - | ரூ. 16.00 |

**பணம் அனுப்ப வேண்டிய முகவரி**

1. இயக்குநர்
   இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை
   அரும்பாக்கம், சென்னை - 600 106.
   தொலைபேசி : 044 - 2621 4844 / 26216244 / 26281563

2. முதல்வர்
   அரசினர் சித்த மருத்துவக் கல்லூரி
   பாளையங்கோட்டை
   திருநெல்வேலி - 627 002.
   தொலைபேசி : 0462 - 2572736 / 2572737 / 2572738

